ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# கூடல்மான்மியம்,
# இராமாயணத் திருப்புகழ்,
# மற்றும் கட்டுரைகள்

ஆசிரியர், உரையாசிரியர் :
திரு. நா. அப்பனையங்கார்

வெளியிட்டவர்
T.A. ஸ்ரீநிவாஸன்,
22, தமிழ்ச்சங்க வீதி,
மதுரை—1.

# கூடல்மான்மியம்

## நைமிசாரண்யம்

நைமிசாரண்யமென்னும் க்ஷேத்ரம் நிறைந்த கேள்வியையுடைய ஞானிகளுக்கு வாஸஸ்தானமாகும் தகுதியுடையது. மூவுலகத்திலும் கிடைத்தற்கரிய பேறுகளைத்தருவதும், வித்யைகளுக்கெல்லாம் உறைவிடமாயுள்ளதும், யாகங்கள் புரிவதற்கு மிகுந்த யோக்யமானதும், தவமுந் தானமுங் குடிகொண்டிருப்பதும், த்ரிமூர்த்திகளுக்கும் விருப்பத்தைச் செய்வதும் அந்த திவ்யதேசமேயாகும்.

அங்குள்ளாரனைவரும் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்பவர்கள்; அஷ்டாக்ஷர மந்த்ரத்தை உச்சரித்து அர்க்யம் கொடுப்பவர்கள்; த்வாதச ஊர்த்துவ புண்டரங்களைத் தரித்துக்கொள்ளுபவர்கள்; பாகவத கைங்கர்யத்தில் மிகவும் ஈடுபட்டவர்கள்; வறுமையும் செல்வமும், குளிரும் நெருப்பும் ஆகியவற்றையெல்லாம் ஒரே தன்மையாகக் கருதும் இயல்புடையவர்கள்.

அன்றியும் அவர்கள் இந்திரிய நிக்ரஹம் செய்தவர்கள்; காம முதலான குற்றங்களை அடியோடு தொலைக்க த்ரிதண்டத்தைக் கைக்கொண்டவர்கள்; பசிக்கனலை அவிக்கக் கமண்டலத்தில் நீரேற்றுக் கொள்ளுபவர்கள்; அஷ்டாங்கயோகசித்தி யுடையவர்கள்; தபோமஹிமையால் ஸமஸ்த பாபங்களையும் போக்கினவர்கள்; த்ரிகரணசுத்தியுடையவர்கள்; எப்பொழுதும் ஸ்ரீமந் நாராயணனுடைய சரணாரவிந்தங்களையே த்யானிப்பவர்கள்; பக்திபாரவஸ்யத்தால் ஆனந்தபாஷ்பம் சொரிய மயிர்க்கூச்செறிந்து பகவத்குணானுபவம் பண்ணுவதே காலக்ஷேபமாகக் கொண்டு மோக்ஷ சாம்ராஜ்யத்தைத் தேடும் வல்லமையுள்ளவர்கள்.

இத்தகைய தபோதனர்கள் அகலாது வதியும் அந்த மஹாரண்யம் தேவதைகளுடைய சாந்நித்யம் பெற்று விளங்குகிறது. முனிவர்கள் இடையறாது முழங்கும் வேதங்களின் ஒலியோடு அங்குள்ள கிளிகள் பழகுவதனால் அவைகளும் வேதம் ஓதுகின்றன. எங்குபார்த்தாலும்

கோவிந்தனைக் குறித்துத் தவமியற்றி வருகின்றனர். கிருத யுகாதியில் அவர்கள் அத்திருமாலை வரன்முறையாக வணங்கி அவனுடைய திருவடிகளையே தஞ்சமாகப் பற்றி இருந்தார்கள். அதனால் அவர்கள் அப்பெருமானுடைய திருவருட் கிலக்காய்ப் பெறுதற்கரிய பேறுகளைப் பெற்றுப் பெருமையடைந்தனர்.

அஃதவ்வாறாக இருமைப்பயனையும் எய்துவிக்கின்ற அந்த கெஜ தீர்த்தத்தின் கரையின் ஒரு பக்கத்தில் தோதாத்திரி என்னும் பெயர்பெற்ற பர்வதமொன்று நிலைபெற்றுத் தோன்றுகிறது. அதற்குக் கிழக்கே யானைமலை யென்று வழங்கப்படுகிற க்ஷேத்ரம் ஒன்றுள்ளது. அங்கே பெருமாள் நரஸிம்ஹ ரூபியாய் சேவை ஸாதிப்பர். ப்ரஹ்லாதாழ்வானுக்கு அனுக்ரஹிப்பதற்காக அவ்வாறு அவதரித்த பகவான், சரபத்தின் உருவத்தைக் கொண்டு தன்னை எதிர்த்துவந்த ருத்ரனை ஏழுலகங்களும் நடுங்குமாறு போரிலே தொலைத்து வெற்றிகொண்டு அவ்விடத்தில் வீற்றிருந் தருளுகிறான்..

அதுநிற்க, விஷ்ணுதீர்த்தம் என்னும் ஒரு விசேஷமான புண்ணிய தீர்த்தம் அதே ஸ்தலத்தில் அமைந்துள்ளதாகும். அந்நீரில் ஸ்நானம் செய்து, நரஸிம்ஹ ரூபியான நாராயணனிடத்திலே எப்பொழுதும் பக்தி செலுத்துபவர்களான வாலகில்லியர்கள் அநேகர் அங்கு வாஸம் செய்கிறார்கள். அன்றியும் மனதின்கண் மாசற்று, இயமநியமாதி அஷ்டாங்க யோகங்களையும் முயன்றவர்களாகிய அந்த வாலகில்லிய முனிவர்கள் மதுரையில் அஷ்டாங்க விமானத்தில் அமர்ந்தருளும் மாயவனுடைய அனுக்ரஹத்தால் அணிமாதி எண்வகைச் சித்திகளும் எளிதிற் கைவந்தவர்களாயினர். இவ்வளவு விஷயங்களும் உங்களுக்கு நன்றாக இயம்பினேன். இன்னும், நால்வகைப்பட்ட யுகங்களுள்ளும் இரண்டாவதான திரேதாயுகத்தில் நிகழ்ந்ததான ஓர் அதிசயம் உளது; அதனையும் கேட்பீராக" என முனிவர்களை நோக்கி மொழிந்து வ்யாசர் மேலும் சொல்லத் தொடங்கினார்.

பிருது என்னும் பெயரையுடைய பூபதியொருவன் பூர்வ காலத்தில் அரசு புரிந்து வந்தான். அவன் உலகமெல்லாந் தனிக்கோல் செலுத்தித் தன்னை யொப்பாரும் மிக்காருமின்றி விளங்கினன். அதுவேயுமன்றி அவன் அறிவினாலும் ஆற்றலினாலும் யாவரினும் மேம்பட்டவனானான். அவனுடைய மனைவி மாதவனையே மனதில் நினைத்துத் திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தை அனவரதமும் ஜெபித்தாள் அப்போது அஷ்டாங்க விமானத்தை

**This book is published with the financial assistance of the TIRUMALA-TIRUPATI DEVASTHANAMS under their scheme "Aid to publish religious books".**


First Edition-August 2000
Pages 14 + 202 = 216
Price : Rs. 80/-
No. of Copies : 1000

Title : Koodal Maanmiyam,
Ramayana Thiruppugazh and other articles

Subject : Religious topics.

Author : **T.N. Appan Iyengar**

Paper :

Type :

Binding :

Copies available from **T.A. Srinivasan,**
22, Tamil Sangam Road,
Madurai-625 001.

Printed by : N. DHARMARAJAN
for MODERN TYPES,
# 20, Triplicane High Road, Triplicane,
Chenai - 600 005. Phone : 8583637, 8446132

# கூடல்மான்மியம்

யாககுண்டங்கள் தோன்றுகிற அவ்வனத்தில் ஹோமாக்னியின் புகை எல்லாவிடங்களிலும் வ்யாபித்து மேக படலங்களைப்போல் தோன்றுகிறது.

அம் முனிவராச்ரமங்களுக்கு அதிதிகளாய் வருவோர் காமதேனுவினால் சத்கரிக்கப்படுகிறார்கள். அவ்விடத்தில் விளையாடும் பருவமுள்ள சிறுபிள்ளைகளுங்கூடக் கையிலே தருப்பையும் வாயிலே மந்திரோச் சாரணமுமாகத் தங்கள் சக்தி விசேஷத்தால் விரோதிகளை அழிக்கும் தன்மைவாய்ந்து விளங்குகிறார்கள். அந்த ருஷிகளின் பத்னிகள் தங்கள் பாதிவ்ருத்யத்தின் மஹிமையால் ஜலத்தையுங் கூடக் குடத்தினால் முகந்துகொள்ளாமல் கையினாலேயே திரட்டி எடுக்கும் திறமையுடையவர் களாயுள்ளார்கள்.

## வியாசரை முனிவர்கள் வினாவுதல்

இத்தன்மைத்தான அந்த நைமிசாரண்யத்தில் சரஸ்வதி நதி தீரத்தில் தவம்புரிந்தவர்களாகிய சௌனகர் முதலான ரிஷிஸ்ரேஷ்டர்கள் எல்லோரும் சேர்ந்து பரமபதத்தை யடையும் விருப்பமுடையவர்களாய்ப் பஞ்சஸம்ஸ்காராதி வ்ரத நியமங்களோடு கூடிய தீக்ஷையை மேற்கொண்டு தீர்க்கசத்திர யாகம் செய்தார்கள்.

அவ்வாறு யாகம் செய்தபொழுது அவர்கள் மஹாத்மாவான வேதவ்யாஸ முனிவரை சாஸ்த்ரோக்தமான முறையில் வழிபட்டு "பிறப்பும் இறப்பும் இல்லாதவனும், தனக்கு ஒப்புயர்வில்லாதவனுமான ஸ்ரீமந்நாராயணனுடைய அம்சமாய், உலகமுய்யும் பொருட்டு, பராசரமுனிவருக்கு சத்யவதியின் கர்ப்பத்தில் தோன்றினவரே! ஸகலர்க்கும் ஹிதத்தையே நாடுபவரே! ரிஷிஸ்ரேஷ்டரே! குணக் கடலாயுள்ளவரே! ஸர்வஜ்ஞரே! ஸத்யஸந்தரே! தன்னுயிர் போல மன்னுயிரையும் மதிக்கும் கருணைக்கடலானவரே! நான்குவேதங்களிலும் தர்ம சாஸ்த்ரங்களிலும் வல்லவரே! தேவரீராலேயே நாங்கள் மோக்ஷபுருஷார்த்தத்தை யடையும் ஸகலமான வழிகளின் ப்ரயோஜனத்தையும் சொல்லக்கேட்டு க்ருதார்த்தராவோம்.

ஆலயமாகக் கொண்ட எம்பெருமானுடைய க்ருபாகடாக்ஷத்தால் எண்மர் புதல்வர்கள் அவளிடம் உதித்தனர்.

அப்பால் தக்க பருவம் நிரம்பியபொழுது, அவன் தன் புத்திரர்களுக்கும் அம்மந்திரத்தை உபதேசித்து அதனையே ஓதிவரும்படி ஆக்ஞாபித்தான். அதன்பிறகு அரசனுந் தேவியும் அரசாளுரிமையைச் சிறுவர்களிடம் விடுத்து இம் மண்ணுலகை நீங்கிப் புறப்பட்டனர். உரோகிணியும் சந்திரனும் போல ஒருவர்க்கொருவர் நேசமுடைய அவர்கள், அருமைவாய்ந்து அழகினால் இணையற்றதான விமானமொன்றில் ஏறி விசும்பாறாகச் சென்றார்கள். தேவர்களும், சித்தர்களும், சாத்யர்களும், கந்தர்வர்களும், யக்ஷர்களும், கின்னரர்களும், நாகர்களும் முதலானாருடைய நானாவிதமான லோகங்களுக்கெல்லாம் ஒன்றின்பின் ஒன்றாக அவர்கள் போனார்கள். அதன்பின்பு ஸப்தரிஷி மண்டலங்களையும் கடந்து அப்பாற் சென்றனர். மறுபடியும் அவர்கள், ஆகாசத்தில் சஞ்சரிப்பவர்களான சாரணர்களுடைய உலகமும், பூதகணங்கள் வசிக்கும் உலகமும், வித்யாதரலோகமும், கோலோகமும் முதலாகவுள்ள இடவிசேஷங்களைக் காணவேண்டுமென்னும் ஆசை இழுத்துச் செல்ல, அங்கேயே போய்ப் பார்த்து மீளவும் திரும்பினார்கள்.

இவ்வாறு அவர்கள் அவ்வவ் விடங்களிலுள்ள அனுபவங்களை யெல்லாம் ஐம்புலன்களும் ஆரத்துய்த்து வருங்காலத்தில், ஒரு நாள் வையை நதியின் விசாலமான கரையின் மேலாக அந்தரமார்க்கமாய் விமானம் செல்லலுற்றது. அப்பொழுது, கடம்பவன மத்தியில் திருக்கோயில் கொண்டுள்ள ஸ்ரீவைகுண்ட நிகேதனனான ஸர்வேசுவரனுடைய அஷ்டாங்க விமானத்தின் மீது அதன் சாயை படிந்தது. உடனே அவ்வெம்பெருமானுடைய அடியார் குழாங்களெல்லாம் அதனைச் செல்லவொட்டாமல் தடுத்தனர்.

அங்ஙனம் தடை செய்யப்பட்ட அவ்விமானம் விசும்பினின்றும் இழிந்து கீழே சுழன்று விழுந்தது. அதுகண்டு அரசன் மனம் கவலைக்கடலில் ஆழ்ந்தது. அப்போது செய்வது இன்னதென்று தெரியாமல் அவன் அறிவுகலங்கினான். ஆயினும் அவன் ஒருவாறு உள்ளந்தெளிந்து தான் ஏதோ ஒரு அபராதம் புரிந்துவிட்டதாக நினைத்து வருந்திய காலத்தில் அங்குள்ள விஷ்ணுபாரிஷதர்களுள் ஒருவர் அரசனையணுகி "ஓ வேந்தே! நீ சார்ங்கபாணியான எம்பெருமானிடம் அபசாரப்பட்டனை. அப்பாதகம் இன்னதென்று அறிய முடியாத காரணத்தினாலேயே நீ இதுபொழுது

# பொருளடக்கம்

# கூடல்மான்மியம்

அன்றியும், காவேரி நதிக்கு தென் பார்ஸ்வத்தில் ஏழு யோஜனை தூரத்தில் ஸப்த லோகங்களிலும் உள்ளவர்களால் துதிக்கப்படுகிற ருஷபாசலமென்று ஒரு விசாலமான மலை இருக்கிறது. அது, புராணங்களாலும் இதிஹாஸங்களாலும் போற்றப்படுவனவாய், தன்கண் வாழ்வார்க்கு போக மோக்ஷங்களைக்கொடுக்கும் புண்ணிய பூமிகள் பலவற்றுள்ளும் சிறந்தது. அந்த ஸ்தலத்தில் செங்கமல மலர்ச் செல்வியாகிய ஸ்ரீதேவியோடு பகவான் நித்யவாஸம் புரிந்தருளுகிறான். அவனுடைய பாதாரவிந்தங்களில் அணியப்பெற்றுள்ள நூபுரங்களினின்று ஒரு மஹாநதி உற்பத்தியாகிறது. அதனால் அது எல்லா நதிகளிலும் ஏற்றமுடையது; மிகவும் பரிசுத்தமானது; தன்னிடத்தில் மூழ்கினவர்களுடைய ஸமஸ்த பாதகங்களையும் போக்கவல்லது. அனைவர்க்கும் அவரவர்களுடைய அபீஷ்டத்தை நிறைவேற்றுவிக்கும் ஆற்றலுடையது. அல்லாமலும் அது தன்னிடத்திலே படிந்த காற்று வீசுகின்ற ப்ரதேசங்களிலும் வசிப்பவர்களைப் பரம ஸாத்விகர்களாக்கி, விஷ்ணுபக்தியை அவர்கள் நெஞ்சில் தலையெடுக்கச் செய்கிறது. அவ்வாறானால் அந்த நதியை அணித்தாயுள்ள திவ்ய தேஸவாஸிகளுடைய பாக்யத்தை என்னென்று சொல்வது?

அத்தகைய பெருமைவாய்ந்த சிலம்பாறென்னும் நூபுரகெங்கைக்குத் தெற்கே ஒருயோஜனை தூரத்திற்கப்பால் மிகவும் இனிமையான வாஸனை வீசுகின்ற கடம்பவனமென்று ஒரு க்ஷேத்ரம் உண்டு. அதனிடையே க்ருதமாலையென்னும் புண்ணிய நதியொன்று பொருந்தியுள்ளது. அந்நதி தன் நீர்ப்பெருக்கால் எங்கும் வ்யாபித்து எல்லார்க்கும் எம்பெருமான் பக்கல் பக்தியை வளரச் செய்கிறது. தன்னை நினைத்தவர்களுக்கும் தரிசித்தவர்களுக்குங் கூட, அது இம்மையினும் மறுமையினும் இன்பமளிக்கும் இயல்புடையதாகின்றது.

அந்த க்ருதமாலா நதிக்குத் தெற்காக அமராவதிக்கு நிகராகச் சொல்லத் தகுவதும், போகங்களுக்கும் புண்ணியங்கட்கும் புகலிடமாயிருப்பதும், சந்த்ரகுலத் தோன்றலாகிய புரூரவ சக்ரவர்த்தியினால் மனுநெறி வழுவாமல்

கிலேசமுறுகின்றாய். ஆதலால் அழகுபொருந்திய கூடல் நகரிலுள்ள சுந்தரராஜப் பெருமான் திருவடிகளில் நீ நின் தேவியோடும் சரணாகதி பண்ணி அபராத க்ஷமாபணம் செய்துகொள்ளுவாயாக" என ஆக்ஞாபித்து முன்னே நடந்து சென்றார். அரசனும் அதுகேட்டு மிகவும் மனங்களித்து அவ்வெம்பெருமானை வாழ்த்துவானாயினான்.

**தேவதேவேசநின் திருவடிக்கமலமே**
**நாவினால்முறை முறைநமவெனப் பணிகுவேன்**
**ஆவலால் அழகிய அடிகளால் அடிகள்மார்**
**பாவராசிகளெலாம் விடுபடப்படுவரால்**

**காமமெண் கோபம்வெம்பசியெனுங்கனல்சுடத்**
**தாம்மயங்குயிர்களுக்கு உறுதிசேர்தஞ்சம்நீ**
**ஆம்அதன்தொகுதிகட்குஆதியோடந்தநீ**
**நாமநன்பகுதிநீ புருடன்நீ நாரணா**

"தேவாதி தேவரான திருமாலே! உம்முடைய திருவடிப் போதுகளைப் பலமுறை நாவினால் வாழ்த்தி நமஸ்கரிக்கின்றேன். தேவரீருடைய பாதஸேவையினால் பாகவதகோடிகளெல்லாம் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள். காமம் முதலான குற்றங்களால் அறிவுகலங்கின உயிர்கள் நல்வழிப்படுவதற்கு நீர் உறுதியான பற்றுக்கோடாய் நிற்கிறீர். உலகின் கண்ணுள்ள சராசரப் பொருள்களுக்கெல்லாம் ஆதியும் அந்தமுமாய் இருப்பவரும் ப்ரக்ருதி புருஷதத்வங்களா யுள்ளவரும் நீரேயாவீர்" என்று பிருதுச் சக்ரவர்த்தி ஸ்தோத்ரம் செய்துகொண்டு, தன் பத்தினியுடன் விமானத்தினின்றும் வெளிப்போந்து ஸ்ரீமந்நாராயணனுடைய ஸந்நிதியுள்ள விடத்தை நாலாபக்கங்களிலும் தேடித் திரிந்தான்.

அப்போது வைகை நதிக்கரையின் ஒருபக்கத்தே அஷ்டாங்க விமானம் அவன் கண்ணுக்குப் புலப்பட்டது. ப்ருஹ்மா முதலான தேவ கணங்களும் திக்பாலகர்களும், அஷ்டவசுக்களும், சனகர் சனந்தனர் முதலான அருந்தவர்களும் வழிபட்டு வணங்காநின்ற அந்த அழகிய விமானத்தை அரசன் தன்விழிகளாற் கண்டவுடனே விம்மிதனானான். அழிவில்லாத பெரிய அகமகிழ்ச்சி கொண்ட அவன் உடனே தனது எட்டு உறுப்பும் நிலந்தோய விழுந்து நமஸ்கரித்தான். பின்பு எழுந்திருந்து தன் கைகளைக் கூப்பியவாறே ஆனந்தத்தால் கூத்தாடினான்.

# கூடல்மான்மியம்

செங்கோல் செலுத்தப்பெற்றதும், கூடலென்னும் திருநாமத்தைக் கொண்டு விளங்குவதுமான ஒரு திருப்பதியுண்டு. அங்கே எம்பெருமான் இனிதாக எழுந்தருளியிருக்கிறான்; என்று இவ்வகையாகப் பூர்வத்தில் எங்களுக்கு ஸங்க்ரஹமாகத் திருவாய் மலர்ந்தருளினீர். தேவரீரிடத்தில் கேட்டதே அதைப்பற்றி மேலும் விரிவாய்த் தெரிந்துகொள்ள ஆவலையுண்டாக்குகின்றது. ஆகையால், ஓ தபோநிதியே! மஹா விஷ்ணுவுக்குச் சமானமான க்ருபையுடையவரே! தேவரீருடைய திருவுள்ளத்திற் கிசைந்ததாகத் தோற்றினால், அவற்றையெல்லாம் அடியோங்கள் அறிந்துய்யுமாறு இப்போது ஸவிஸ்தாரமாகச் சொல்லியருளவேண்டும். அன்றியும் அவ்வாறு அருளிச்செய்வதற்கு தேவரீரே யோக்யதையுள்ளவரென்பதையும் அடியோங்களறிந்துள்ளோம் என்று இவ்வண்ணமாகச் சௌனகர் முதலான ரிஷிகளெல்லாருங் கூடிப் பராசர புத்ரரான வ்யாஸரிடத்தில் மிகுந்த வினயத்தோடு வேண்டிக்கொண்டார்கள்.

## வியாசர் முனிவர்களுக்கு கூறுதல்

இந்தப்ரகாரமாக முனிவர்குழாங்கள் ஒன்றுசேர்ந்து ப்ரார்த்தித்துக் கொண்டதைச் செவியேற்றிருந்த மஹரிஷியான வேதவ்யாஸர் ஸ்தல வைபவத்தை மனனம் பண்ணி, பிறகு பிராட்டிமணவாளனாக எம்பெருமானுடைய தேனே மலருந் திருவடித்தாமரைகளை மனஸ்ஸிலே த்யானித்து, நிறைந்த கருணையோடு பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்.

"ஓ முனிபுங்கவர்களே! உலகமுழுவதையும் புனிதமுடையதாகச் செய்கின்ற உங்களால் விரும்பிக் கேட்கப்பட்ட, இந்த உத்தமமான விஷயத்தைக் குறித்து நான் அளவில்லாத ஆநந்தமடைகிறேன். மூன்றுலகங்களையும் இரண்டடியாலளந்த முகுந்தனுடைய ஸாந்நித்யம் பெற்று விளங்குகிற அந்த ஸ்தலத்தைத் தரிசித்து வாழ்த்தினவர்களுக்குக் கைவந்துதவாத பொருள் ஒன்றுமில்லை. அவனுடைய புகழையே எப்பொழுதும் புகலக் கேட்டவர்களுக்கு ஸகல பாவங்களும் ஒழிந்து

அதுகண்டு அப்பெருமான் அவனிடம் கருணைகூர்ந்து விமானத் தினின்றும் வெளிப்பட்டு, மஹாபாக்யசாலியான அந்த மன்னவன் கண்முன்பே தர்சனீயனாய் விளங்கினான். விளங்கினவன் சக்ரவர்த்தியை நோக்கி “ஹே மஹாராஜனே! கேட்பாயாக; இந்த மதுரா நகரத்தினிடத்திலே எழுந்தருளியிருப்பதற்கு நாம் மிகுதியும் திருவுள்ளம் பற்றினோம்; இந்த நிலவுலகத்தில் வேறெந்த ஸ்தலத்திலும் ரிஷபாசலத்திலுங்கூட, வாஸமாயிருப்பதற்கு நாம் அவ்வளவாக மனங்கொள்ளவில்லை. ஆதலால் ஆசிருதர்களிடத்தில் அனுக்ரஹத்தோடு இந்த திவ்யதேசத்தில் திருக்கோயில் கொண்டிருக்கிற நாம் உலகமுள்ளளவும் அதைவிட்டு ஓரிடத்தும் அகல்வதில்லை; ஓ வேந்தனே! நீ ஒரேமனதாக எம்மிடம் அன்பு செலுத்தி உன்னுடைய உத்க்ருஷ்டமான த்ரவ்யங்களையுங்கொண்டு எமக்குப் பல திருப்பணிகளைச் செய்வாயாக; அன்றியும் சாஸ்த்ர மரியாதையாக எமது திருவடிகளைப் புஷ்பங்களால் அர்ச்சித்து எக்காலத்தும் இறுதியில்லாததான எம்முடைய சாமீப்யமும் சேரக்கடவை” என்று சொல்லி முடிந்தபிறகு ஆகாசத்தில் அந்தர்த்தானமானான்.

அதுமுதலாக அந்தப் பிருது வேந்தனும் தன் ராஜமஹிஷியுடனே அவ்விடத்தில் நெடுங்காலம் நிலைபெற்றிருந்து எம்பெருமானை வழிபட்டு வந்தான். அளகாபுரியின் அதிபதியான குபேரனும் நாணமடையுமாறு அளவில்லாத நிதிகளை அவன் ,பகவத் கைங்கர்யத்திலே விநியோகம் செய்தான். அவ்வாறே இன்றும் அவன் அவ்விடத்தில் பெருமாளுடைய திருவடிநீழலை விட்டுப் பிரியாதிருக்கிறான். நாரதமுனிவர் இந்த வ்ருத்தாந்தத்தை எனக்கு விளங்கக் கூறினார். ஹே ஸாரஸ்வத தீரவாஸிகளான மஹரிஷிகளே! சிரத்தையும் பக்தியும் உடையவர்களாய் இதைக் கேட்பவர் எவராயிருப்பினும் அவர் ஸ்ரீமந் நாராயணனுடைய ஸாயுச்ய பதவியை அடையக் கடவர்” என்று இவ்வாறு வ்யாஸர் சௌனகாதியர்க்குச் சொல்லி முடித்தார்.

## காலநேமியை வதைத்தல்

அவ்வாறு கூறிமுடித்த வியாசமுனிவரை அருந்தவரனைவரும் மற்றும் ஒரு முறை தொழுது “ஓ ஸ்வாமியே! பரமபத நாதனான பகவான் உகந்து வர்த்திக்கிற மதுரையின் மான்மியம் எல்லாருங்கேட்க எளிதிற்கிடைப்பதன்று; எங்கள் விருப்பத்தின்படி தேவரீர் அருளிச் செய்ததனால் நாங்கள் க்ருதார்த்தரானோம்; ஆயினும் இப்பொழுது அந்த

# கூடல்மான்மியம்

திருக்கண்களையுடையவரும், ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவைத் திருமார்பிலே தரித்தவருமான அவருடைய கல்யாண குணங்களை நினைக்குந்தோறும் என்மனம் உருகிப் பரவசமாகின்றது.

தேனொழுகுகின்ற பரிமளமுள்ள திருத்துழாயை முடியிலே சூடிய ஸர்வலோக சரண்யனான ஸ்ரீமந்நாராயணனுடைய மதுரை ஸ்தலத்தின் மாஹாத்ம்யமானது தேவர்களாலும் முனிவர்களாலும் அளந்தறியமுடியாத பெருமையுடையதாகும். ஆதலால் எத்துணையோ கோடி ஆண்டுகளாக முயன்றாலும் அது என்னால் இயம்புந்தரத்தினதன்று. ஆயினும், சிறந்த குணங்களும் நிறைந்த ஞானமுமுடைய நீங்கள் என்னைப் பொருளாக மதித்து இவ்விஷயத்தைக் குறித்து வினாவுகின்றீர்கள். அந்த சுகிர்தத்தினால் யான் என்னறிவாலியன்ற அளவு அதை உங்கட்கு எடுத்துரைக்கத் துணிகின்றேன்.

த்ருடமான வ்ரதத்தைக் கைக்கொண்டுள்ளவர்களே! எல்லா நன்மையும் எய்தப்பெற்றவர்களே! மிகவும் மேலானதான இவ்விஷயத்தை உங்களாலுசாவப்பட்டு நான் பாக்யசாலியானேன். நான்காம் வருணத்தவர் நான்மறை யோதுவதற்கு அதிகாரிகளாவதில்லை, அதுபோலவே அச்சுதனடிக்கீழே ஆளாகாதவர் இதனையும் அதிகரித்தலாகாது. மிகவும் மந்தணமாகப் போற்றத்தக்க இந்த வ்ருத்தாந்தத்தைத் தேவரிஷியான நாரதர் பக்கலிலே கேட்டு நான் உஜ்ஜீவிப்பதானேன். அந்த நாரதருக்கு நான்முகன் அருளிச் செய்தான். அந்நான்முகனுக்கு நாராயணன் உபதேசித்தான். இவ்வாறு இப்புராணம் பாரம்பர்யமாக இயம்பப் பெற்றதாகும். இதை விரும்பிக் கேட்டவர்கள் இருமைப்பயனும் எளிதிற் பெறுவார்கள். அல்லாமலும் அவர்கள் அந்தமிலின்பத் தழிவில் வீட்டையுமடைந்து ஆநந்தந் துய்ப்பவராவர்.

நாஸ்திகர்கள், அறிவீனர்கள், கீழ்மக்கள், பரசண்டர் மற்றும் வேதபாஹ்யர், பாபயோனிகளாயுள்ளவர்கள் ஆகிய இவர்களோடு இதனைச் சொல்லுதல் கூடாது. ஆதலால் மஹா தபஸ்விகளே! ஒருநாளும்

# கூடல்மான்மியம்

அஷ்டாங்க விமானத்தின் மேற்றிசையிலுள்ள அதிசயங்களை அறிய அவாவுடையவர்களாயிருக்கிறோம்; ஆதலால் அதனை அடியோங்களுக்கு அறிவிக்கவேண்டும் என்று ப்ரார்த்தித்தார்கள். வியாசரும் அதற்கு மறுமொழியாக, மதுரையின் மேற்கே ஒரு யோஜனை தூரத்தில் நைமிசாரண்யம் என்ற க்ஷேத்ரம் உள்ளது; தேவர்களுக்கெல்லாம் ப்ரபல விரோதியாய் ஒருவராலும் நாசமடையாதிருந்த காலநேமியென்னும் பெயரையுடைய ஓர் அசுரன் மாயவனுடன் போர் செய்து அவ்விடத்திலே மாண்டனன் என்று சொன்னார். உடனே சௌனகாதியர் வ்யாசரைப் பலவாறாகப் புகழ்ந்துரைத்துத் தங்களுக்கு அந்த வ்ருத்தாந்தத்தை விஸ்தரித்துச் சொல்லுமாறு வேண்டிக் கொண்டார்கள். அவ்வாறே அதற்கு உடன்பட்டு முனிபுங்கவரும் முகமலர்ச்சியோடு மொழியத் தொடங்கினார்.

"நைமிசாரண்ய க்ஷேத்திரத்திலே ஆம்பிரவனம் என்று ஒரு வனம் உண்டு. அது மா, பலா, தென்னை முதலான வ்ருக்ஷங்கள் அடர்ந்து க்ஷணிகம் தோறும் வளர்தலால் புதிது புதிதான அழகுடையதாய், பார்ப்பவர்களுக்கு நேத்ரானந்தத்தை விளைக்கிறது. செடிகளும், கொடிகளும், புதர்களும், மரங்களுமாகிய எல்லாவிடங்களிலும் இதழ் விரிந்த மலர்கள் நிறைந்து இனிமையான வாசனை வீசுகின்றன. அங்குள்ள மரங்கள் அனைத்திலும் நாவிற்கு நல்ல சுவையை அளிக்கின்ற கனிவகைகள் அநேகம் காணப்படுவதால், அவ்வனம் எல்லா விதத்தாலும் இன்பத்தையே தரத்தக்கதாகும். அங்குள்ள ஓஷதி வகைகளும் அளவிறந்தனவாம். நீரோடைகளும் பூம்பொய்கைகளும் அச்சோலையைச் சூழ எங்கும் நிர்மலமாய் விளங்குகின்றன. யானையும், சிங்கமும், காட்டெருமையும், ஓநாயும், தகரும், மரையும், மானும் ஆகிய விலங்கினங்கள், முற்றத்துறந்த முனிவர்களைப் போல ஒன்றற்கொன்று ஒற்றுமை யுடையனவாய் விரோதபாவம் நீங்கி அங்கே விளையாடுகின்றன.

"இவ்வாறு மனத்தைக் கவரும் மாண்புடையதான அவ்வாம்பிரவனமானது குபேரனால் வைத்து வளர்க்கப்பட்ட சைத்ரரதத்திற்குச் சமானமாயுள்ளது. ஆகையினாலே அதற்குச் சித்திரத்தேர் வனம் என்று மற்றொரு பெயரும் வழங்குவதுண்டு. அது மிகுந்த புனிதமுடையதாதலால் அருந்தவர் அநேகர் நாநாதேசங்களினின்றும் அவ்விடத்தை நாடி வருகின்றனர். அங்கே வந்து தவம் செய்வோர்களுக்கு எண்ணியவெல்லாம் எளிதில் கைகூடுகின்றன.

## கூடல்மான்மியம்

கோபமில்லாத ஐம்புலனடக்கிய அந்தணாளர்களான நீங்களே இதைக் குறிக்கொள்ளுதற்குத் தகுதியுடையவர்கள். விஷயாந்தரங்களிலே சிந்தையைச் செலுத்தாமல், மஹாவிஷ்ணுவை மனத்திலிருத்தி, அவனுடைய அனுக்ரஹத்தால் நாரதர் எனக்கு நவின்றருளியபடியே நான் உங்களுக்கு விளங்க உரைக்கிறேன். நீங்களும் அவ்வாறே இந்திரியங்க ளெல்லாவற்றையும் ஒருவழிப்படுத்துங்கள். மதுரையின் மான்மியத்தைக் கேட்பதே கருத்தாகக் கொண்டு சாவதானமாக இருப்பீர்களாக'' என்று இவ்வாறு அந்தச் சௌனகாதி முனிவர்களுக்கு இனிமையாக இசைத்தருளியபின் வ்யாஸமுனிவர் கூடல்மான்மியத்தைக் கூறத் தொடங்கினார்.

### ஈசன் தவம் புரிதல்

**மன்னுமனோஹரமானகதம்பவனஞ்சூழ**
**இன்னறைகாலதர்புன்னைசரும்பரிருந்தூதப்**
**புன்னைமலர்ந்துமணங்கமழ்தாதொடுபொன்வீசப்**
**பின்னிய கூந்தற்கமுகிடைதோகைப்பெடையாட**

**குருகையின் மாறற்காமிதெனும்படி குளிர்தென்றல்**
**உருவதுபோவதுவாடைமணந்தருமகிழோங்க**
**முருகலர்பிண்டியுமாவுமிதொன்றெனுமுறைதுன்ன**
**அருகுயர்சண்பகம்வேள்சிலைநாணடுமம்பீன,**

**மல்லிகைமுல்லைகள்மாலதிமேலதிமதுரஞ்சேர்**
**சொல்லியலார்தொடுகைமலர்மீதுந்துளிதூவப்**
**புல்லியஆடவர்புன்னகைசெய்வதுபோலெண்ணி**
**மெல்லியலார்நகமுகைவிரிகேதகைவெறியாட.**

"வானத்தையளாவி வளர்ந்த தருக்களால் நிறைந்து காண்போரது உள்ளமும் கண்களும் ஒருங்கு கவரும் வனப்புவாய்ந்து விளங்குகிற கடம்பவனத்தில், இனிமையான வாஸனைபொருந்திய புஷ்பங்களில் தேனினங்கள் கூட்டங் கூட்டமாய் மதுவையுண்டு களிக்கின்றன.

# கூடல்மான்மியம்

"முன்பு ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தீவிரமான பகைமை மூண்டது. அப்பொழுது அசுரர்களுடைய் அளவில்லாத ஆற்றலைக் கண்டு அமரர்கள் யாவரும் அச்சத்தால் நடுக்கமுற்றார்கள். திக்பாலகர்களும் செய்வதறியாமல் திகைத்தனர். இந்திரனும் கூட அப்பகைவர் முன் இளைத்து ஓடத்தலைப்பட்டான். அதனால் இமையவர் அனைவரும் தமது பதவியை இழந்து வானுலகினின்றும் கீழே இழிந்தனர். சோகத்தாலும் பயத்தினாலும் பீடிக்கப்பட்ட அவர்கள் ஸர்வாபீஷ்ட பலப்ரதமான தேசமென்று கருதி இந்த ஆம்பிரவனத்தை அடைந்தார்கள். அவ்வாறு அடைந்தவர்கள் அங்கே அரிய பெரிய தவமியற்றி இஷ்டசித்தியைப் பெற்றனர். அதனால் அவர்கள் அசுரர்களை நாசம் செய்து தேவலோகத்தில் தங்கள் தங்களுக்குரிய ஸ்தானங்களை அடைந்து நிர்ப்பயமாய் வாழ்வராயினர்.

அன்றியும் வேறு ஒரு காலத்தில் ஆலகால விஷத்துக்கு நிகராகத் தீமையைச் செய்பவனான காலநேமியென்பான் அசுரர்களுக்கு அதிபதியாயினான். அவன் ஒருவராலும் வெல்லமுடியாத புஜபலமும் வரபலமும் ஒருங்குவாய்ந்திருந்தனன். அதனால் எல்லா உலகங்களையும் தன்னகப்படுத்திக் கொண்ட அவன், தனது கொடிய ஆஜ்ஞையை எங்கும் செலுத்தி வந்தான். அவன் முன்பு அமரர்களும் அஞ்சி நடுங்கினார்கள்.

அப்பொழுது தேவர்களும் அசுரர்களும் ஒருவருக்கொருவர் யுத்தஞ்செய்யுமாறு நேரிட்டது. யுகாந்த காலத்திலே ஸப்த ஸாகரங்களும் உத்கோஷத்துடன் பொங்கி எழுவதைப் போல காலநேமி தன் சைனியங்களோடும் கிளர்ந்து சண்டை செய்யத் தொடங்கினான். முகாக்னிக்குச் சமானமான சீற்றத்தோடு கண்களில் தீப்பொறி பறக்க அவ்வசுரன் ஆக்ரமிப்பதைக் கண்ட தேவர்கள் அனைவரும் திசைதோறும் சிதறி ஓடினார்கள். அதனால் காலநேமி ஜயசீலனானதோடு தேவலோக முழுமையும் தன்னதாகக் கைப்பற்றிக் கொண்டான்.

அதன்பிறகு அந்த துராத்மாவான அசுரன் பூமியில் அடைந்து அந்தணரும், சான்றோரும், அருந்தவத்தோரும் முதலான ஸாது ஜனங்களைப் பலவிதத்தாலும் ஹிம்ஸிக்கலானான். அவ்வாறு அயலார்களுக்கு இடுக்கண் விளைப்பதிலேயே அவன் மனம் மிகவும் களிப்புற்றது.

ஆதலால் அந்த ஹிம்ஸையை ஸஹிக்கமாட்டாத தேவர்களும்

Sri :
Srimathe Ramanujaya Nama :
Phone : 50119 (STD 04635)
**SRI VANAMAMALAI MUTT**
Nanguneri - 627 108.
Srimath Kaliyan Vanamamalai Ramnuja Jeeyar Swami

Place : NANGUNERI
Date : 2.8.2000

# "அணிந்துரை"

அன்பார்ந்த ஆத்திகப் பெருமக்களே, தமிழ்கூறும் நல்லுலகத்துச் சான்றோர்களே,

ஸ்ரீமதுபயவே திரு. நா. அப்பனய்யங்கார் ஸ்வாமியின் மிகச்சீரிய ஒன்பது கட்டுரைகளை உள்ளடக்கிய இந்நூல், அம்மஹானது நற்புதல்வரான ஸ்ரீமான் அ. ஸ்ரீநிவாஸன் ஸ்வாமியால், திருமலை–திருப்பதி தேவஸ்தானத்தின் பொருளுதவியுடன் அச்சிட்டு வெளியிடப்படுகின்றது. இவ்வொன்பது கட்டுரைகளும் இந்நூலாம் சுட்டுரைத்த மைம் பொற்பதக்கத்தில் பதிக்கப்பட்டுள்ள நவரத்தினங்களாக இலங்குகின்றன. நம் செந்தமிழ் மொழியில் பழங்காலத்தில் இணையற்ற பாங்கில் இலங்கி உலகிற்குப் பேருபகாரம் இயற்றிவந்த "செந்தமிழ்" பத்திரிகையில் ஒரு கட்டுரையும், ஏனைய எட்டும் "ஹரிசமயதிவாகரம்" பத்திரிகை இதழ்களிலும் முக்கால் நூற்றாண்டு காலத்திற்கு முன்பேயே வெளி வந்தவை. இவ்வரிய ஒன்பது கட்டுரைகளையும் தொகுத்து ஒரு நூல்வடிவம் தந்து இப்போது நூலாசிரியரது நற்புதல்வரே வெளியிடும் முயற்சியை மேற்கொண்டுள்ளமை மிகவும் பாராட்டற்குரிய செயலாகும். இதுவும் திருவேங்கடவன் திருவருளே. இந்த சந்தர்ப்பத்தில் நூலாசிரியரைப் பற்றிச் சில வார்த்தைகள் மிக்க மதிப்புணர்வுடன் கூறிட யாம்

புன்னைமரத்தில் புஷ்பங்கள் மலர்ந்து உதிர்த்தலான் அச்சோலையின் எம்மருங்கும் பொன்னுறைத்தாற் போல விளங்குகிறது. ஒன்றொடொன்று நெருங்கிக் கலந்துள்ள கமுக வ்ருக்ஷங்களினிடையிடையே மயிற்பேடுகள் தமது கோலகலாபங்களை விரித்துக் குதூஹலமாய் விளையாடுகின்றன. மிகவும் குளிர்ந்த இளந்தென்றல் காற்றும் வாடைக்காற்றும் மாறிமாறி வீசும்போதெல்லாம் ஸ்ரீவகுளாபரணரான குருகூர்ச் சடகோபருக்கு போக்யமானவையென்று சொல்லுமாறுள்ள மகிழம்பூக்கள் மணங் கமழுகின்றன. ஒருசார் முகிழ்களோடு கூடிய பிண்டியும், மாவும், சண்பகமும் நிறைந்து புஷ்பித்தலால் கண்களுக்கு நன்றாகக் காட்சியளிக்கின்றன. மல்லிகையும், முல்லையும், மாலதியும் முதலான புஷ்பச்செடி வகைகளெல்லாம் எல்லாவிடங்களிலும் பரிமளமான சுகந்தத்தைப் பரவச் செய்கின்றன. மற்றொரு புறத்தில் தாழைகள் தமது வெள்ளிய மடல்களை விரித்து நறுமணங்கமழ்ந்து சோலையை அலங்கரிக்கின்றன.

இவ்வாறு பலவகைகளாலும் சிருங்காரமுடையதான அக்கடம் பாடவியினூடே வையைநதி பாயப்பெற்ற வளத்தையுடைய விசாலமான ஓர் இடமுண்டு. அதிற் சிற்பசாஸ்திர முறையிற் சிறிதும் வழுவாமல் விச்வகர்மாவினால் நிர்மிதமான விமானமொன்று எட்டு அங்கங்களோடும் எழில்பெற அமைந்து மனத்திற்கினிய மாட்சியுடையதாய்த் திகழ்கின்றது. அவ்விமானத்திற் பெருமாளும் பிராட்டியும் பிரியாது வதிகின்றனர். பண்டொரு காலத்தில் சனத்குமாரனால் அர்ச்சித்து ஆராதிக்கப்படுபவனாக, அவன் பிரார்த்தனைக்கிரங்கி எழுந்தருளி, தேவதேவனான திருமால் அந்த விமானத்திலே வீற்றிருப்பவனாயினான்; என்று இவ்விஷயங்கள் யாவும் முன்னரே உங்களுக்குத் தெளிய உணர்த்தியுள்ளேன்; ஆயினும் நீங்கள் இப்பொழுது அதனை மேலுங்கேட்க ஆர்வமுடையவர்களாயிருக்கிறீர்கள். ஆதலால் அதை உங்கட்கு விரிவாயுரைக்கின்றேன், கேட்பீர்களாக" என்று இத்துணையும் முன்னுரையாக மொழிந்து அந்த ப்ராஹ்மணோத் தமர்களான முனிவர்களை நோக்கிப் பின்வருமாறு வ்யாஸர் விரிவாய் வெளியிடுவதானார்.

முனிவர்களும் திருப்பாற்கடலை நோக்கிச்சென்று அங்குள்ள தேவதேவனான திருமாலைச் சரணமடைந்தார்கள். புஜங்க ஸயனத்தின் மீது கண்வளர்ந்தருளுகிற "ஓ புருஷோத்தமனே! உன் அடியவர்களான எங்களுடைய சரணாகதியை ஏற்றருள்வாயாக. முன்னொரு காலத்தில் முதலையினால் நலிவுபட்ட கஜேந்திராழ்வானுக்குக் கருணைபாலித்த நீ இப்பொழுது எங்களையும் காப்பாற்ற வேண்டும்; பகைவர்களான நிசாசரருடைய பராக்ரமத்தினால் நாங்கள் நிலைகுலைந்து வருந்துகின்றோம்; அவர்கள் முன்பு எங்களுடைய ஆயுத பலமும் அழிந்து தோள்வலியுந் தொலைந்தது; எக்காலத்தும் எமக்கு உற்றதுணையாய் உதவி நின்ற பஞ்சதருக்களும் இப்பொழுது பயனற்றனவாய் ஒழிந்தன; அதனால், உன்னிடம் அன்பு புரியாதவர்களைப் போல நாங்களும் அரிய பெரிய துயர்க்கடலில் அழுந்தியவர்களானோம்; ஆகையால் களைகணற்றவர் களாகிய எங்களை நீயே கரையேற்றி யருளவேண்டும்" என்று இவ்வண்ணமாக அவர்கள் அவனிடம் ப்ரார்த்தித்துக் கொண்டனர்.

எல்லாவுலகங்களுக்கும் நாயகனான எம்பெருமான், அதுகேட்டு அத்தேவர்களுக்கு அபயமளித்தான். அவன் மேலும் அவர்களை நோக்கி, கிருதமாலாநதிக்கரையிலே கடம்பவனத்தாற் சூழப்பட்ட ப்ரதேசத்தில் மதுரை யென்னும் மாநகர் ஒன்று மாட்சிமைப்பட அமைந்து விளங்குகின்றது. அது தன்னிடத்து வாழ்பவர்களுக்கு எக்காலத்தும் வளந்தருதலால் யாவராலும் புகழ்ந்து பேசப்படுகிறது; அங்கே, மிகுதியும் அழகுவாய்ந்ததும் கட்டுறுப்புக்களால் இயன்றதுமான விமானமொன்றில் யாம் எப்பொழுதும் விரும்பி வீற்றிருந்தருளுவோம்; இப்போது உங்களுடைய வேண்டுகோளின்படி அங்குநின்றும் புறப்பட்டு அக்காலநேமியசுரனைக் கடிதிற் கொல்லுமாறு கருதியுள்ளோம்; ஆதலால் இனி நீங்கள் ஒன்றற்கும் அஞ்சவேண்டுவதில்லை" என்று உறுதிமொழி கூறி, அவ்விண்ணவர்களுக்கு விடைகொடுத்தருளினான்.

அவ்வாறே பிறகு தேவர்களும் முனிவர்களும் ஆம்பிரவனத்தை அடைந்தார்கள். அங்கே அவர்கள் அருந்தவம் புரிந்தவர்களாய் நீலமணி போலும் நிறத்தையுடைய செங்கண்மால் எப்பொழுது எழுந்தருளுவானோ என்று எதிர்பார்த்த வண்ணமாகவே இருந்தனர். அந்தச் சமயத்தில் காலநேமியும் அங்குவந்து அவர்களைப் பலவாறாகத் துன்புறுத்தத் தொடங்கினான். அதனால், மதுசூதனனையே மனதில் நினைத்திருந்த அந்த மாதவர்களும் வானவர்களும் தமது சமாதிநிலை குலைந்து சஞ்சல மற்றார்கள்.

கடமைப் பட்டுள்ளோம். நூலாசிரியர் ஸ்ரீ.உப.வே. அப்பனய்யங்கார் ஸ்வாமி ஈடிணையற்ற தமிழ்ப்புலவராய் விளங்கி, திக்கெட்டும் பரவிய பெரும் புகழாளராய்ப் பொலிந்த ஸ்ரீ.உ.வே. திருநாராயணய்யங்கார் ஸ்வாமியின் தவப்புதல்வராய் விளங்கியவர்.

"ஆத்மாவை புத்ரநாமாஸி" என்ற வாக்கின்படி, தீபத்திலிருந்து கொளுத்திய, ப்ரதீபமாக விளங்கிய தமிழ்ப் பேராசிரியர். நூற்றுக்கணக்கான சிறந்த தமிழாசிரியர்களை, தமிழ்ப் புலவர்களை உருவாக்கி உலகிற்களித்த பெருந்தகையார். நம் பூர்வாச்ரமத்தில் நாம் இராமேச்வரம் வடமொழிக்கல்லூரியில் மாணவனாகப் பயின்ற காலையில், நம்மீது விசேடமான அன்பைப் பொழிந்த பெருமகனார்.

இந்நூல் மிகச் சிறந்த முறையில் வெளியிடப்பட்டு இதிலடங்கியுள்ள நவரத்தினங்களின் ஒளி தமிழ்கூறும் நல்லுலகில் பரவி பேருபகாரம் புரிந்திடுக. இந்நூலை வெளியிடும் திருப்பணி புரியும் ஸ்ரீமாந் ஸ்ரீநிவாஸனும், அவரது குடும்பத்தினரனைவரும் எல்லா நலன்களும் பெற்று இனிது நீடுவாழ்ந்திடுக என இறையருள் வேண்டி, நாம் மனதார மங்களா சாஸனம் செய்து மகிழ்வெய்துகிறோம்.

சாதுர்மாஸ்ய வ்ரதம்; ஸ்ரீராமாநுஜன்
திருவாடிப்பூரம்.
No. 10, Farm House,
Gadaipur Road,
New Delhi-64.
(முகாம்)

# கூடல்மான்மியம்

**இடபமால்வரைதொட்டெழிற்குமரியாற்றளவும்**
**வடதுதெற்கெனும்எல்லையாய்மலயமால்வரையே**
**குடதிசைப்படக்குணகடல்மாறுமாய்க் கூறும்**
**புடவிபாண்டியராண்டுளநாடெனப்புகல்வார்.**

வடக்கே திருமாலிருஞ் சோலைமலையும், தெற்கே கன்யாகுமரியும், மேற்கே மலைய பர்வதமும், கிழக்கே ஸமுத்ரமும் எல்லையாக இடைப்பட்ட பூமி முழுவதும் பாண்டிய அரசர்களுடைய ஆட்சிக்குட்பட்டதாகும். அந்தப் பாண்டியனாடு ஸ்வர்க்கலோகத்தை வாஸஸ்தானமாகப்பெற்ற தேவர்களாலும் விரும்பப்படும் சீர்மையுடையது. அந்த தேசத்தில் தூய்மையுடைய புண்ணிய ஸ்தலங்களும், ஸ்வயம்புவாய்த் தோன்றிப் பரமபாவனமான தீர்த்தங்களும் பற்பலவுள்ளன. அந்த ஸ்தலங்கள் ஒவ்வொன்றிலும் மஹரிஷிகளான பலர் மஹாவிஷ்ணுவை அன்புடன் வழிபட்டு உயர்ந்த பதவியை அடைந்தார்கள்.

அந்த திவ்ய தேசங்களிலெல்லாம் கடம்பவனம் சிறந்தது. அதனுள்ளும் அஷ்டாங்க விமானத்திலே எம்பெருமானுடைய ஸாந்நித்யம்பெற்று ஸர்வாபீஷ்ட பலப்ரதமாய்த் தருமந் தழைத் தோங்குமாறு விளங்குவது கூடல் என்னும் மதுரா நகரமாகும்.

அந்த அஷ்டாங்க விமானத்தின் கீழ்பால் திசையில் அமோகமான ப்ரபாவத்தோடு கூடிய ஸ்வர்ண புஷ்கரணி யென்னும் தடாகம் ஒன்றுண்டு. அது தன் தீர்த்த விசேஷத்தால் யாவராலும் புகழப்படுவது. அத்தடாகத்தின் மேற்கே தேவதேவனான ருத்ரன் ஓர் அரிய பெரிய தவம் புரியலாயினான். அதனால் உலகம் முழுவதும் அஞ்சி நடுங்கிற்று. அப்போது வடவா முகாக்னிக்கு சமானமான தூமகேது அவன் ஜடையினின்றும் மேல்நோக்கியெழுந்து மிகவும் உக்ரமாக ஓங்கி வளர்ந்து கொழுந்து விட்டெரிந்தது. அது தேவர்களோடு த்ரிலோகங்களையும் தஹித்து பஸ்மீகரமாக்கத் தொடங்குவதுபோல் தோன்றிற்று. அதனைக்கண்ட

# கூடல்மான்மியம்

**அக்காலனென்ன எதிர்காலநேமிஅவுணன்றனக்குவெருவி**
**இக்காலம்யாமும்எதுசெய்தும்என்னஇமையோர்நடுங்கிஅவணே**
**தொக்கார்கள்விண்டுசரணம்தமக்கோர்அரணென்றுசூழ்ந்தபொழுதின்**
**மிக்காம்வனத்தின்அவர்காணும்வண்ணம்வெளிவந்துகொண்டலனையான்**

**அறவைத்தசெம்பொனிறவைப்பிலங்குபறவைக்குவேந்தனவன்மேல்**
**உறவைப்பொருந்திமுறையிட்டடைந்தஉரவோர்கள்துன்பம்ஒழியக்**
**கறவைக்குடங்கள்குருளைக்கிரங்குகனிவாய்விரைந்துவரலும்**
**துறவுற்றதொண்டர்சுராசித்தர்கோடிதுதிசெய்துசூழ்ந்துதொழுதார்.**

அவ்வேளையில் புயல்வண்ணனான புருஷோத்தமன் மிகுந்த பரபரப்போடு பக்ஷிராஜனை வாஹனமாகக்கொண்டு அந்தவனத்தின் நடுவே வந்து தோன்றினான். உருக்கி வார்த்த பொன்னைப்போல் ஒளிபொருந்தின திருமேனியையுடைய அந்தப் பெரிய திருவடியின் மீது எம்பெருமான் எழுந்தருளி ஸேவைஸாதிப்பதைக்கண்ட உம்பரும் முனிவரும் உள்ளங்குளிர்ந்து உவகையால் நிரம்பினர். உடனே எங்கும் ஜயகோஷம் முழங்க அவர்கள் அவனைச் சூழ்ந்துநின்று ஸ்தோத்திரம் செய்யலாயினர். அப்பொழுது பெருமாள் அவர்களுக்கு அஞ்சலென்று அருள்புரிந்து கன்று பசித்துநிற்கக் கறவைகள் அவற்றிற்குக் கனிவோடு பால்சுரந்தூட்டுவதை ஒப்ப, இனிய வசனங்கள் கூறி அவ்விமயவரை இடரொழியுமாறு தேற்றினான்.

அஃதவ்வாறான தருணத்தில் காலநேமியும் தன் அசுரர் கூட்டத்தோடு அங்குவந்து சேர்ந்தான். தேவர்கள் அவர்களோடு யுத்தம் செய்ய ஆரம்பித்தனர். ஆனாலும் அசுரர்களுடைய பராக்ரமம் அதிகமாகவே இருந்தது. அதனால் அவர்களை எதிர்த்து நிற்கமாட்டாத அமரர்கள் புண்பட்ட மெய்யோடு புறங்காட்டி ஓடத் தொடங்கினார்கள்.

**படர்ந்துதீயர்தாக்கலிற்பயந்துதத்தம்உயிர்பெறக்**
**கிடந்தகாதல்முன்செலக்கிளர்ந்தசிந்தைபின்செல**
**உடன்றுடன் றடர்ந்தஉம்பர்ஊறுபாயும்மெய்யராய்**
**இடைந்துதானவர்க்குடைந்திரைந்துதிக்குமோடினார்.**

அதுகண்டு சார்ங்கபாணியான திருமால் அசுரர்மீது பல சரங்களைத் தொடுத்தான். அதனால் அவர்களில் அனேகர் கரங்களற்றவர்களும்,

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :
அப்பன் திருவடிகளே சரணம்

## பதிப்பாளரின் முன்னுரை

இந்நூல், மதுரைத் தமிழ்ச்சங்கம், இராமேஸ்வரம் தேவஸ்தானம் கலைக்கல்லூரி, மதுரை, ஆகியவற்றில் பேராசிரியராகவும், "செந்தமிழ்" இலக்கிய இதழாசிரியராகவும் விளங்கிய அடியேனுடைய தந்தையார் 75 ஆண்டுகட்கு முன்பு மதுரையிலிருந்து வெளிவந்த "ஹரிஸமயதிவாகரம்" பத்திரிகையில் எழுதி வெளியிட்ட "கூடல் மான்மியம்", "இராமாயணத் திருப்புகழ்–பாலகாண்டம்" ஆகிய நூல்களையும், "தர்மம்", "கம்பநாட்டாழ்வார்", "பெருமாள் வருணனுக்கு அருள்புரிந்தது", "என்னீர்மை யென்னும் திருவாய் மொழிப் பாசுரத்தில் பட்டர் நிர்வாஹம்", "முனையதரையர்", "க்ருஷ்ணதேவராயர்", மற்றும் "இராமாவாதாரம்" ஆகிய கட்டுரைகளையும் தன்னகத்தே கொண்டது. இவற்றில் "இராமாவதாரம்" மட்டும் மதுரைத் தமிழ்ச் சங்கத்து இதழான "செந்தமிழில்" வெளிவந்தது. மற்றவையனைத்தும் ஹரிஸமய திவாகரத்தில் வெளிவந்தவை.

"இராமாயணத் திருப்புகழ்–பாலகாண்டம்" மட்டும் ஏட்டுச்சுவடியிலிருந்து படியெடுத்துத் தமது உரையோடு எந்தையார் வெளியிட்டுள்ளார். மற்றப் பகுதிகளின் ஏட்டுச்சுவடிகள் கிடைத்தனவா, அவற்றிற்கு அவர் உரையெழுதினாரா என்று அறியக் கூடவில்லை. அதுபோன்று "தர்மம்" கட்டுரைகள் மூன்று இதழ்களில் வந்துள்ளன. அவையும் முற்றுப் பெறவில்லை. "ஹரிஸமய திவாகரம்" ஆசிரியரும் தமது உயிரினும் மேலான நண்பருமான பண்டித ஆ. அரங்கராமாநுஜ

# கூடல்மான்மியம்

தேவர்களெல்லாம் திடுக்கிட்டார்கள்; பாகசாதனனும் பதைபதைத்தனன். பிறகு அவர்கள் ஒருவாறு பயந்தெளிந்து ஸகஸ்ரதள பத்மத்தை ஆலயமாகக்கொண்ட ப்ரஹ்மதேவனுடைய ஸத்யலோகத்தை மிகவும் விரைவாகச் சென்றடைந்தார்கள்.

அவ்வாறடைந்தவர்கள் அந்த ப்ரஹ்மாவினுடைய சரணங்களில் வீழ்ந்து அடைக்கலங் கூறினார்கள். பிறகு அவர்கள் எழுந்திருந்து சிரஸ்ஸின்மேலே கைகளைக்குவித்து தலை வணக்கத்தோடு தாழ்ந்து "ஆதியாயுள்ள தேவனே! ஜகத்ஸ்ருஷ்டிக்குக் காரணமானவனே! அகில புவனங்களையும் அழியாமற் காப்பவனே! விரிஞ்சனே! கேட்டருளவேண்டும்; நாங்களெல்லோரும் காரணமில்லாமலே பயத்தினாற் பீடிக்கப்பட்டவர்களானோம்; அதனால் வந்து நின்னைச் சரண்புகுந்தோம்" என்று சொல்லி முறையிட்டார்கள். அதுகேட்ட நான்முகன் அச்சத்தால் அறிவுகலங்கிய அமரர்களை நோக்கி, "அகலாததான இவ்வச்சம் உம்பர்களான உமக்கு எவ்வாறு போந்தது?" என்று வினாவினான். அதற்கு இமையவரெல்லாருங் கூடி "மிகவும் தீனர்களாகிய எங்களால் ஒரு காரணமும் உணரலாவதில்லை; ஆயினும் பெரிதும் பயமுண்டாகின்றது; அதனைத் தவிர்த்தற்குரியார் உன்னையல்லால் ஒருவருமில்லை; அன்றியும் நிகழ்ந்தவையனைத்தும் நீயே அறிவை; ஆதலால் எவ்வாற்றாலும் இப்பெரிய இடரினின்றும் எங்களைக் கரையேற்றுதல் இறைவனாகிய உனக்கே இயைந்த கடமையாயிற்று" என்று இவ்வண்ணமாக மறுமொழி புகன்று ப்ரார்த்தித்துக் கொண்டார்கள்.

அப்பொழுது, ஸ்ரீயஃபதியான ஸர்வேசுவரனுடைய திருநாபீ கமலத்தினின்று திவ்ய கந்தத்தோடு இதழ்களை விரித்துத் தோன்றிய தாமரைத் தவிசில் உத்பவித்தவனான சதுர்முகனும், தேவர்கள் பக்கல் நிறைந்த கருணையுடையவனாகி, அவர்கள் தன்னைப் புடைசூழ்ந்துவரப் பணித்துத் தான் பாற்கடலை நோக்கிப் புறப்பட்டான். அவ்வாறே அவர்களனைவரும் க்ஷீராப்தியைச் சென்றெய்தினார்கள்.

கால்முறிந்தவர்களும், காதிழந்தவர்களும், கண்தொலைந்தவர்களும் ஆயினர்.

**அம்புபட்டதானைநான்கில்ஆனைபட்டகளமெலாம்**
**கொம்புபட்டவால்பதம்துதிக்கையேகுவிந்தன**
**வெம்புபட்டமன்னர்மாழ்கிவீழ்ந்ததேறில்வீழ்பரி**
**வம்புபட்டகவரிபோலவாலெடுத்துவீசுமால்.**

அன்றியும் அவ்வம்புகள் பாய்ந்து அசுரர்களுடைய யானைப் படைகளைச் சின்னாபின்னமாகத் தகர்த்தன. யுத்தகளத்தில் எங்கு பார்த்தாலும் யானையின் தந்தங்களும், நெற்றிப்பட்டங்களும், கால்களும், வால்களும், துதிக்கைகளுமே குவியல் குவியலாய்க் காணப்பட்டன. தேர்வீரர் யாவரும் தேர்த்தட்டிலே மாய்ந்து விழுந்தனர். குதிரைப் படைகளும் மாண்டு குற்றுயிரும் குறையுடலுமாய்ப் பூமியிலே கிடந்து புரண்டன. அப்பொழுது ரணத்தின் வேதனையினால் அவைகள் அடிக்கடி வால்களை மேலே தூக்கி வீசின. அது அப்போரிலே இறந்துபட்ட சுத்தவீரர்களுக்காகப் புதுமையானதொரு வெண்சாமரையிரட்டுதலைப் போல விளங்கிற்று. இன்னும் அந்த அமர்க்களத்தில் அசுரர்படைகள் அடைந்த நாசத்திற்கு அளவே இல்லை. அங்கே ரத்தவெள்ளம் பெருக்காறெடுத்தோடிற்று. கரகமும், கழுகும், நாயும், நரியும், பேயுமாகிய இவைகள் எல்லாம் பெருமகிழ்வோடு திரள்திரளாக நட்டமிட்டன.

இவற்றையெல்லாம் கண்டிருந்த காலநேமியின் கண்கள் கனல் சொரிந்தன. அவன் அதிசீக்கிரமாக திருத்துழாய் மாலையையணிந்த மாயவனை வஞ்சனையாகப் பின் தொடர்ந்து சண்டை செய்ய எத்தனித்தான். அந்தச் சமயத்தில்-

**நிறங்குலாயஊழிகாலநீலமேகம்ஏழும்வந்து**
**இறங்குகுன்றமென்றுபுள்ளின்ஏந்தல்மீதுபோந்தமால்**
**கறங்குபோல்விரைந்துதேர்கடாய்விடாதகள்வனை**
**அறங்கொதித்ததென்னநெஞ்சழன்றுபின்றுரத்தினான்.**

**வேலையேழுமலைகளேழுமேலகீழவாகிய**
**ஞாலமேழுமலமேழுநடுநடுங்கியதிரவும்**
**மாலைகாலைதிசைபிறழ்ந்துகதிர்கள்வீதிமறியவுங்**
**காலநேமியைத்துரந்துபடையெலாங்கடிந்தனன்.**

தாஸர் அவர்கள் திடீரென்று இறைவனடி சேர்ந்ததால், அந்த இழப்பின் சோகம் எந்தையாரை மிகவும் பாதித்ததென்றே தெரிகிறது. அதன்பிறகு "ஹரிஸமயதிவாகரம்" வெளிவருவதும் நின்று போனது வைணவ உலகின் துரதிர்ஷ்டம் என்றே கூற வேண்டும்.

இந்நூல்கள், கட்டுரைகள் வெளிவந்து 75 ஆண்டுகள் கழிந்து, எந்தையார் ஆசாரியன் திருவடியடைந்து 35 ஆண்டுகள் கழிந்த பின்பு இவற்றை வெளியிட இறையருள் பாலித்தது. "அகலகில் லேனிறையுமென்று அலர் மேல் மங்கை உறை மார்பனின்'', திருவருளால், திருப்பதி–திருமலை தேவஸ்தானத்தார் இறைவன் புகழ்பாடும் நூல்களை வெளியிடும் தமது திட்டத்தின் கீழ் நிதியுதவி செய்ய இந்நூல் வெளிவந்துள்ளது. எந்தையாரின் 101–வது பிறந்த நாளையொட்டி இந்நூல் வெளியிடப்பெறுகிறது. அடியோங்களிடத்தில் பேரபிமானம் கொண்ட ஸ்ரீமத்பரமஹம்ஸாத்யேதி–வானமாமலை ஸ்ரீ.உ.பவே. கலியன் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி இந்நூலை கடாக்ஷித்து அணிந்துரை அளித்தருளியமைக்குத் தலையல்லால் கைமாறிலேன். இந்நூல் வெளிவரப் பேருதவி புரிந்த ஸ்ரீ.உ.ப.வே. Dr. A.K. மணவாளன் ஐயங்காருக்கு அடியேனுடைய க்ருதஞ்ஜதையைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலில் பிழைகளிருப்பின் அதனை வைணவ உலகம் பொருட்படுத்தாது ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்.

திரு. அ. ஸ்ரீநிவாஸன்,
சென்னை–78.

# கூடல்மான்மியம்

பாய்திரைசுருட்டும்பாற்கடல்முகட்டிற்
பஃறலைப்பாந்தள்மெல்லணைமேல்
ஆய்துயில்புரிந்திவ்வுலகுயிரோம்பும்
அன்பிலேசிந்தைசென்றடியார்
நோய்தனைக்களைந்துவிபுவெனத்தோன்றி
நொடிதனிற்படைத்தளித்தழித்துத்
தோய்தருமாதி காரணக்கடவுள்
துணையடி பணிந்தனர் துதித்தார்.

தேவர்கள்தேவேபழிச்சுவோர்துயரம்
தீர்பவசெகத்தினுக்கிறைவ
யாவர்கள் தமக்கும் மேலவானோர்
யாவரும்நின்சரணடைந்தேம்
காவலாய்உன்னாற்புரந்திடற்குரியேம்
பயமெனுங்கடலினின்றெடுத்தெம்
ஆவிநீயருளல்வேண்டுமென்றுரைத்தார்
அரியுமவ்வாய்மைகேட்டுணர்ந்தான்.

அவ்விடத்தில் ஆதிகாரணனும், ஆசிரித ரக்ஷணத்திலே நோக்குடையவனும், ஆயிரம் பணாமுடிகளையுடைய அநந்தஸயனத்தின் மீது அறிதுயிலமர்ந்தருளுபவனுமான ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளில் தெண்டணிட்டு, "தேவாதிதேவனே! அடியார்களுடைய அநிஷ்டங்களை நிரஸிப்பவனே! ஜெகத்பதியே! புருஷோத்தமனே! என்று பலவாறாக ஸ்தோத்ரம் செய்து பின்னர், வானவர்களாகிய யாங்களனைவரும் உன்னிடத்தில் சரணாகதி பண்ணினோம்; அதனால் ஸர்வரக்ஷகனான உன்னால் இப்பொழுது பாதுகாத்தற்குரியவர்களானோம்; ஆகையால் பயமென்னும் பெரிய ஸாகரத்தினின்றும் எங்களை எடுத்து உயிர்ப்பிச்சை யளித்தருளவேண்டும்" என்று கூறித் தங்கள் குறையைத் தவிர்த்தருளுமாறு வேண்டி நின்றார்கள்.

ஸப்தமேகங்களும் ஒன்றாய்த் திரண்டு பர்வதத்துடனே படர்ந்து வருதலைப் போல, தேவர்களுக்கு முன்பு கருடாரூடனாக வந்து காட்சிகொடுத்த திருமால் கறங்குபோலச் சுழன்று திரியும்படி அதிவேகமாகத் தேரைச் செலுத்தி அவ்வசுரனைப் பின்னிட்டோடுமாறு துரத்தினான். அன்றியும் தர்மதேவதையே மனங்கொதித்தாற்போன்ற சீற்றத்தோடு, அக்காலநேமியின் மீது அவன் பல அஸ்திரங்களைப் ப்ரயோகித்தான். அதனால் ஸப்த ஸாகரங்களும், மலைகளும், பதினாலு லோகங்களும் நடுநடுங்கி அதிர்ந்தன. மாலை காலையாகிற காலங்களும் திசைகளும் மாறி ஆகாசவீதியிலே சந்தரசூரியர்களும் தடுமாற்றம் அடைந்தனர்.

இவ்வாறு மிகவும் உக்ரமாக நடந்த அந்த யுத்தத்தில் அவ்வசுரனும் அஞ்சாது தான் வரப்பிரஸாதத்தாற் பெற்றிருந்த ப்ருஹ்மாஸ்திரம் முதலான படைகள் யாவையும் விடுத்து, தன் கைவரிசைகள் எல்லாவற்றையும் காட்டினான். அதனைக்கண்ட சக்ரபாணி தனது திருக்கைகளால் திருவாழியாழ்வானை அரைநொடிப்பொழுதில் ஆயிரம் முறை வலமாகச் சுழற்றி அவன்மேல் ஏவினான். நிசாசரர்களாகிய இருளைத் தொலைப்பதற்கு ஊழித்தீயுடன் தோன்றிய ஓர் உதயபானுவை ஒத்த அந்தநேமியும் உடனே காலநேமியின் சிரத்தினைத் துணித்தது. அதனால் மிகவும் பருத்துக் கொழுத்திருந்த அவனுடைய சரீரம் சடக்கென்று கீழே விழுந்தது. அப்பொழுது அது ப்ரசண்ட மாருதத்தின் வேகத்தினால் தள்ளுண்ட பெரியதொரு நீலமலை அறைபட்ட சிகரத்தோடும் அடியற்று நிலத்திலே சாய்ந்ததுபோல் தோன்றிற்று. ஆனாலும் கணக்கில்லாத அசுரர்களைக் காய்ந்து கொன்ற அந்தநேமி அக்காலநேமியின் உடல்வன்மையாற் கல்லென்று தெரித்தது. ஆச்சரியம்! ஆச்சரியம்! அக்கொடியோனுடைய தவவலிமையை என்னென்று கூறுவது? அது நிற்க.

எவ்வாற்றானும் அவன் இறந்துபட்டதை யெண்ணி அமரரும் முனிவரும், சாரணர்களும் தங்கள் துன்பந்துடைத்த எம்பெருமானைத் திருவடிதொழுது ஸ்தோத்திரம் செய்தார்கள். அநந்தரம் அழகனும் அவ்வனத்தை நீங்கி எப்பொழுதும் போலத் தன் அஷ்டாங்க விமானத்திற்கு எழுந்தருளலானான். இமையவரும் தங்கள் தங்கள் இருப்பிடம் ஏகினார்கள்.

திருமாலினுடைய நேமி தெரித்துவீழ்ந்த காரணத்தால் அந்த இடத்திலுண்டான தீர்த்தமும் சக்ர தீர்த்தமென்று வழங்கப்படுகிறது. சக்ரபாணியான ஸ்ரீமந்நாராயணன் அந்தஸ்தலத்திலும் நித்யவாஸம் செய்கிறான். ஆதலால் அங்கு வாழ்பவர்களுக்குக் கருதியனவெல்லாம்

ஸ்ரீ :

இந்நூலாசிரியர் திரு. நா. அப்பனையங்கார்
மதுரை ஸ்ரீ கூடலழகர், ஸ்ரீ மதுரவல்லித்தாயார்,
ஸ்ரீ திருவேங்கடமுடையான் மீது பாடிய வெண்பாக்கள்

ஸ்ரீ கூடலழகர்

ஆய்ந்த குழலழகன் அம்பவள வாயழகன்
வாய்ந்த குழற்காதழகன் மார்பழகன்—ஏய்ந்த வினைச்
செம்பொனடியழகன் செங்கமலக் கண்ணழகன்
அன்பருளும் கூடலழகன்.

ஸ்ரீ மதுரவல்லித்தாயார்

வாரிக்கடலகத்தின் மாலழகன் வண்புயத்தின்
வேரித் தடமலரின் வீறுளதோ—தேரின்
மதுர வல்லித் தாயென் மனம்புகுந்தா ளென்னை
எதிர வல்லார் யாரே இனி?

ஸ்ரீ திருவேங்கடமுடையான்

கீழிருந்து மேலிவர்ந்து கேளரிய நீணெறி போய்
ஏழிருந்த மாமலைமே லெய்தினேம்—பாழிருந்த
காயப்பிணி வாங்குங் காணாக்கண் காட்சிதரும்
மாயப் பவநோய் மருந்து.

பிறவிப் பிணி மேற்பிணிகள் துயரம்
உறுவித் தலையு முணராய்—அறிவிலை
வேங்கடத்து மாயவனை வேண்டுவமேல் என்மனனே
நாங்கடத்தும் வல்வினையை நன்கு.

திருப்பதியி லெம்மான்! திருவடியினீழல்
இருப்பதிலே உள்ள மியையும்—விருப்பதிகம்
ஆனேனையாட்கொண்டருள்கண்டாய் வேங்கடத்து
வானோர்க் கிறைவா மகிழ்ந்து.

இவ்வாறு பிரமனும், இந்திரனும் முதலான இமையவர்கள் ஒன்று கூடி உரைத்ததை மனத்துட்கொண்ட எம்பெருமான், தன் கருணைபொழிகின்ற கண்ணிணைகளால் அவர்களைக் குளிரநோக்கி மிகுந்த அன்பைப் புலப்படுத்துவனவாய் அமிர்தத்துக் கொப்பான இனிய வசனங்களால், “இன்று உமக்கு யாது பொருட்டினால் நடுக்கம் எய்தது இயம்புமின்” என்று கெம்பீரமாகக் கேட்டருளினான். அதற்கு மறுமொழியாக “உன்னுடைய மாயையால் மதிமருண்ட யாங்கள் யாதொன்றும் உணர்கிலோம்; உன்னை யொப்பாரும் மிக்காருமின்றி உலகுக்கெல்லாம் முழுமுதற் கடவுள் நீயேயாதலால் உனக்குப் புலனாகாத பொருள் ஒன்றுமில்லை; உன்னுடைய திருவடி நீழலில் ஒதுங்கி உயிர்வாழ்தல் வேண்டி எங்களை இத்தருணம் புரந்தருளுவாயாக” என்று திசைமுகன் இசைத்தான். அதுகேட்டு எல்லாவுயிர்கட்கும் ஹிதத்தையே நாடுபவனும், அருளே உருவமாக உடையவனுமான பகவான் ஈரமளைந்த இன்சொற்களாற் பின்வருமாறு பேசலுற்றான்.

“எம்மை வந்தணுகிய இமையவர் குழாங்களே! யாம் நிகழ்ந்ததை யறிந்தோம். இனி நீவிர் மனக்கவலையை மாற்றுவீராக. நும்மைப்பற்றி வருத்துகின்ற துயரம் ஏற்றதோ ருபாயத்தினால் எம்மாற் பரிகரித்தற்பாலது. தெக்ஷிணபூமியிற் செந்தமிழ் வளத்தாற் சிறப்புற்று விளங்காநின்ற பாண்டியனாடென்றொரு தேசமுளது. அத்தெய்வத் திருநாட்டின்கண், கரையின்மீது திரையெறிகின்ற வையையென்னும் வளநதியின் சமீபமாக, வாமதேவ மஹாதேவனென்னும் பெயர்படைத்த பெரியோன் தவம்புரிகின்றான்.

அவன் பர்வதராஜன் புத்திரியான அம்பிகையினிடத்தில் அகலாத காதல்கொண்டவன். அதனால் அவன் அநங்கன்வாளிக் கிளக்காய் அருந்துயர் பொறுக்கும் ஆற்றலில்லாதவனானான். உலையிலிட்ட மெழுகேபோல் உருகிய மனத்தையுடைய அவன் எவ்வாற்றானும் தான் நினைத்த தையலைப்பெற்று இன்புறுவதைத் தனக்கு உறுதியாகக்

கைகூடுமென்று சொல்லப்படுகிறது. ப்ருகுமஹரிஷி முதலான பெரியோர்கள் அநேகர் அங்குள்ள பெருமானை ஆராதித்துப் பெருமையுற்றனர். அந்தச் சக்ரதீர்த்தத்தை தரிசித்தமாத்ரத்திலே சகல பாதகங்களும் தொலைகின்றன. அதில் ஸ்நாநம் செய்வதன் பலனைச் சொல்லவும் வேண்டுமோ? தினந்தோறும் அதில் நீராடுவோர் தீவினைகள் யாவும் தீர்ந்து விஷ்ணுபக்தர்களாய் விளங்குவார்கள். ஆடி முதலான நான்கு மாதங்களிலும் அதில் மூழ்குபவர்கள் அளவில்லாத அச்வமேதம் செய்த பலனை அடைவர். மாசிமகமும், த்வாதசியும், சுக்ர வாரமும் ஆகிய தினங்களில் அதில் தீர்த்தமாடுதல் மிகவும் விசேஷமாகும் என்று இந்தவிதமான அந்தக்ஷேத்ர மான்மியத்தை வியாச பகவான் விரிவாகச் சொல்லி முடித்தார்.

## புலஸ்தியருக்குப் புதல்வனையளித்தல்

பின்பு சௌனகாதியர் வியாசரை நோக்கி, "பரமகாருணிகரான ஓ ஸ்வாமியே! தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய ஸ்தலவைபவத்தினால் அடியோங்கள் ஸந்துஷ்டரானோம்; இப்பொழுது மதுரையின் வடகிழக்கிலுள்ள தீர்த்தத்தின் மஹாத்ம்யத்தைத் தெரிவிக்க வேண்டுகிறோம்" என்று வினயமாக விண்ணப்பஞ் செய்தனர். அவ்வாறே வ்யாஸரும் சொல்லத் தொடங்கினார்.

"யானைமலையின் விசேஷத்தையும் அங்கு நரஸிம்ஹரூபமாய் எழுந்தருளியுள்ள எம்பெருமானையும் பற்றி முன்னர் யாழ்முனிவராகிய நாரதர் எனக்குச் சொன்னதை உங்களுக்குச் சொல்லுகிறேன். அலைகளுடன் கூடி ஆரவாரமுடையதாய், பொன்கொழித்தோடும் புண்ய தீர்த்தமான வைகையாற்றின் வடகரையிலிருந்து இருகூப்பிடு தூர எல்லையில் வாரணாத்திரி யென்றொரு மலையுண்டு. அது ஸ்ரீ கூடலழகப் பெருமாளுடைய திருக்கோயிலுக்கு ஓர் அரை யோஜனையளவு அப்பாலுள்ளதாகும்"

**தாவுஞ்சிறையிளபம்பியதளபந்தியுநறுமென்**
**பூவும்குளிர்நிழலும்பயில்புள்ளுங்குடிகொள்ளும்**
**காவுந்தவழ்சிறுதென்றலும்கனிப்பாலையும்சினைத்தே**
**மாவும்பலவீனமும்பலவனமும்பொலிவனவே**

பலசாகைகளோடும் பணைத்தோங்கிவளர்ந்து, மாதுர்யமான

ஸ்ரீ :

# இந்நூலாசிரியரைப் பற்றி

## எழுதியவர் ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான் ஸ்ரீ.உ.ப.வே. வி.கே. ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமி

மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தலைமைப் பேராசிரியரா இருந்து அரும்பணி ஆற்றியவர் திரு. நா. அப்பனையங்கா 1898ஆம் ஆண்டு மே மாதம் 15ம் நாள் உலகம் பரவிய புகழாளரா மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைமையாசிரியர் தி நாராயணையங்கார் ஸ்வாமிக்கும் அவர் மனைவியா இலக்குமியம்மையாருக்கும் தவப்புதல்வராகத் தோன்றினா இவருடன் பிறந்த சகோதரிகள் நால்வர். இவர் தந்தையார் மதுரை தமிழ்ச் சங்கத் தலைமையாசிரியராகவும், செந்தமி பத்திராபதிபராகவும் நாற்பது ஆண்டுகளுக்கு மேல் அருந்தமிழ் தொண்டாற்றியவர். 1922ஆம் ஆண்டு ஆங்கில நாட்டு இளவரச பாரத நாட்டுக்கு விஜயம் செய்த காலத்து தங்கப்பதக்கம், தோட சால்வைகள் முதலியன பரிசளிக்கப் பெற்றவர்.

### புலமைப் பயிற்சி

அப்பெரியார் புதல்வராகிய இவரும் தந்தையாரைப் போல தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கினார். இளமையில் மது சேதுபதி உயர் நிலைப்பள்ளியில் ஆங்கிலப் பயிற்சி பெற்றா நற்குணங்களும், ஒழுக்கமும் வளர வளர்ந்தவர். பள்ளியிற் பயில போதே ஒழிந்த நேரங்களில் தந்தையாருடன் இருந்து அவர் த மாணவர்களுக்குக் கற்பிக்கும் பாடங்களையும் விவாதங்களைய கூர்ந்து நோக்கி, உளத்திற் பதித்துக் கொண்டவர். தமிழ் அறி பெற்ற இவர் இளம் பருவத்திலேயே தமிழ்ச் சங்கம் நிறுவி பாண்டித்துரைத் தேவராலும் பாராட்டப் பெற்றவர். இவ உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்து மதுரைக் கல்லூரியில இரண்டாண்டு கல்வி பயின்றார். தந்தையாரிடம் தமிழ் நூல்கை

கடைப்பிடித்துள்ளான். ஆகையால் அதனை நிறைவேற்றுதற்பொருட்டு அவன் இப்போழுது உலகமெல்லாம் நிலைகுலையுமாறு யோகநிஷ்டையை மேற்கொண்டுவிட்டான்.

அஃதவ்வாறாக; அவனுடைய தேவியான அம்பிகை, பூர்வத்தில் தான் கொலைத் தொழிலாளனான தக்ஷனுடைய புதல்வியாய்த் தோன்றின பழியை நினைத்து, தன் சரீரத்தை வெறுத்து நீக்கினாள். நீக்கினவள் பிறகு, பர்வதராஜன் புத்ரியாய் ஜனித்துக் கண்ணுதற் கடவுளைக் கணவனாகப் பெறவேண்டி, தீவிரமான தவம் புரியலானாள். ஆதலால் அவ்விருவருக்கும் திருமண முடிவதாயின் நும்மை அரிதிற் பற்றிய அச்சமும் அகன்று விடுவதாகும். அவர்கள் செய்கிற தபஸ்ஸின் மஹிமையால் யாம் அவர்கட்கு ப்ரத்யக்ஷமாகி, அவர்களுடைய அபீஷ்டத்தின்படி விவாஹத்தை நிறைவேற்றிவைக்க விரும்புகின்றோம். அன்றியும் அதிசீக்ரமாக, தேவவிரோதியும் துராத்மாவுமான தாரகாசுரனை வதைத்து உலகத்தை உய்விக்கக் கருதியுள்ளோம். ஆதலால் நீவிரனைவரும் அவரவர்க்குரிய ஸ்தானத்தையடைந்து அங்கே ஸகலவிதமான வைபவங்களோடும் பழமை போலவே பயமில்லாது வாழ்வீர்களாக" என்று திருமால் கட்டளையிட்டருளினான். அதுகேட்டுப் போர உகந்த அயன் முதலான அமரர்கணங்களெல்லாம் அஞ்சலிஹஸ்தர்களாய், மும்முறை தாழ்ந்து வணங்கி, உடல் புளகங்கொண்டு கண்ணீரரும்பத் தத்தம் இருப்பிடம் ஏகினார்கள்.

## மணம் புரிவித்தல்

அவ்வகையாகச் சிலநாட்கள் கழிந்தவாறே சிவபெருமான் தன் தவநிலை முற்றுப்பெற்றுக் கண்களை விழித்து நோக்கினான். அங்ஙனம் நோக்கினவன் தன் முன்னிலையில் திருமால் காட்சியளித்தலைக் கண்ணாரக் கண்டு களிப்புற்றான்.

பலவர்க்கங்கள் நிறைந்த மாவும், பலாவும் முதலான மரங்களடர்ந்து நெருங்கிய அடவிகள் அநேகம் அங்கே உள்ளன. கொடிகளும் செடிகளும் நிறைந்தனவாய்க் குளிர்ந்த நிழலைச் செய்கின்ற பூஞ்சோலைகள் பல இடையிடையே அமைந்து அவ்வனத்தை அலங்கரிக்கின்றன. இந்தப்ரதேசங்களில் பக்ஷிஜாலங்கள் உத்ஸாஹமாய்ப் பறந்து விளையாடுவதும், வரிசைவரிசையாய்ச்சூழ்ந்த வண்டினங்கள் தமது மெல்லிய சிறகுகளால் இனிய ஓசையை எழுப்பி ரீங்காரம் செய்வதும், இளந்தென்றற் காற்று மிகவும் மிருதுவாக வீசி இன்பமளிப்பதும், தேனொழுகுகின்ற புஷ்பங்கள் திவ்யகந்தத்தோடு பரிமளிப்பதும் ஆகியவற்றைப் பார்ப்பவர்களுடைய மனமுங்கண்ணும் பரவசமாகுமென்பதில் ஐயமேயில்லை. அதுமட்டுமன்று, அங்குள்ள மரக்கிளைகளில் குரங்குகள் கூட்டங்கூட்டமாய்த் தாவிக்குதித்தலால் கமுகங்குலையும் கதலிக்குலையும் குலைந்து நாலா பக்கங்களிலும் சிதறி விழுகின்றன. அங்ஙனம் தாவிய கடுவன்கள், மரக்கொம்புகளிலுள்ள தேனிறால்களைப் பற்றி மந்திகளின் வாயில் மதுவைப் பிழிந்து அன்போடு உண்பிக்கும் அருஞ்செயல் மிகுதியும் வியப்பைத் தருவதாகும். இன்னும் அம்மலைச்சாரிபில் அருவிகள் ஆரங்களையுருட்டிக் கல்லென்னும் ஒலியோடு தரைகிழிய விழுந்து ஓடிவருகின்றன. அவற்றில் அருந்தவர்க்குரிய மங்கையரனைவரும் புனல் விளையாடிப் பொழுது போக்குவார்கள்.

இவ்வாறான வளங்களையுடைய அக்குன்றின் ஒருசார் உபவனத்தில் ஓர் அழகிய பூம்பொய்கையுள்ளது. ரோமசரென்னும் மஹரிஷியின் ஆசிரமம் அதன் கரையருகாக அமைந்து விளங்கும் அவ்விடத்தில் தவம் புரிகின்ற அவர்தம் யோகமுதிர்ச்சியால் அம்மலையின் த்வாரத்தில் நரஸிம்ஹமூர்த்தியை ப்ரத்யக்ஷீகரித்தார். அப்போது தேவர்கள் ஆசீர்வசனங்களைப் புகன்று பூமாரி பொழிந்தனர். கனலைச் சொரிகின்ற கண்ணிணைகளோடு ஏரிவீசுகின்ற திருமேனியையுடைய அந்த நரஸிம்ஹத்தின் தோற்றம் கண்டவர்களை நடுநடுங்கச் செய்தது.

பூர்வம், அமரர்களெல்லாம் அசுரரை அடிதொழுமாறு ஆணை செலுத்திக் கொடுமை புரிந்து, தன்னுடைய புத்திரனான ப்ரஹ்லாதனைப் பலவிதத்தில் ஹிம்ஸித்த ஹிரண்யாசுரனுடைய உடலத்தை இருபிளவாக வகிர்ந்து போகட்டதனாலும் அந்த ஸிம்ஹத்தின் கோபம் சிறிதும் தணியாமல் மூன்றுலகத்தையும் த்வம்சம் செய்ய மூண்டது போலத் தோன்றிற்று. ப்ரஹ்மா இந்திரன் முதலான தேவர்களெல்லாம் அதுகண்டு பெரிதும் அச்சமுற்று

முறையாகக் கேட்டுத் தெரிந்ததுடன் தாமே அந்நூல்களைப் பலமுறை பயின்று அரிய கருத்துக்களை நுணுகி அறிந்தவர்.

## நூல் பயிற்சி

சிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள், புறப்பொருள் வெண்பாமாலை, தொல்காப்பியம் முதலிய அரிய பெரிய தமிழ் நூல்களை இவர் நுணுகி ஆராய்ந்து கண்டறிந்த நயங்கள் செந்தமிழ், ஹரிசமயதிவாகரம் முதலிய பத்திரிகைகளில் வெளி வந்துள்ளன. திவ்யப்பிரபந்தம் முதலிய சமய நூல்களையும் தந்தைபால் முறையாகப் பயின்றவர். அவற்றிற்கு முந்தையோர் கண்ட உரைநுணுக்கங்களை இவர் விளக்கும் முறை பாராட்டத்தக்கது. திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களிலும், பிற நூல்களிலும் தாம் கண்ட அரிய கருத்துக்களை இனிய பொருட்செறிவுடைய வெண்பாக்களாக இயற்றியுள்ள பாடல்களால் இவர் கல்வித்திறம் நன்கு விளங்கும். அவை அச்சிடத்தக்கனவாயுள்ளன.

## ஆசிரியத் தொழில்

இவர் முதலில் அஞ்சல்துறையில் சில காலம் பணியாற்றினார். அதனால் அயலூருக்குச் செல்ல நேர்ந்தது. பிறகு அப்பணியை விட்டு விலக நேர்ந்தது. பின்னர் மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் சில ஆண்டுகள் தமிழாசிரியராக இருந்து மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்து வந்தார். அப்பால் மதுரை இராமேஸ்வரம் தேவஸ்தானம் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக 30 ஆண்டுகளுக்கு மேலாக அரும் பெரும் தமிழ்த்தொண்டு ஆற்றியுள்ளார். அவ்வாறு ஆசிரியர் பணி மேற் கொண்டிருந்த காலத்து அவர் நண்பர் அரங்க ராமானுஜதாஸர் தொடங்கிய ஹரிசமயதிவாரம் என்னும் பத்திரிகை சிறப்புற நடைபெறுவதற்கு வேண்டிய உதவிகளையும் கட்டுரைகளையும் வழங்கி உதவி புரிந்து வந்தார். அப்போது கூடல்மான்மியம்,

# கூடல்மான்மியம்

கானமுகிற்புரைகட்டழகும்பொன்
வாளவிர்பட்டுடைவாசமும்வாச
நாளமலர்த்திருநண்ணியமார்பும்
தோளுமுரத்திடைதோன்றியமறுவும்

மின்னுகவுத்துவமணியும்வெயிற்பொன்
மன்னுகிரீடமும்மலர்முகநிலவும்
பொன்னணியாரமும்மலையுறழ்புயமேற்
றுன்னியவளையொடுதொடிகளுமிலக

மேருவெனத் திகழ்வினதைகுமாரன்
பாரமியற்றுபணைப்புயமேறித்
தேரினடத்துதிருத்தனையன்பின்
வாரிதியொத் துவரும்படிகண்டான்

அப்போது ஸர்வேசுவரன் மஹாமேரு பர்வதத்துக் கொப்பான வைனதேயனாகிற வாஹனத்தின்மீது இவர்ந்து கருணையங்கடல் கரையின்றியே வருவது போல வந்து தோன்றினான். தோன்றினவன் நீலமேகச்யாமளமான திருமேனியோடு, வைத்த கண் வாங்கவொட்டாத வடிவழகுடையவனாயிருந்தான். பீதகவாடையுடுத்த திருவரையும், அலர்மேல் மங்கையான திருமகட்கினிய உறையுளாய்த் திகழும் திருமார்பமும், ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவும், ஆசிரித ரக்ஷணார்த்தமாகத் திருவாழியும் திருச்சங்கும் முதலான ஆயுதங்களைத் தாங்குகிற சதுர்புஜங்களும் திவ்யமான தேஜஸ்ஸோடு குளிர்ச்சியுடையதாய் மலர்ந்திருந்த திருமுக மண்டலமுமாக ஸேவை ஸாதித்தருளினான். ஒளிவிடுகின்ற பசும்பொன்னாலியன்ற கிரீடமும், ஹாரமும், கேயூரமும், கௌஸ்துவாபரணமும் முதலிய பூஷணங்களெல்லாம் அவன் அணிந்திருத்தலான் அழகுபெற்று விளங்கின.

இவ்வாறு எம்பெருமான் தெரிசனந்தந்த சமயத்தில் எல்லையில்லாத இன்பவெள்ளத்தில் மூழ்கினான் ஈசுவரன். தன் இரு விழிகளாலும் அவனைப் பருகுவான் போல நோக்கி அவனுடைய பாதாரவிந்தங்களில் பணிந்தான்.

அரனிடம் சென்று முறையிட்டனர். அவனும் அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி மற்றத் தேவர்களின் உதவியுங்கொண்டு தான் ஒரு பெரிய சிம்புட்பறவையாக உருவெடுத்து அந்த நரஸிம்ஹத்தை நாசம் செய்ய நினைத்தான். உடனே நான்முகன் தலையாகவும், இரவியும் மதியும் இருவிழிகளாகவும் திசை காவலர்கள் கால்களாகவும் அமைய, தான் உயிர்நிலையாக நின்று அவன் ஒரு பெரிய சரபத்தை உண்டாக்கினான். அப்பொழுது நரஸிம்ஹம் அளவு கடந்த சீற்றத்தோடு அதனையெதிர்த்து அதிசீக்கிரத்தில் தனது கரங்களால் கிழித்துக் கொன்றது. அதனால் அந்தச் சரபம் அலறிக்கொண்டு கீழேவிழுந்த சப்தம் இடிமுழக்கம்போல் எல்லாத் திசைகளிலும் செல்ல, உலகமெல்லாம் நிலைகுலைந்தன. உடனே வானவர் ஒளியுமிடந்தேடி உயிர்பிழைக்கக் கருதினர். ஆனால் ப்ரஹ்லாதாழ்வானுடைய ப்ரார்த்தனைக்கிசைந்து ஸ்ரீமந்நாராயணனும் சினந்தணிந் தருள்புரிந்தான். அவ்வண்ணமே அவன் சாந்தமூர்த்தியாகிப் பின்பு அந்த யானைமலையின் ஒரு குகையிலே யோகநரஸிம்ஹனாக எழுந்தருளுவானாயினன். அதுநிற்க.

புலஸ்திய முனிவர் புதல்வனைப் பெறவேண்டி அளவிறந்த பக்தியோடு ஹஸ்திகிரியில் அச்சுதனை ஆராதித்து வந்தார். அஷ்டாங்க விமானத்தில் அமர்ந்தருளும் ஸ்ரீ சுந்தரராஜன், அவருடைய தபோமஹிமையால் அவ்விடத்தில் அவருக்குப் ப்ரஸந்நனானான். உடனே ஸர்வ வ்யாபியாயுள்ள அவனைப் புலஸ்தியர்புகழ்ந்து ஸ்தோத்திரம் செய்தார். அதனால் திருவுள்ளமுவந்த அழகன் முனிவர் விரும்பியதை மொழியுமாறு கட்டளையிட்டான். அவர் தான் வேண்டியது புத்திரப்பேறென்று விடையளித்தார். அவ்வண்ணமே ஆகுக என்று அருள்புரிந்து, எம்பெருமான் பின்னும் அவரை நோக்கி, ஓ முனிவனே! உன்னுடைய அருந்தவத்தின் பெரும்பேறாக நாம் உனக்குக் காட்சியளித்தோம். விச்ரவஸ் என்னும் உத்தமமான புத்திரனொருவனை நீ விரைவினில் பெறுகுவை; யோகத்தினாலும், ஞானத்தினாலும் கல்வியினாலும் கருணை முதலிய நற்குணங்களாலும் அவன் உன்னைப் போலவே உயர்ந்து விளங்குவான் என்று சொல்லி விட்டு மறைந்தனன்.

இவ்வாறு நிகழ்ந்ததைப் புலஸ்தியர் தன் தர்மபத்தினியிடம் தெரிவிக்க, பதிவ்ரதையான அவளும் போர உகந்து எப்பொழுதும் போலத் தன் பர்த்தாவையே தெய்வமாகக் கருதி அவர் பணிவிடைகளைச் செய்துவந்தாள். அவ்வாறாகச் சில நாட்கள் சென்றபிறகு. அவள் தம் குலத்தை வாழ்விக்கும் குமரனொருவனைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தையும் அழகமைந்து

இராமாயணத் திருப்புகழ் முதலிய நூல்களும் இவரால் ஆராய்ந் வெளியிடப்பட்டன. இவருடைய தந்தையாருக்குப் பின்பு தமிழ் சங்கத்தில் தலைமை ஆசிரியராகவும் செந்தமிழ் பத்திராதிபராகவ இருந்து வந்த அவருடைய சிறிய தந்தையார் குமாரர் டி.வே இராமானுஜ அய்யங்கார் 1952 ஆம் ஆண்டு அண்ணாமலை பல்கலைக்கழகத்தாரால் கம்ப ராமாயண ஆராய்ச்சிப்பதிப்புக் கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் செல்ல நேர்ந்த பின் இவ தமிழ்ச் சங்கக் கலாசாலைத் தலைமையாசிரியராகவும் "செந்தமிழ் ஆசிரியராகவும் இருந்து அரிய தமிழ்த் தொண்டாற்றி இருக்கிறா தம்மிடம் தமிழ் பயில்பவருக்கு கைம்மாறு கருதாமலு தம்மெய்வருத்தம் நோக்காமலும் மகிழ்ச்சியோடு அரி கருத்துக்களையும் எளிதில் தெளிவுறுமாறு கற்பிக்கும் திற வாய்ந்தவர். இவரிடம் பயின்ற மாணவர்கள் தமிழ்நாட்டி ஆங்காங்கு கல்லூரிகளிலும் பேராசிரியராகவும் தமிழாசிரிய களாகவும் இருந்து திறம்படப் பணியாற்றியுள்ளனர்.

இவர், வான் திகழும்சோலை மதிளரங்கர் வண் புகழ்மே ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும் ஈன்ற முதல் தாயாகி நம்மாழ்வார் மீது, வேங்கடத்துறைவான் கவிராயர் இயற்றி மாறன்கோவையின் முதல் நூறு பாடல்களுக்கு விரிவுரையு மற்றவற்றிற்குக் குறிப்புரையும் எழுதி முடித்திருக்கிறார். இவ்வா தமிழ்ப் பணியிலேயே காலங்கழித்த இப் பெரியார் மறை (11.11.1964) தமிழ் நாட்டிற்கு ஈடுசெய்ய முடியாத பெரிய இழப்பாகு இவருக்கு மனைவியும், ஐந்து பிள்ளைகளும், ஒரு பெண்ணு உள்ளனர். இவருடன் பிறந்த சகோதரியின் புதல்வர்களு இவரைச் சார்ந்த சுற்றத்தினர் பலரும் தமிழ்ப் புலவர்களாக விளங் வந்தனர்.

பணிந்தவன் பின்னர் எழுந்திருந்து அவனோடு பெரிதும் அளவளாவி, வேதமந்திரங்களால் அவனை விரிவாக வாழ்த்தலானான். அவ்வகையாக அவன் வாழ்த்தியதைச் செவியாரக் கேட்டிருந்த செங்கண்மால் உவகைநிறைந்த உள்ளத்தோடு, "ஓ மஹானுபாவனே! நீ இந்த வனத்தின்கண் நெடுநாளாகத் தவம்புரிகின்றாய்; அதுகாரணமாக உனது சென்னியினின்று மெழுந்த செந்தழலானது உலகங்கள் மூன்றினையும் ஒருங்கவிக்கத் தலைப்பட்டமையால் ஊழித்தீயினும் கொடியதாயிற்று; ஆதலால் நீ யாது காரணம் பற்றி இம் மஹாரண்யத்தில் தபோநிஷ்டையை மேற்கொண்டனை யென்பதை எள்ளளவும் தாமதமின்றி எமக்கு உரை செய்வாயாக; நினது மனத்துட்கொண்ட எண்ணத்தை நிறைவேற்றுவித்தற் பொருட்டே யாம் ஈண்டு எய்தியுள்ளோம்; ஆதலால் ஒழுக்க நெறிக்கண் வழுவாது உத்தமமான தவமியற்றுகின்ற நீ விரும்பிய பயனை விரைவிற்பெற்று இன்பமுற்று வாழ்வாயாக" என்று இனிமையாய் எடுத்துரைத்தான்.

அதுகேட்டு மிகவும் அகமகிழ்வடைந்து ருத்ரன் பின்வருமாறு பிரார்த்தித்துக்கொண்டான். "எல்லாத் தேவரினும் மேம்பட்ட எம்பெருமானே! வேதஸ்வரூபியான பக்ஷிராஜனை வாஹனமாகக் கொண்டவனே! அனைத்துலகங்களையும் அளித்தற்றொழிலுடைய அச்சுதனே! குறையொன்றுமின்றி எல்லாம் நிறைந்த குணக்கடலே! பிறப்பிறப்புக்களற்ற பெரியோனே! மலையரசன் மடமகளான கவுரியென்பாள் கணவனை யடைதல் வேண்டி நீண்டகாலமாக நோற்று வருகின்றாள்! அவள் நற்குணங்களாலும், நற்செயல்களாலும், அழகினாலும் தன்னை யொப்பார் பிறரில்லாமையால் தனக்குத் தானே நிகராகச் சொல்லத்தக்கவள்; அவளைத் துணைவியாகப் பெற்று இன்பம் எய்துவதற்கு என் மனம் அவாவுகின்றது; ஆதலால் அடியேன் அவளை மணம் புணருமாறு அனுக்ரஹிக்கவேண்டும்" என்று காமசரங்களால் கருத்தழிந்தவனான முக்கண்ணன் மொழிந்த வார்த்தைகளைக் கேட்டு மாயவன் மனங்களித்தான்.

அதன்பிறகு அவன், சந்த்ரனை ஜடையிலே தரித்த சங்கரனை நோக்கி,

நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருவதைக் கண்ட புலஸ்தியர் தான் சித்தி பெறுதற்பொருட்டு மேருகிரியின் சாரலை மேவினர். அவ்விடத்தில் அவர் மாயவனையே மனதில் நினைத்து அன்புடன் வழிபட்டு அழிவில்லாத வீட்டின்பமடைந்தார்.

முன்னாளில் நாரத முனிவர் எனக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போலுணர்த்திய இந்தப் புண்ணிய கதையை வைகாசி மாஸம் சுக்லபக்ஷ த்வாதசியில் வாசித்தவர்களும் வாசிக்கக் கேட்டவர்களும் கர்மபந்தத்தினின்றும் நீங்கி மோக்ஷமடையக் கடவர். நாரஸிம்ஹமென்னும் அந்த மலையின் பெருமையைப் பேசுபவர்கள் கல்பாந்த காலம் ப்ரஹ்மலோகத்திலிருந்து பின் முத்தியும் பெறுவார்கள் என்று சொல்லி முடித்து வ்யாஸர் அவர்கள் மீண்டும் கேட்க விரும்புவது யாதென்று வினவினார்.

## அம்பரீஷனுக்கு அருள்புரிதல்

அங்ஙனம் வினாவப்பட்ட சௌனகாதி மஹரிஷிகள் வேதவ்யாசரைப் பார்த்து. ஓ முனிவர்கள் நாயகமே! விஷயாநுபவத்தின் வெம்மையால் வெதும்புகின்ற அடியோங்கள் தேவரீருடைய கருணையாகிய தண்ணிய நீரினால் தாபந்தீருமாறு அந்தப் பரமபுருஷனுடைய புண்ணிய சரிதத்தையே மேலுங்கேட்க ஆர்வமுடையவர்களாகிறோம் என்று தெரிவிக்க. அந்த ரிஷிசிரேஷ்டரும் பின்வருமாறு பேசுவாராயினர்.

முன்காலத்தில் பரம வைஷ்ணவனும் பாகவதோத்தமனுமான அம்பரீஷனென்னும் அரசனொருவ னிருந்தான். அவன் தன்னுயிர்போல மன்னுயிர்புரந்து உலகமுழுதும் தர்மநெறி தவறாமற் பாதுகாத்தற்பொருட்டு. கடல்சூழ்ந்த நிலப்பரப்பெல்லாம் கடந்து அப்பாற் செல்லவும் நினைத்துத் தென்திசைநோக்கிப் புறப்பட்டான். சதுரங்கபலத்தோடும் கூடிய சைனியம் சமுத்ரம்போலத்தன்னைப் புடைசூழ்ந்துவரத் தேரை நடத்திச் சென்று அவன் தென் தேசத்திற்கு ஒரு சிரோபூஷணமாகத் திகழ்கின்ற பாண்டியநாட்டில் தெக்ஷிணமதுரையைக் கண்ணுற்றான்.

சந்த்ரகுலத்திலுதித்த சக்ரவர்த்திகளாற் பரிபாலிக்கப்பட்டு வருகிற அந்த மதுரைமாநகரம் அழகினால் இணையற்றது. அந் நகரியைச் சுற்றிலும்அகழும் மதிலும் அரண்களாயமைந்துள்ளன. இடைவிடாது நடுக்கிச் சேர்க்கப்பட்ட

ஸ்ரீ:

# முகவுரை

**தேனறாமகிழ்த்தொடையலும்மவுலியும் திருக்கிளர்குழைக்காதும்**
**கானறாமலர்த் திருமுகச்சோதியும் கயிரவத்துவர்வாயும்**
**மோனமாகிய வடிவமும் மார்பமும் முத்திரைத்திருக்கையும்**
**ஞான தேசிகன் சரணதாமரையும்என் நயனம்விட்டகலாவே**

ஸ்ரீய:பதியாய், அவாப்த ஸமஸ்த காமனாய், ஸ்ரீ வைகுண்ட நிகேதனனாய், ஸர்வ ரக்ஷகனான ஸர்வேச்வரன் தேசகாலாவதியின்றிக்கே ஸகலரும் தன்னை ஸேவித்து உஜ்ஜீவிக்கும்படி, தன் அபார கருணையாலே ஸ்வஸ்வாமிபாவத்தை மாறாடிக்கொண்டு, அர்ச்சக பராதீனனாய் எழுந்தருளியுள்ள திவ்ய தேசங்கள் எண்ணில்லாதன உள்ளன. அவைகளுள் ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற பெருமையுடன் விளங்குவன ஒரு நூற்றெட்டுத் திருப்பதிகளேயாம்.

அந் நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் பாண்டியநாட்டுள்ளவை பதினெட்டு என்பர். மதுரை அல்லது கூடல் என வழங்கும் திவ்ய தேசமும், அவற்றில் ஒன்றாக எண்ணப்படும் ஏற்றமுடையது. அதுவே, "கோழியுங் கூடலுங் கோயில்கொண்ட கோவலன்" எனத் திருமங்கையாழ்வாருடைய பாடல்கொண்டது. அங்கே எழுந்தருளியுள்ள எம்பெருமானுக்கு, ஸ்ரீ சுந்தரராஜன் என்றும், கூடலழகர் என்றும், மல்லாண்டதோளர்* என்றும் பல திருநாமங்களுண்டு. அங்குள்ள பிராட்டியின் திருநாமம் ஸ்ரீ மதுரவல்லித் தாயாரென்பது.

அதுநிற்க: "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று, ஈண்டிய சங்கம் எடுத்தோத வேண்டிய, வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்" என்கிறபடியே பெரியாழ்வார் பரதத்வ நிர்ணயம் பண்ணியருளின ப்ரபாவமுடையதும் அந்தத் திருப்பதியேயாகும். அன்றியும், "வேதத்துக்கோமென்னுமதுபோல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்த் தான் மங்கலமாதலால்" என்னும்படி, ஸம்ஸ்க்ருத வேதத்துக்கு ப்ரணவம்போலே த்ராவிட வேதமாகிய திவ்யப்ரபந்தத்திற்குப் பாயிரமாயமைந்த திருப்பல்லாண்டவதரித்த திவ்ய தேசமும் அதுவாயிற்றென்னில், அதன் பெருமை ஒருவரால் பேசுந்தரத்தின தன்றென்பது சொல்லவும் வேண்டுமோ?

---

★ *மல்லாண்டதோளர் என்று மூலவரையும், கூடலழகர் என்று உத்ஸவரையும் வேறுபிரித்து வழங்குவதும் உண்டு.*

# கூடல்மான்மியம்

"யாவர்க்கும் மேலான தேவனே! வெண்மை நிறமுள்ள பல்வரிசையோடு மந்தஹாஸம் பொருந்திய முகத்தையுடைய மங்கையர்க்கரசியான கவுரி நின்னையே மணவாளனாக வரிக்கக்கடவள்; அன்னவளோடு நீயும் காம புருஷார்த்தத்தை அடைந்து சுகித்திருக்கக் கடவை; அன்றியும் இவ்வனத்தின்கட் பொற்றாமரையென்று ஒரு புஷ்கரணியுண்டு. அதன் கரையினருகாக அஷ்டாங்க விமானமொன்று அமையப் பெற்றுள்ளது; அதுவே யாம் அகலாதுறையும் ஆலயமாகும்; அவ்விமானத்திற்கெதிரே எமது ஸந்நிதியில் நீ எமக்கு வழிபாடியற்றுவாயாக; அதனால் எம்மிடம் அன்புபுரிகின்ற அடியார் குழாத்துள் தலை சிறந்து விளங்கும் தகுதியையும் நீ அடையக்கடவை; அந்த பாகவதோத்தமர்கள் நின்னால் விரும்பிக் கருணை பாவித்தற்குரியர். அவ்விடத்திலிருந்துகொண்டு நீ நின்னைப் பிரார்த்திப்பவர்களுக்கு இஷ்டஸித்தி யுண்டாகும்படி அனுக்ரஹிப்பாயாக. அதனால் நீ வானவர் போற்றும் வாழ்க்கையும் பெற்று நீடூழி காலம் நிலைபெற்றிருக்கக் கடவை" என்று எம்பிரான் அருளிச்செய்து பின் அந்தர்த்தானமானான்.

அவ்வாறு அவன் மறைந்தருளுந் தருணத்தில் வஸிஷ்டர் முதலான ஸப்தர்ஷிகளும் அருந்ததி முதலானோர் எழுவர் பத்நியரோடும் அவ்விடத்தை அடைந்தனர். அவர்கள் பகவானிடத்தில் நிறைந்த பக்தியுள்ளவர்கள். ஆதலால் அவர்கள் அஷ்டாங்க விமானத்தை அன்புடன் கைதொழுது பரவினார்கள்; அதனுள் எழுந்தருளியிருக்கும் மாயவனை மனமாரப் புருஷசூக்தத்தினால் புகழ்ந்து போற்றினார்கள்; அதனால் உடம்பு பூரிக்குமாறு உவகை கொண்டார்கள்; ஸாஸ்த்ரோக்தமான முறையில் அவனை அருச்சித்தனர். பலகால் ப்ரதக்ஷிண நமஸ்காரங்களும் செய்தனர். பின்னர் அவர்கள் விடைகொண்டு திரும்பினார்கள். அப்போது அவர்களைப் பார்த்து, "முனிவர்காள்! நீவிர் ஜடாதரனான பசுபதிக்கு மங்களமுண்டாக வதுவை செய்வித்துப் பின்னர் நுமதிடம் செல்லுமின்" என நாராயணன் நவின்றருளினன்.

# கூடல் மான்மியம்

கல் வரிசைகளோடு பொருந்தின கரைகளையுடைய அந்த அகழி ஆழமும் அகலமுமுடையதாய் அணுகுவோரை அச்சுறுத்துகின்றது. அதனுட்புறத்தில்அதியுன்னதமாய் வளர்ந்த பொன்மயமான புரிசைகள் சக்ரவாளகிரியை ஒப்பத் தோன்றுகின்றன. முத்துக்களாலும் ரத்னங்களாலும் இழைத்து ஒளி வீசுகின்ற கபாடங்களையுடைய வாசல்களில் கோபுரங்கள் ஆகாசத்தை அளாவி யுயர்ந்து அதிசயத்தை விளைப்பனவாகும்.

அவ்வாசல்களைக் கடந்து அப்புறம் சென்றால், சதுக்கங்களும், சந்திகளும், கடைவீதிகளும், நாடகவரங்கங்களும், விளையாடிடங்களும், செய்குன்றுகளும், இளமரக்காக்களும் வெள்ளிடைகளுமாக எங்கணும் விளங்கி இன்பமளிக்கும். துகிற் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட வீதிகள் யாவும் விசாலமாய்த் தோன்றும். ரதமும், கஜமும் துரகமும், பதாதியும் எப்பொழுதும் இடைவிடாமல் நெருக்குகின்ற அந்த நீண்ட தெருக்களில் இந்திரனோடும் குபேரனோடும் இணையிட்டுச் சொல்லுதற்குரிய செல்வக்குமரர் பலரும் சிவிகையாதிய வாகனமூர்ந்து செல்லுவார்கள். மது வொழுகுகின்ற மலர்களால் தொடுத்த கோதையையணிந்த மாதர்களநேகர் கூட்டங் கூட்டமாய்ப் போய்க் கொண்டிருப்பார்கள். தெருக்களின் இரு பக்கத்தும் விசித்திரமான வேலைப்பாடுள்ள மண்டபங்களும் கோபுரங்களும் சிற்பமுறையிற் பொற்புற அமைந்து அற்புதமான காட்சியையளிக்கும். நானா தேசங்களினின்றும் இறக்குமதியான பல பண்டங்களாலும் குறைவற நிறைந்துள்ள கடைவீதிகளின் வளத்தைக் கணித்தறியவியலாது.

மாடங்களிலும் மாளிகைகளிலுமுள்ள மேனிலைகள்தோறும் மைந்தரும் மகளிரும் அன்புடனமர்ந்து சிருங்காரமாகக் காலங்கழிப்பார்கள். அரம்பையையொத்த அழகிய மாதர்களுடைய ஆடலும் பாடலும் ஆடவர் களுக்கு அகமகிழ்ச்சி செய்யும் குழலும், யாழும், குடமுழாவும் முதலான இசைக்கருவிகளோடு பொருந்தி எழுகின்ற மங்கலகீதங்கள் அவ்வூரில் எங்கணும் முழங்கும்.

கமுகு, வாழை தென்னை முதலான விருக்ஷங்களடர்ந்த தோப்பும், துறவும் நகரத்தைச்சூழ நாற்புறமும் அமைந்துள்ளன. தாமரை, கல்லாரம், நீலோத்பலம் ஆகிய நீர்ப்பூக்கள் மலர்ந்து வாசனை வீசுகின்ற வாவிகளிலும், பங்களிலும், கேணிகளிலும், அன்னம், மயில், கபோதத்து, பூனை முதலான புள்ளினங்கள் துள்ளிவிளையாடும்.

# கூடல்மான்மியம்

இன்னும், அவ்வூரில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பெருமாளைக் குறித்தே "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு" என்று பெரியாழ்வார் மங்களாசாஸனம் செய்தார் என்பதும் ப்ரஸித்தம். பிற்காலத்தில் உடையவர் திவ்யதேச யாத்ரையாக மதுரைக்கு எழுந்தருளினவாறே "திருப்பல்லாண்டவதரித்த ஸ்தலம்" என்று அதனை மிகவும் ஆதரித்தருளி, மல்லாண்டதோளரைத் தாமும் "பல்லாண்டு, பல்லாண்டு" என்று மங்களாசாஸனம் பண்ணினார் என்று பிள்ளை லோகஞ்சீயர் அருளிச்செய்த ராமாநுஜார்ய திவ்ய சரிதையில் காணப்படுகிறது. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில்:-

**"வாழ்விப்பான் எண்ணமோவல்வினையில் இன்னும்என்னை**
**ஆழ்விப்பான் எண்ணமோ அஃதறியேன்-தாழ்விலாப்**
**பாடலழகர் புதுவைப்பட்டர்பிரான்கொண்டாடும்**
**கூடலழகாநின் குறிப்பு"**

என்று திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்காரும் திருவாய் மலர்ந்தருளினர். "புத்தூரான் பல்லாண்டு பாடவரும் மல்லாண்டதோளனடி பணிதல் செய்வாம்" என்னும் ஆன்றோர் வாக்கும் இக்கருத்தே பற்றியுள்ளது.

அவை நிற்க. இந்த மதுராபுரியின் மஹாத்ம்யமானது அஷ்டாதச புராணங்களுள் ஒன்றான ப்ரஹ்மாண்ட புராணத்தில், பன்னிரண்டத்தி யாயங்களாற் சொல்லப்பட்டிருப்பதாகத் தெரிகின்றது. அதனை மூலமாகக்கொண்டு, பிற்காலத்திற் சிறந்த புலவர் ஒருவரால் "கூடற்புராணம்" என்று ஒரு நூல் தமிழில் கவிரூபமாக இயற்றப்பெற்றுள்ளது. அதுவும் சமீபகாலத்தில்தான், மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால் செந்தமிழ்ப் பத்திரிகையின் வாயிலாக வெளியிடப்பட்டது.

அதனை இயற்றிய ஆசிரியரது ஊர், பெயர் முதலியன ஒன்றும் விளங்கவில்லை. ஆயினும் அதில் அமைந்துள்ள சொல்லணி, பொருளணி, கற்பனை முதலிய பல நயங்களையும் நோக்குமிடத்து, ஒரு சிறந்த நூலேயாகுமென்பது சிறிதும் ஐயமின்றித் தெளியக் கிடக்கிறது. அன்றியும் அது முதனூலாகிய வடமொழிப் புராணத்தைப் பெரும்பாலும் தழுவியே செல்லுகின்றதென்பதும் குறிப்பிடத்தக்கது. ஆனாலும், தமிழ்ப்புராண முறைக்கேற்ப, சுவை பயக்குமாறு ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம், நீர் விளையாடல், உண்டாட்டு முதலிய சிற்சில பகுதிகளே அதனுள் மிகுத்துக் கூறப்பட்டனபோலும். அந்நூல் பதினைந்து படலங்களில்

அதனை முனிவர்கள் மிகுந்த விருப்பத்தோடு அங்கீகரித்தார்கள். அவர்களனைவரும் உடனே ஹிமவத்கிரியின் சாரலை அடைந்தனர். பர்வதராஜன் அவர்களிடத்தில் பயமும் பக்தியும் உடையவன். ஆதலால் அவன் அவர்களுக்குப் பணிவிடை செய்தற்பொருட்டு அவர்களை எதிர்கொண்டு வரவேற்றான். மஹாதபஸ்விகளான அந்த ரிஷிகளை அவன் பலமுறை பணிந்து போற்றினான். அவர்களுக்கு ஆஸனமளித்தான்; அர்க்கிய பாத்தியங்களும் ஆசமனீயமும் உதவி உபசரித்தான்.

அதன்பிறகு அவன், "ஓ முனிபுங்கவர்களே! நீங்கள் என்னிடத்திற்கு எழுந்தருளியதனால் நான் க்ருதார்த்தனானேன்; அதனால் என்னுடைய குலமுழுதும் தூயதானது; அன்றியும் பெருந்தகையாளரான உங்களுக்கு யான் செய்தலால் நிரம்புதற்குரிய குணமொன்றுமில்லை; ஆதலால் உமது வருகையின் காரணம் என்னால் உய்த்துணரமுடியாததாகும்; ஆகவே, அதனை எனக்கு விளக்கமாக விளம்பியருளல்வேண்டும்" என்று அவர்களிடம் பிரார்த்தித்தான்.

அதுகேட்ட அருந்தவர், "கைலையங்கிரிக்குத் தலைவனான நீலகண்டன் நின் திருமகளைக் காதலிக்கின்றான்; அதனால் நீ பாக்கியமுடையவனாகிறாய்; ஆகையால் ஓ பர்வதராஜனே! நீ அவளை அவனுக்குப் பாணிக்ரஹணம் செய்து தருவாயாக" என்று கட்டளையிட்டனர். மலையரசன் அது மிகவும் நன்று என்று சொல்லி அவ்வாறே செய்வதற்கு மனங்கொண்டான். கொண்டவன் தன் உயிர்த்துணைவியான மேனைக்கு அதனை யுணர்த்தினானாக அவளும் அதற்கு உடன்பட்டனள்.

அதன்பின்பு அவரெல்லோரும் அமரர்கணங்கள் புடைசூழக் கைலாசத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். விவாஹத்திற்கு வேண்டும் பொருள்கள் யாவும் விரைவிற் சேகரிக்கப்பட்டன. கல்யாணத்திற்கேற்ற சுபமுகூர்த்தமும் கணித்தறியப்பட்டது. வெள்ளியங்குன்றில் திவ்யமான மணிமண்டபத்தில் அனைவரும் அவரவர்க்குரிய இடங்களில் அமர்ந்தனர்.

# கூடல் மான்மியம்

வேதவேதாங்கங்களைக் கரைகண்டவர்களாய் அந்தணர் மனைதொறும் அருமறை ஒலிக்கும். நியாயம், தர்க்கம், வேதாந்தம், மீமாம்சை முதலான சாஸ்திரங்களின் நிபுணர்களாகிய அவர்கள் வாக்யார்த்த விசாரம்செய்து சந்தோஷிப்பார்கள். அவர்கள் மகரகுண்டலமும், கேயூரமும் மணிக்கடகமும், பொற்பவித்திரமும் முதலான திவ்யாபரண பூஷிதர்களாய் விளங்குவார்கள்; க்ருஹஸ்தாச்ரமத்தில் நின்று, நல்லொழுக்கத்தைக் கைக்கொண்டு ஔபாசனம், அக்னிஹோத்ரம் முதலான கர்மாக்களைச் சரிவர அனுஷ்டிப்பார்கள். வாஜபேயம், அஸ்வமேதம், பௌண்டரீகம் முதலான யாகங்களையும் செய்வார்கள். இன்னும் அவர்கள், தயை, சாந்தம் முதலான நற்குணங்களுக்கு உறைவிடமாய், தானம் முதலாயின செய்வதில் தமக்கு நிகரில்லாத தார்மிகர்களாய் எல்லாராலும் புகழ்ந்து போற்றப்படுகிறார்கள் அங்குள்ள அரசர்களனைவரும் வில் தொழிலும் மல் தொழிலும் நன்கு பயின்றவர்கள். அவர்கள் வீரம்மிகுந்த வெற்றியாளர்களாகையால் தங்கள் நகரத்திற்கு வேற்றரசரால் விளையும் தீமை சிறிதுமின்றிப் பாதுகாக்கும் ஆற்றலுடையவர்கள்.

இவ்வாறு ஒவ்வொரு வருணத்தாரும் தத்தமக்குரிய தொழில்களைச் செவ்வனே இயற்றிச் சீரும் சிறப்புமெய்தி வாழ்ந்துவருகிற அந்த மதுரை மா நகரத்தின் வளங்களையெல்லாம் கண்ணாரக் கண்டுகளித்த அம்பரீஷனென்னும் அவ் வரசர்பெருமான் பெரிதும் வியப்புற்றவனானான். அப்பால் அவன் அந்த நகரியை உத்தரமதுரைக்குச் சமானமான உயர்வுடையதென்று பாராட்டி மற்றும் சிறிதுதூரம் சென்றான். அவ்வளவில் அங்குள்ள அஷ்டாங்கவிமானம் அவன் கண்ணுக்குத் தோன்றிற்று.

அந்தவிமானம் மிகவும் உத்க்ருஷ்டமான த்ரவ்யங்களாலாகிய திருப்பணிகளையுடையது ஸ்ரீவைகுண்டமே பூலோகத்தில் வந்து தங்கினதுபோலச் சிறந்து விளங்குமாறு தெய்வத்தச்சனால் இயற்றப்பட்டது. குமுதன் முதலான சாரதர்களும், சண்டவன் முதலான துவாரபாலகர்களும், சேனாநாயகர் முதலான பாகவதோத்தமர்களும் அதன் பாதுகாவலில் அமர்ந்துள்ளனர். அவ்விமானத்தைச் சுற்றிலும் ப்ராகாரங்களும் வாசல்களும் வகுக்கப்பட்டுள்ளன. அவ்வாசல்கள் தோறும் ப்ரஹ்மேந்திராதி தேவர்களும், அஷ்டதிக்பாலர்களும் நித்யசூரிகளும் முதலாயினார் எப்பொழுதும் குழுமி நிறைந்திருப்பதையும் அவ்வரசன் கண்டான்.

அவைகளையெல்லாம் பார்த்தானபிறகு, அம்பரீஷன் அந்த விமானத்தினுள்ளே எழுந்தருளியிருக்கிற எம்பெருமானை ஸேவித்து இன்ப

# கூடல்மான்மியம்

எழுநூற்றைம்பது செய்யுட்களுடையதாகப் பாடப்பட்டிருக்கிறது. அப்பதினைந்து படலங்களும் கிருதகாண்டம், திரேதகாண்டம், துவாபரகாண்டம், கலிகாண்டம் என்னும் நான்கு காண்டங்களில் அடங்குகின்றன. அவ்வக் கதைகள் நிகழ்ந்த காலம் பற்றி அவ்வக் காண்டங்கள் பெயர் பெற்றனவென்று தோன்றுகிறது. அதனால் ஈசன் தவம்புரிதல் முதல் காசிபன் முதலாயினார் வரம் பெறுதல் ஈறாகவுள்ள செய்திகள் கிருதயுகத்தில் நிகழ்ந்தன என்றும், பிருதுச்சக்ரவர்த்தி பூஜித்தலும், காலநேமியை வதைத்தலும் திரேதாயுகத்தில் நிகழ்ந்தன என்றும், புலஸ்தியருக்குப் புதல்வனையளித்தலும் அம்பரீஷனுக்கு அருள்புரிதலும் துவாபரயுகத்தில் நிகழ்ந்தன என்றும், ஊர்வசி சாபநீங்குதல் முதல் பட்டர்பிரான் பொற்கிழி பெறுதல் முடியக் கலியுகத்தில் நிகழ்ந்தன என்றும் அறிந்துகொள்ளலாம்.

இனி, அக் "கூடற்புராணம்" தமிழ்ச்செய்யுள் நடையிற் பயிற்சியுடையார்க்கன்றி எல்லார்க்கும் எளிதிற் பொருள் விளங்காதிருப்பது கருதி, அதனையே ஆதாரமாகக்கொண்டு "**கூடல்மான்மியம்**" என்னும் பெயருடன் இச்சிறு புஸ்தகம் இப்பொழுது என்னால் எழுதலாயிற்று. இது தனக்கு மூலமான கூடற்புராணத்தின் போக்கைப் பெரிதும் அடியொற்றிச் செல்லுவதாயினும், வசன நடைக்கேற்பச் சிற்சில மாறுதல்கள் இதன்கண் இன்றியமையாவாயின. என்றாலும் மூலத்தில் இல்லாத விஷயங்கள் சிறிதேனும் இதிற் புகுத்து எழுதப்படவில்லையென்று உறுதியாய்ச் சொல்லலாம். அது நிற்க.

மிகச் சிற்றறிவுடைய என்னால் மேற்கொள்ளப்பட்ட இக்காரியத்தில் எண்ணில்லாத பிழைகள் இடம் பெற்றுள்ளனவென்பது சொல்லாமையே அமையும். ஆதலால் அக்குற்றங் குறைகளைப் பொறுத்தருளுமாறு கற்றறிந்த பெரியோரைப் பலமுறையும் பணிவுடன் வேண்டிக் கொள்ளுகிறேன். இச்சிறு கைங்கர்யத்தை அடியேன் இயற்றுமாறு அநுக்ரஹித்த ஸ்ரீ கூடலழகப் பெருமானுடைய திருவடிப்போதுகளையே எப்போதும் சிந்தித்து வாழ்த்துவேனாக.

மதுரை
10-2-1925

இங்ஙனம்
திரு.நா. அப்பனையங்கார்.

பின்பு ஹோமாக்னி வளர்க்கப்பட்டது. வேதவிதிப்படி உதக பூர்வமாகக் கவுரியைக் கங்காதரனுக் களித்தார்கள். இவ்வாறு ஈசன் திருமணம் இனிதாக நிறைவேறிற்று. த்ரிநேத்ரனான சிவன் கவுரியோடு கூடி திவ்யபோகங்களை அனுபவிக்கலானான். அதனால் தேவர்களும், கந்தர்வர்களும், யக்ஷர்களும், கின்னரர்களும், முனிவர்களும், சித்தர்களும், சாரணர்களும் முதலானோர் அனைவரும் ஆனந்தசாகரத்தில் அழுந்தினார்கள். ஆதலால் இமையவரெல்லாம் இத்தகைய இன்பமெய்துதற்கு ஸ்ரீவைகுண்ட நிகேதனான ஸர்வேசுவரனுடைய திருவருளே காரணமாயிற்று" என்று இவ்வரலாறு முழுமையும் வேதவ்யாஸர் சௌனகாதியர்களுக்கு விளங்குமாறு கூறிமுடித்தார்.

பின்னும் அவர், ஆழ்ந்து நுணுகிய கேள்வியையுடைய அருந்தவர்களைப் பார்த்து, அவர்கள் மேலுங் கேட்கவிரும்புவது யாதென்று வினவினார். அதைக்கேட்டு அவர்கள் நிறைந்த ஆர்வமுடையவர்களாய், "பராசரமுனியின் பரம காருண்யத்தால் வையத்தை வாழ்விக்க வந்தவரே! கரதலாமலகமாகக் கல்விநிலை கண்டவரே! வேததுல்யமான இப்புராண வரலாற்றின் தொடர்பினையே அடியோங்களுக்கு விளம்பியருள்வீராக" என்று வேண்டிக்கொண்டார்கள். அவ்வாறே அவரும் அதனை மேலே சொல்லத் தொடங்கினார்.

"க்ருதமாலாநதி தீரத்தில் கதலீவன க்ஷேத்ரத்தில் விஸ்வகர்மாவினாலமைக்கப்பட்ட விமானத்தின் கண்ணே பரமபுருஷனான பகவான் எக்காலத்திலும் நீங்காமல் எழுந்தருளியுள்ளான். க்ருத யுகாதியில் ஸநகாதி முனிவர்களின் பொருட்டு ஸ்ரீமந் நாராயணனை நான்முகன் வேதவிதிப்படி ஆராதித்தான். அதனால் அவர்களுக்கு அருள் சுரந்தவனான வாசுதேவன், வைகுந்த வான் போகந்தன்னையிகந்து, அவனியை அடைந்து, அவ்வஷ்டாங்க விமானத்திலே திருக்கோயில் கொண்டான்.

கோடிசூர்ய ப்ரகாசமாய் விளங்குகின்ற அவ்விமானம் பாண்டியனாட்டின் பலவிடங்களிலும் பரவி உலாவுவதாகும். அதன் இருபுறங்களிலும்

வெள்ளத்தில் மூழ்கினான். தன்னுடைய வடிவழகினால் யாவரையும் ஈடுபடுத்தும் அந்த சுந்தரராஜன் ஸ்ரீபூமிநீளாஸமேதனாயிருந்து அரசனுக்கு அநுக்ரஹம் புரிந்தான்.

அவ்வாறு அருள்சுரந்த மாயவனை அரசன் மனமார வாழ்த்தி, அவனுடைய திருவடிகளில் தெண்டன் ஸமர்ப்பித்தான். அவனுடைய திவ்ய சௌந்தர்யத்தைக் கண்டு திகைத்துப் புளகாங்கிதங் கொண்டு, அவ்வழகைப் பருகுவான் போன்று தன் கண்களால் நோக்கிய வண்ணமாக நெடுநேரம் நின்றான். புருஷசூக்தத்தினால் அவனைப் புகழ்ந்து, பக்திபுரஸ்ஸரமாகப் பல தடவை ப்ரக்ஷிணஞ் செய்தான். ஆடிப்பாடி அவனை அலற்றிப் பல வகையான அவஸ்தைகளையடைந்தான். மீண்டும் அவன் ஒருவாறு சித்தந்தெளிந்து பெருமாளை நோக்கிப் பின்வருமாறு சொல்லித் துதித்தான்:

**தோற்றியொடுங்குடற்றுன்பப் பெருநோயை**
**மாற்றவலியின்றிமனந்தான் மிகவெருவிச்**
**சாற்றரியநின்னைச்சரண்புகலாய்வந்தடைந்தேன்**
**ஆற்றமெலிந்தேன் அலந்தேன் அருட்கடலே.**

**பொன்னிறையுந்தாமரைமென் போதனையஇன்னடியை**
**உன்னியதோர்மாத்திரையேகூற்றினையும்ஓட்டிவிட்டேன்**
**என் இறையே என்றுமுனைஏத்திவழிபட்டிடநின்**
**சன்னிதியில்வைகும் தவமனெக்குநல்காயே.**

**ஐயாவழிவழிநின் அம்பொன் அடித்தொண்டர்களாய்**
**மெய்யானமுத்தர்களாய் நித்தராய்வீட்டின்பிற்**
**பொய்யாதசெல்வமுற்றபுண்ணியரிற்சேர்ப்பதெந்நாள்**
**எய்யாதயானுமுனக்கேவல்செய்வதெந்நாளோ.**

என்னுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்ட உத்தமபுருஷரே! ஸ்ரீதேவிக்கு வல்லபரான ஓ ஸ்வாமியே! களைகணற்றார்க்கு உதவி புரியும் கருணைக் கடலாயுள்ளவரே! தோற்றமும் ஒடுக்கமும் உடைய இந்த உடற் பொறையின் வேதனையால் நான் மிகவும் இளைத்து வருந்துகின்றேன். அதனால் தேவரீருடைய திருவடிப் போதுகளைத் தஞ்சமாகப் பற்றிய யான் காலனார் துயரைக் கடிந்தவனானேன். ஆகையால் அடியேன் எக்காலத்தும் தேவரீருடைய ஸந்நிதியில் வைகும் தவமுடையனாகுமாறு க்ருபைபுரிய வேண்டும். அன்றியும் வழிவழியாக அடியோங்கள் தேவரீருக்குத் திருவடித் தொண்டர்களாய் இருந்து நித்ய முக்தர்களாகுமாறு ஆட்கொண்டருள

ஸ்ரீ:

# சிறப்புப்பாயிரம்

கோபாலசமுத்திரம் ஹைஸ்கூல் தமிழாசிரியர்
**ஸ்ரீமத் ரெ. ராமையங்காரவர்கள்** இயற்றிய
**நிலைமண்டில ஆசிரியப்பா**

திருமக ளுறையும் செந்தேன் பில்கிய
மருவளர் துளவ மாலைமார் பகமும்
சதுமுகத் தொருவனும் புதுமலர்க் கொன்றை
மதியொடு மிலைச்சிய நதிபொதி சடையனும்
அருக்கர்பன் னிருவரும் உருத்திரர் வசுக்கள்
மன்பதை வெள்ளம் மாமுனி யீட்டமற்
றியாரு மியாவும் எவ்வகை உலகும்
தக்கருள் உத்தி அந்தா மரையும்
மூவுல களந்த சேவடி மலரும்
ஆழி முதல ஐம்படை தாங்கிய
பாழியத் தோளுமீ ரேழுல குந்தொழும்
பத்திமிக் குயர்ந்த உத்தமக் கவிகள்
பதின்மரும் பணித்த பாடற் றீந்தேன்
பருகிக் களி ர் இருகுழைக் காதும்
அண்டம் அனைத்தும் உண்டசெவ் வாயும்
உடையான் அரசுரர்க் குடையான் குன்றக்
குடையான் முத்திக் கொடையான் அத்தி
மூல மேயென் றோலமிட் டாற்றிய
காலமுன் நின்றதன் ஆரிடர் களைந்த
பீதக வாடைப் பெருமான் உறையும்
மேதகு வேங்கடம் விண்ணோர் ஏத்தும்
கச்சி அரங்கம் கவின்விடை மலைமுதல்
இச்சகம் எல்லாம் மெச்சுபல் பதிகளுள்
வேதப் பொருளாய் விளங்குமத் திருமால்
ஆதியில் மீனாய் அவதரித் ததுவும்
கிருதமாலாநதி இருதலை யுறுவதும்

வேகவதியாறு வெள்ளமிட்டோடுகின்றது. அதனால் அது, அன்றலர்ந்த புஷ்பங்களால் அணிபெறத் தொடுத்த ஹாரம்போல அவ்விமானத்திற் கலங்காரமாயுள்ளது. அக்காரணத்தினாலேயே அந்த நதி க்ருதமாலை யென்னும் பெயரோடு பெருமை யெய்துவதாயிற்று. இன்னும் எட்டுறுப்பிலங்கும் இவ்வெழிலுறு விமானம், பாற்கடலிலும், பரமவைகுண்டத்திலும், சூர்யமண்டலத்தும், மதுரையிலும், கோஷ்டீபுரத்திலும் எம்பெருமானுக்கு இருப்பிடமாகின்றது. அது மிகவும் உன்னதமானது; சுவர்ணகசிதமானது; ஆதலால் அது மேருமலைக்கு நிகராகும் மேன்மையுடையதாய்ச் சொல்லத்தக்கது. அதுவேயுமன்றி அது விசித்ரமான வேலைப்பாடுகள் பொருந்தியது.

அதன் சாயையானது அதனைச்சுற்றி எட்டுயோஜனை எல்லையளவும் செல்லுவதாகும். அந்த தேசத்தில் வஸிப்பவர்களுடைய புண்ணியம் ஒருவராற் புகலுந் தரத்தினதன்று. அங்குள்ள விலங்குகளும் பறவைகளும் முதலாகவுள்ள அசேதனங்களுங்கூட அழிவில்லாத முக்தியை அடைகின்றன. இவ்வாறானால் அத்தகைய விமானத்திற்கருகே தவமிழைப்பவர்களும் பக்தி புரஸ்ஸரமாகத் திருவாராதனம் செய்பவர்களும் அடையும் பலன்களுக்கு அளவேயில்லையென்பது சொல்லவும் வேண்டுமோ?

திரிவிக்ரமாவதாரமெடுத்து உலகமுழுதும் தன் திருவடியாலளந்த மஹாவிஷ்ணுவினுடைய வரப்ரஸாதத்தால், இவ்விடத்தில் தங்கிய ஸப்தரிஷிகளும் தவமாகிய தனத்தைப்பெற்று மனந்தூயராயினர். அவர்களுக்கு அஷ்டமாஸித்திகளும் கைவந்தன. அவர்கள் இகத்தினும் பரத்தினும் இன்பமெய்தி வாழ்ந்தார்கள். அதுமட்டுமன்று, நன்மையொன்றில்லா ஞமலியேயாயினும், பால்குடிமாறாப் பாலகராயினும், அருமறைதெளியா அறிவீனராயினும் அவ்வெம்பிரான் கோயிலருகே அரைக்கணமேனும் அமர்ந்திருப்பாராயின், அவர்கள் சகலமான பாதகங்களினின்றும் கழுவப்பட்டு, நல்லறிவு நிரம்பிப் பரமபதத்தைப்

வேண்டும் என்று அம்பரீஷ மஹாராஜன் அளவுகடந்த அன்போடு எம்பெருமானைப் பன்முறை இரந்து வேண்டிக்கொண்டான்.

அவ்வாறே அவ்வரசர் பெருமான் ஒரு நூறாயிர வருஷமளவும் அங்கிருந்து தவஞ்செய்தான். துவாபரயுகத்தின் அந்திமகாலம் நெருங்கியது. அப்பொழுது துளவமாலையணிந்த ஸ்ரீ சுந்தரராஜப் பெருமான் அவன் முன்பு தோன்றி "விரோதிநிரஸனசீலனான ஓ வேந்தர்வேந்தே! நீ எமக்கு அன்புடன் செய்த கைங்கர்யங்களால் அளவில்லாத சந்தோஷமடைந்தோம்; இம் மதுரைக்கு மிகவும் சமீப தேசத்தில் ஹஸ்திகிரியென்று ஒரு மலையுள்ளது; அவ்விடத்தில் கோயில்கொண்டு நரஸிம்ஹரூபியாய் ஸேவைஸாதிக்கின்ற நம்மை நீ நாள்தோறும் ஆராதிப்பாயாக; அதன்பொருட்டு இப்பொழுதே நீ அவ் வரையை நோக்கிப் புறப்படு; அங்கே சில காலம் யோக நிஷ்டையிலிருந்து சீக்கிரத்தில் மோக்ஷத்தையும் அடைவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினான்.

அவ் வார்த்தைகளைக் கேட்டவுடனே அம்பரீஷனுக்கு அக மகிழ்ச்சியும் முகமலர்ச்சியும் உண்டாயின. அவன் பெருமாளைப் பணிந்து விடை கொண்டு யானைமலையைச் சென்றடைந்தான். அடைந்தவன் அங்குள்ள ரோமசருடைய ஆசிரமத்தில் ஞான சமாதியிலிருந்து நாட்கள் சிலவற்றைக் கழித்தான். கூடலழகப் பெருமாள் கூறிய ஹிதவசனங்கள் அவன் நெஞ்சில் எப்பொழுதும் குடிகொண்டிருந்தன.

இங்ஙனம் அரசன் எம்பெருமானுடைய திருவடிகளையே எண்ணியவண்ணமாய் ஸமாதியிலிருக்கையில், ரோமசர்பொருட்டு யானை மலையில் நரஸிம்ஹமமாய் எழுந்தருளியுள்ள நாராயணன் அவனுக்கு ப்ரஸந்நனாய்ப் பரமபதமளித்தான். அதனால் அவன் பாஞ்சபௌதிகமான சரீரத்தை இவ் வுலகத்திலே கழித்துப் பொகட்டு, அமரர்கட்கும் அடைதற்கரிதான உயர்ந்த உலகத்தில் நிரதிசய ஆனந்தம் அநுபவிக்கலானான். இக் கதை பூர்வம் ஸாரஸ்வத க்ஷேத்ரத்தில் நாரதமஹரிஷியால் எனக்கு நவிலப் பெற்றதாகும்.

அந்த யானைமலையில் ஆளரியாயுள்ள அச்சுதனே முன்பு ஸனகர் முதலான முனிவரர்களுக்கு முத்தியை நல்கினான். அன்றியும் அவனே ரோமசமுனிவருக்கு அருள்சுரந்து அவருடைய பிறவித் துயரை மாற்றினான். அம் மலையினருகே அவர் யோகநிஷ்டையில் அமர்ந்திருந்த காலத்தில் எம்பெருமான் அவருடைய கண்களுக்கு எதிர்ப்பட்டான். உடனே அவர்

# கூடல்மான்மியம்

மல்லி நாடுசெய் எல்லையில் தவத்தால்
வந்தவ தரித்த மாநில மடந்தையைத்
தந்தையாய் வளர்த்த அந்தணர் பெருமான்
பரத்துவ நிச்சயம் பண்ணப் பெற்றதும்
திருப்பல் லாண்டின் பிறப்பிட மானதும்
கீரனே முதலோர் பேரவை இருந்தொண்
தீந்தமிழ் பலவாண் டாய்ந்த நற்பதியுமாம்
பாடல்சால் சிறப்பிற் கூடல்மா நகரின்
மான்மியந் தன்னை யாவரு மறியச்
சொற்பொருள் நயத்தோடு துய்யநன் னடையும்
கற்பனை அழகும் ஒப்பனை பிறவும்
பொற்புற விளங்கும் நற்றமிழ் நடையால்
அமைத்தனன் வாழி அந்தணர் மரபில்
பலர்புகழ் பெருமைப் பாரத்து வாசி
மதுரைமா நகரின் முதுதமிழ் வளர்ச்சி
கண்டிடு நான்காந் தண்டமிழ்ச் சங்கத்
தொண்டமி ழாய்ந்து கொண்டுசெந் தமிழும்
விளங்கவீற் றிருந்தே வளங்கொள்தொன் னூற்பொருள்
உளங்கொளப் பல்லோர்க் கொளிபெற உணர்த்தியும்
அரசிளங் குரிசில்முன் பரிசில்கொண் டிலகுந்
திருநா ராயணன் எனப்பெயர் சிறந்தோன்
அன்னவன் தனக்குத் தன்னிகர் மகவாய்த்
தவப்பய னென்ன உவப்பவந் துதித்துச்
செப்புபல் கலைகளிற் றேர்ச்சியுற் றிலங்கி
ஒப்பில்பல் குணங்கட் குறையுளாய் விளங்கும்
அப்பனெனும்பெய ரறிஞ ரேறே.

பெறுவார்கள். திருமாலுறையுந் திருப்பதியான இம்மதுரையின் மான்மியத்தை மானுடனொருவன் கேட்க முயல்வானாகில், அவன் அசுவமேதம் செய்த அரும்பெரும் பயனை அடைந்தவனாவான். அவன் முக்தியும் பெறுதலில் ஐயமே இல்லை" என்று இவ்வளவும் சௌனகாதியர்க் கெடுத்தியம்பி, வேதவ்யாஸர் மீளவும் அவர்களை நோக்கி, "ஓ முற்றத்துறந்த முனிவரர்களே! தத்துவ முழுதுணர்ந்த ஸத்வகுணமுடையவர்களே! இவையனைத்தும் யான்கேட்க நாரதர் எனக்குச் சுருங்கவுரைத்தார். நீங்கள் பின்னும் எதனைக் கேட்க விரும்புகின்றீர்கள்" என்று வினவினார். அதற்கு அவர்கள் அங்குள்ள தீர்த்தங்களின் விசேஷங்களை விரிவாய் வெளியிடுமாறு வேண்டிக் கொண்டார்கள். அவ்வாறே வியாஸரும் விளம்புவதானார்.

## காசிபர் முதலாயினார் வரம் பெறுதல்

எம்பெருமான் ஸந்நிதியின் ஈசான்யதிக்கில் ஸப்தஸாகரங்களும் ஒன்று கூடின ஒரு தீர்த்த விசேஷமுண்டு. அது எழுகடலென்று பெயர் கூறப்படுகிறது. முன்னொரு காலத்தில் மார்க்கண்டேய மஹரிஷி தான் தீர்த்தமாடுவதன் பொருட்டு நெடுங்காலம் தவம் புரிந்து அவ்வேழு ஸமுத்ரங்களையும் அங்கு வரவழைத்தார். அவர் விரும்பியபடியே அவையாவும் மிகுந்த உத்கோஷத்துடன் அவ்விடத்தை அணுகின. திரிபுரஸம்ஹாரஞ்செய்த ருத்ரனுடைய வில்லும், மிதிலா நகரத்திலே ஸ்ரீராகவன் வளைத்து முறித்த வில்லும் ஆகிய அவையிரண்டினுஞ் சிறந்தனவென்று சொல்லுமாறுள்ள பல அலைகளோடுங்கூடி முழங்குகின்ற அவ்வேழு கடல்களும் ஸ்ரீமந் நாராயணனுடைய ஸந்நிதியின் மாஹாத்மியத்தால் அங்கே ஒரு பொய்கையினளவாக அடங்கி ஒடுங்கித் தோற்றஞ்செய்தன.

அன்னப் புட்களும், நீர்க்காகமும் முதலான பலவகைப்பட்ட பக்ஷி ஜாலங்களும் அதனிடத்து எப்பொழுதும் ஸப்தமிடுகின்றன. பொன்னிறமான

தன்னைப் பலவாறாகப் புகழ்ந்து நமஸ்கரித்துத் தனக்கு அழிவில்லாத ஆயுளை அளிக்குமாறு வேண்டினர். அவனும் அவ்வாறே முனிவருக்கு அநுக்ரஹித்தான். அதனால் அவர், ஒருபதினாயிரம் கற்பமளவும் உயிர் பெற்றிருப்பவர்களான பல ப்ரஹ்மாக்களினுடைய ஜீவியகாலத்தைப் பெற்று, அன்பும் அறிவும் நிறைந்து பின்பு வீட்டுலகத்தில் இறுதியில்லாத இன்ப வாழ்க்கையும் எய்துதற்குரியரானார் என்று வ்யாஸர் சொல்லி முடித்தார்.

## ஊர்வசி சாப நீங்குதல்

சௌனகாதி முனிவர்கள் மறுமுறையும் வ்யாஸரை நோக்கி, பராசர புத்ரரான ஓ முனிசிரேஷ்டரே! ஸகல சாஸ்த்ரங்களையும் ஓதியுணர்ந்த உத்தம புருஷரே! உமது உபதேச மொழிகளால் யாங்கள் அறிய வேண்டுவனவெல்லாம் அறிந்தோம். உமது திருவாக்காகிய அமிர்தத்தைத் தெவிட்டுமாறு உட்கொண்டும் எமது விடாய் தணிந்திலது. மேலும் மேலும் உம்மை வினாவியறியும் வேட்கையும் மிகுகின்றது. ஆதலால் ஓ ஸ்வாமியே! வேகவதிக்கரையில் விச்வகர்மாவினால் நிர்மிதமான அந்த விமானத்திலுள்ள வ்யூகசுந்தரனை வழிபட்டுய்ந்தவர் இன்னும் எவரேனு முளரோ? அவற்றை எமக்கு அருளிச் செய்ய வேண்டும் என்று விஜ்ஞாபித்தனர். வேதவ்யாஸரும் அவ்வாறே விளம்புவதானார்.

கலியுகத்தின் முற்றான காலத்தில் சந்த்ரகுலத்தோன்றலான சக்ரவர்த்தி யொருவனிருந்தான். புரூரவனென்பது அவன் பெயர். அவன்

**ஒலிகெழும்பரவைசூழுலகமொருகுடை நிழலில்**
**உயிரனைத்தையுமணைத்துக்**
**கலிகடிந்தருள்வழி நடாத்து செங்கோலினான்**
**கருதலர்களெறிவேலினான்**
**மலிபெரும்புகழ்திசைபரப்பினான் மனுநெறி**
**வரப்பினான்மதிநிரப்பிப்**
**பொலிவுறும் கலையினான்மதனனையும் வென்றதொரு**
**பொற்பினான்புயவெற்பினான்.**

அந்தப் புரூரவனென்னும் புரவலன் உலகமனைத்தையும் ஒரு குடைக் கீழாண்டனன். அவன் கலி தோஷத்தைக் கடிந்து தன் அருளின்வழியே ஆணைசெலுத்திவந்தான். அவனுடைய ஆளுகையில் விரோதிகளால் விளையுந் தீமைகளின்றிக் குடிகள் அச்சமற்று வாழ்ந்தனர். அவன் கல்விக்

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# கூடல்மான்மியம்

## காப்பு

நீருண்ட மேகத்தில் தோன்றுகிற இடிமுழக்கம் போன்ற ருத்ரனுடைய ரூபமும், மின்னலைப் போன்ற ப்ரஹ்மதேவனுடைய ரூபமும் ஆகிய இரண்டையும் ஒன்றிலே அடக்கி, அந்தக்காளமேகம் போலத் திருவனந்தாழ்வான் மீது சாய்ந்தருளி யோகநித்திரை புரிகின்ற நாராயணன் என்னுந் திருநாமத்தின் பொருளாயுள்ள ஸர்வேசுவரனுடைய திருவடிகளைப் பணிவோமாக.

## சேனா நாயகர்

வெண்மை நிறமான வளைந்த தந்தங்களையும், மதம் பொழிகின்ற யானையின் முகத்தையுடைய புண்ணிய ஸ்வரூபியாய், மிகுந்த க்ருபையோடுங் காவலை நடத்துகிற சேனாநாயகரை வணங்குவோமாக.

## ஸ்ரீ மதுரவல்லித்தாயார்

பூர்ண சந்திரனைப்போல் பிரகாசிக்கும் திருமுகமண்டலமும், கோவைக்கனிபோலுந் திருவதரங்களும், பக்தர்கள் அன்போடு ஸ்தோத்ரம் செய்கிற அழகிய குழையணிந்த காதுகளும், கருமேகம் போன்ற கூந்தற்காடும், மானினுடைய கண்போலுள்ள இரண்டு திருநயனங்களும், தன்னுடைய நாயகன் உகந்து வர்த்திக்கிற திருமலை போலே விளங்குகிற ஸ்தனங்களும், துடிபோலும் இடையும், பத்மம் போன்ற கைகளும், ஆசிரிதர்களுடைய கதியே குடிகொண்டு விளங்குவதுபோன்ற ஸ்ரீமதுரவல்லித் தாயாருடைய திருவடிகளையும் த்யானிப்போமாக.

தாமரையும், குவளையும், நீலோத்பலமுமாகிய நீர்ப்பூக்கள் பூத்தலால் அது பொலிவுபெற்று விளங்குகிறது. சுற்றிலுமுள்ள அதன் கரையினிடத்து மாவும், பலாவும், வாழையும், தெங்கும், புன்னாகமும் முதலிய விருக்ஷஜாதிகள், வரிசை வரிசையாய் நின்று நிழல்செய்தலால் அப்பொழில் அழகுடன் விளங்குகின்றது.

இவ்வாறுள்ள அவ்வெழுகடலாகிய தீர்த்தத்தில் தேவர்களும் முனிவர்களும் தினந்தோறும் வந்து நீராடி நித்யகர்மானுஷ்டானங்களும் செய்துவிட்டுச் செல்லுகிறார்கள். அதுவேயுமன்றி ஸப்தரிஷிகளும் அதனை வழிபட்டு அணிமா முதலான அஷ்டமாஸித்திகளும் அடைந்திருக்கிறார்கள்.

இனி அவ்வெழுகடலுக்கு வடகிழக்காக அழிவில்லாத அநந்தன் தீர்த்தம் உள்ளது. சந்திரன் அதில் ஸ்நானம் செய்து ஸகல ஐஸ்வர்யங்களையும் பெற்றான். பொன்னுலகாளும் புரந்தரனும் அதன் கரையில் அநேக நாட்கள் அருந்தவம்புரிந்து மூன்றுலகுக்கும் முதல்வனாய் விளங்கினான். அன்றியும் அவ்விந்திரன் ஏவலால் அமரர்கள் யாவரும் அப்புனலின்கண் நாள்தோறும் மூழ்கி நன்மையடைகின்றனர். அவ்வாறே அந்நீரில் திளைத்து, அரம்பையர்களும் விரும்பி விளையாடுகிறார்கள். அது நிற்க.

வேண்டியவற்றை வேண்டியாங்களித்தலால் தவமே உருவெடுத்தாலனைய அத்தடாகத்தின் தெற்கே, எல்லா ஆற்றலுமுடைமையால் ஈசனுக்கு நிகரான காசிபருடைய ஆசிரமம் காணப்படுகின்றது. அது ஒரு காலத்தில் ஏழு முனிவர்களும் ஒன்றுகூடித் தவம் செய்யப்பெற்ற ஏற்றமுடையதாகும். வஸிஷ்டரைத் தலைமையாகவுடைய அந்த ஸப்த மாதவர்களும் அவ்விடத்தில் செய்த தவத்தின் பெருமையால், மிகவும் உயர்ந்த மேருவினுஞ் சிறந்த மேலான பதவியாகிய, துருவமண்டலத்து வாழ்க்கையைப் பெற்றுத் துன்பநீங்கி இன்பமுற்றார்கள். அதுவன்றியும், அந்த அநந்தன் தீர்த்தத்திற்கு அயலிலுள்ள காசிபராசிரமத்திலும் ப்ரஹ்ம கற்பமளவும் அம்முனிவர்கள் அகலாமல் வாஸம் செய்வார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

# கூடல் மான்மியம்

கடலை நிலைகண்டுணர்ந்து மனுநெறி வழுவாது மன்னுயிரோம்பினமையால் அவனுடைய புகழ் பூமண்டலமுழுதும் பரவிற்று. மலைபோலப் பருத்து வலிமை பொருந்தின தோள்களையுடைய அவன் காமனிலுஞ் சிறந்த கட்டழகுவாய்ந்து விளங்கினன்.

அத்தகைய அரசர்பெருமான் ஒருகாலத்து ஊர்வசியின் பொருட்டுத் தன்னிடத்துண்டான காம மயக்கத்தால் கருத்தழிந்தவனாகி அவளுடன் கலவியிலேயே காலத்தைக் கழித்தான். அவளும் அவனிடத்துக் கரைபுரண்டெழுந்த காதலுடையவளாயிருந்தாள். அதனால் இருவரும் இணைபிரியாமல் இன்பநுகர்ந்தும் அவர்களுடைய ஆசை அடங்காமல் மேன்மேல் அதிகரித்துக் கொண்டு வந்தது, என்று இவ்வளவும் வ்யாஸர் சொல்லக் கேட்ட அளவிலே சௌனகர் முதலான மஹரிஷிகள் அவரை நோக்கித் தெய்வ மங்கையாகிய ஊர்வசி இவ் வுலகின்கண் புரூரவ மன்னனோடு பொருந்திப்போக நுகர்வதற்குக் காரணம் யாது? என்று வினவ முனிவரும் அவ்வரலாற்றை ஆராய்ந்து பின்வருமாறு பேசலுற்றார்:

ஒரு காலவிசேஷத்தில் தேவலோகத்திலே அமரர்களனைவரும் ஒருசேரக் குழுமியிருந்தனர். அப்போது துந்துபி முதலான வாத்யங்களின் முழக்கம் சமுத்ரகோஷம்போல எல்லாவிடங்களிலும் ஒலித்தது. கந்தர்வர்களும் வித்யாதரர்களும் செவிகளுக்கு நல்ல அமுதம் போன்ற கீதங்களைப் பாகுபடுகின்ற தீங்குரலினால் பாடி யாவரையும் மகிழ்வித்தனர். அரம்பையும் மற்றைத் தேவமாதர்களும் அங்கு நர்த்தனம் புரிந்தார்கள். மேனகையும் திலோத்தமையும் நிலாக்கற்றைகளையொத்த வெண்சாமரை வீசினர். திவ்யமாய் அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தின் மீது வாசவன் இத்துணை விமரிசையுடன் வீற்றிருந்தருளினான். முல்லையரும்பேய்க்கும் முறுவலையுடைய ஐராணியும் அவனருகே அமர்ந்திருந்தனள்.

**இருந்தகாலையினிறைந்தவேத்தலையிணை முலையிறுமாப்பத்**
**திருந்துநூபுரச்சில் லொலி கல்லெனத் திகழுமேகலையார்ப்ப**
**வருந்தும்மெல்லிடைவல்லியினொல்கிடவளைக்கரம்புடைவீசி**
**விருந்துவானவர்க்கூட்டியபேரெழில்மின்னுவிட்டெறித்தோங்க,**

**விடந்த தும்பியவாளெனக்கணையென வேலெனப்பாலூடே**
**கிடந்தநீலமாமலரெனப்பரந்திணைக்கெண்டைகளெனத்**
**துள்ளிக்கடந்துவார்குழைக்கடைகிழித்தாடவர்கருத்தையும்பறித்தோடி**
**நட ந்துமீண்டகண் இரண்டுமே அநங்கவேள் நடத்தியதூ தென்ன**

# கூடல்மான்மியம்

## ஸ்ரீ கூடலழகர்

மஹாமேரு பர்வதத்தை வில்லாகக் கொண்ட சிவபிரானுக்குத திருமணம் செய்வித்தற் பொருட்டு அஷ்டாங்க விமானத்தில் திருக்கோயில் கொண்டு, பிரம்மா, சனகர், காசிபர், பிருது, அம்பரீடன் என்னுமிவர்களும், பூர்வத்தில் மதுரையிலே அரசாட்சி செய்த புரூரவஸ், மலையத்வஜன் முதலானவர்களும் தொழுது வணங்கவும் ஸ்ரீ விஷ்ணுசித்தர் பல்லாண்டு பாடவும், இங்குவந்து எழுந்தருளியிருக்கிற மல்லாண்டதோளருடைய பாதங்களில் பணிவோமாக.

## அவையடக்கம்

ஸ்ரீவிஷ்ணுசித்தருடைய திருப்பல்லாண்டின் அர்த்த விசேஷங்களைக் கேட்டு அனுபவித்திருக்கிற ஸ்ரீ கூடலழகப்பெருமாளுடைய திருச் செவிகளுக்கு நிரம்ப இன்பம் விளையுமாறு நாம் மான்மியத்தைப் பேச வல்லேமல்லோம். ஆனாலும் அபார கருணாம்ருதசாகரரான அப்பெருமாள் சக்ரவர்த்தித் திருமகனாராகத் தோன்றிய காலத்தில், பேதையான சபரி செய்த உபசாரத்தையும், அணிற்பிள்ளையின் கைங்கர்யத்தையும் போர உகந்துகொண்டாராகையால் இதையும் அவர் அங்கீகரித்தருளுவரோ அன்றோ என்று சங்கிக்க வேண்டுவதில்லை.

## வரலாறு

அநாதிஸித்தமான வேதங்களின் அர்த்தத்தை ப்ரதிபாதிக்கின்ற உபப்ரம்ஹணங்கள் பலவகையாக உள்ளன. அவற்றில் புராண வகையில் ப்ரஹ்மாண்ட புராணம் என்பது ஒன்று. அந்த ப்ரமாண்ட புராணத்தில் க்ஷேத்திரங்களின் மாஹாத்ம்யத்தை வெளியிடுவதான காண்டம் ஒன்றுண்டு. அது எம்பெருமான் அர்ச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கிற பல திவ்யதேசங்களினுடைய மாண்புகளையும் விரிவாய்ச் சொல்லுகிறது. அந்த க்ஷேத்திர மாஹாத்மிய காண்டத்தில் எண்பத்திரண்டாவது அத்யாயம்

# கூடல்மான்மியம்

இனிப் பரம பவித்திரமான சக்ரதீர்த்தம் என்னும் தடாகம் அவ்வநந்தன் தீர்த்தத்திற்கு அணித்தாயுள்ளது. அதன் கரையில் காசிபப்ரஜாபதி கணக்கில்லாத காலம் யோக நிஷ்டையை மேற்கொண்டிருந்தார். அப்போது அவர் ஸ்ரீதரனுடைய திருநாமத்தையே சிந்தையில் த்யானித்து ஜெபித்து வந்தனர். அதனால் அவர் விரும்பிய பரமபுருஷனுடைய ஜோதிமயமான ஸ்வரூபத்தை நேரில் கண்டு அளவில்லாத ஆனந்தங்கொண்டார். உடனே அவர் அந்தப் பாற்கடலிலே பள்ளிகொள்பவனான பரமயோகியைப் பலவாறாகப் புகழ்ந்து ஸ்தோத்திரம் செய்யலானார்.

**பேராயிரமோபிரமமோவெவ்வெவைக்கும்**
**வேராயகாரணமாமேனித்தனிப்பொருளோ**
**பாராயணமறைகள்பார்த்துணருந்தொல்லுருவோ**
**நாராயணவோநமோநமோவுன்னடிக்கே.**

**யோகநெறியுடையாருண்மைத்தியானமதில்**
**வேகமுறுபாற்கடலும்மேகமும்போல்வீற்றிருப்பா**
**யாகமொருவரறியாவறியநிற்பாய்**
**நாகசயனாநமோநமோவுன்னடிக்கே**

**நித்தமுத்தர்தங்கணிகழுமனுபோகமுமாய்ச்**
**சுத்தமுற்றசாத்தீகத்தோற்றமுமாய்ச்சூரிகளா**
**லொத்தமுறையேத்தநிதமோங்கியுலகளந்தாய்**
**நத்தணியுங்கையாய்நமோநமோவுன்னடிக்கே**

"எண்ணிறந்த திருநாமங்களை யுடையவரே! பரப்ரஹ்ம ஸ்வரூபியா யுள்ளவரே! ஸமஸ்த சராசரங்களுக்கும் மூலகாரணமான முழுமுதற் பொருளே! வேதத்தினால் ப்ரதிபாதிக்கப்படுகின்ற ஸ்ரீமந்நாராயண மூர்த்தியே! உம்முடைய திருவடிகளில் நமஸ்கரிக்கின்றேன்.

திருப்பாற்கடலும் காளமேகமும் போலே யோகிகளுடைய த்யானத்திற்கு விஷயமாகி, ஒருவராலும் அறியமுடியாத உருவம் அறியும்படி ஸேவை ஸாதிப்பவரே! பாம்பணையில் பள்ளிகொண்டு அறிதுயில் அமர்ந்தருளும் உமது அடிக்கமலங்களில் அன்புடன் வணங்குகிறேன்.

# கூடல் மான்மியம்

**வடிவின்மேற்புனைசெயற்கையாவியற்கையாம்வனப்பினான் மதிப்பின்றிப்
பிடியிலோ திமப்பெடையெனமிளருமோர்பெருமிதநடையாளாய்
அடியில்யாவரும் வீழ்வபோல்மயல்கொளஅரும்புபுன்னகையாளாய்க்
கொடிகுலாயமின்படர்ந்த போலுருவசிகுறுகினாளவ் வேலை.**

அவ்வமயம் அன்னப்பெடையின் அழகிய நடையுடன் மின்னற்கொடியென்று அடிபெயர்ந்து வந்தாலொப்ப ஊர்வசி அங்கு வந்து தோன்றினாள். தன் வளைபொருந்திய கைகளை இருபுறமும் வீசி அவள் நடந்துவருகையில், நூபுரங்களும் மேகலாபரணமும் கலகலவென்று சப்தித்தன. தோற்றப் பொலிவினால் ஒரு பொருளை உவமித்துச் சொல்லுதற்கரிய அவளுடைய ஸ்தனங்களிரண்டும், வல்லிபோல் துவளும் அவளது மெல்லிய இடைக்கு வருத்தத்தைச் செய்தன. காதளவும் நீண்ட அவள்கண்ணிணைகள், அநங்கவேள் நடத்திய தூதரைப் போல ஆடவருடைய கருத்தையும் பறித்தோடின. அன்றியும் அவை, விஷம்ததும்பிய வாளும் வேலும் வாளியுமென்னத் தமக்கு இலக்காயினாரைத் துன்புறுத்தும் இயல்பு வாய்ந்திருந்தன. ஒன்றனையொன்று பிரியாது, ஒற்றுமைப்பட்ட இரண்டு கெண்டை மீன்களைப் போலத் துள்ளிப் பிறழ்ந்த அவளது நயனங்களில், சுற்றிலும் வெண்ணிறமாய் இடைப்பட்ட கருவிழிகள், பாலூடே கிடக்கும் நீலோத்பலம் போலப் பரபாகமுடையனவாய்த் தோன்றின.

அவ்வாறு மிகுந்த பெருமிதத்தோடு அங்குவந்தடைந்த ஊர்வசியின் திருமுகத்தில் புன்முறுவல் பூத்து ஆடவரையெல்லாம் அடிமைகொள்ளுமாறு மயக்கத்தை விளைவித்தது. அன்றியும், அங்குக் கூடியிருந்த வானவர் கண்களுக்கு நல்விருந்தா யமைந்த ஓர் அபூர்வமான அழகு அப்போது அவளிடம் குடிகொண்டு விளங்கிற்று.

அதனால் அமரர்கள் யாவரும் அவளைப் பலமுறை பார்த்து,பழமை போலன்றி அவள் மனமும் செய்கையும் மாறுபட்டிருப்பதை அறிந்தனர். முகிலூர்தியான இந்திரனும் முகக்குறிப்பினால் அவளுடைய உள்ளக் கருத்தை எளிதினில் உணர்ந்துகொண்டான். உடனே அவன் அவளை நோக்கி. "காமமேலிட்டுக் கடுகி வருகின்ற பிடிபோலும் நடையையுடைய ஓ பெண்ணணங்கே! நீ எவனைக் காதலித்து இன்பமடைதற் கெண்ணினை" என்று வினவினான்.

அதுகேட்ட ஊர்வசி, வெட்கத்தினால் தலைகுனிந்து நின்றாளாயினும் தன்

## கூடல்மான்மியம்

முதலாகத் தொண்ணூற்று மூன்றாவது முடியப் பன்னிரெண்டு அத்யாயங்கள் கூடல் என்னும் பேர்பெற்ற மதுராபுரியின் மாண்புகளை விளங்க வுரைக்கின்றன.

பூர்வத்தில் ஸ்ரீமந் நாராயணன் அவற்றை நான்முகனுக்குத் திருவாய் மலர்ந்தருளினான். நான்முகன், தேவர்களும் முனிவர்களும் தன்னைச்சூழ்ந்து போற்ற, நாரதபகவானுக்கருளிச் செய்தான். பின்னாளில் அந்த நாரத முனிவரும் அவற்றை வேதவியாசருக்கு யிட்டருளினார்.

ஸ்ரீய:பதியான ஸர்வேசுவரனுடைய த்வாதசநாமங்களின் சங்க்யை யுடையனவாயிருக்கின்ற இப்பன்னிரண்டு அத்யாயங்களை முழுவது மாயினும், அவற்றிற் பாதியான ஆறத்தியாயங்களையாயினும், அவற்றிற் பாதியான மூன்றத்தியாயங்களையாயினும் அல்லது சில கிரந்தங்களை யேனும் யார் மிகுந்த ஆதரத்தோடு சொல்லுகிறார்களோ அல்லது கேட்கிறார்களோ அவர்களே அந்த நாராயணனுடைய ப்ரீதிக்குப் பாத்ரராய் நற்கதி பெறுவார்கள்.

## வையை நதி

எதனுடைய மான்மியத்தைப் பேசப்புகுந்தோமோ அந்தக் கூடல் என்னும் நகரம் தெக்ஷிணதேசத்தில் பாண்டியநாட்டில் உள்ளது. அப்பாண்டிய நாடு வையைநதியின் வளத்தால் சிறப்புற்று விளங்குவது. எல்லாவிதத்திலும் தனக்கு இணையற்றதான அவ்வையை அதிவேகமாக ப்ரவஹிக்கும் இயல்புடையதாகையால் வேகவதி என்றும், மாலை போலிருத்தலால் கிருதமாலை என்றும் பெயர் கூறப்படுகிறது.

தாமரை மலரில் வீற்றிருக்கும் ப்ரஹ்மதேவன் ஒருகாலாந்தரத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை விளக்கியதனாலுண்டான அந்த நதி பரமபாவனமான தீர்த்தத்தையுடையது. அன்றியும் அது பொதிகை

# கூடல்மான்மியம்

நித்ய முக்தர்களுக்கு அனுபாவ்யரானவரே! சுத்த ஸத்வ ஸ்வரூபியே! நித்ய ஸூரிகள் அனவரதமும் ஸ்தோத்திரம் பண்ண உலகங்கள் யாவையும் ஒருங்ககப்படுத்திய உமது பதயுகளங்களைப் பணிந்து போற்றுகிறேன்.

ஸர்வாந்தர்யாமியா யிருப்பவரே! அனைத்துயிர்களுக்கும் அந்தராத்மாவாயுள்ளவரே! ஞானஸ்வரூபியே! யோகிகளுடைய ஹ்ருதயத்தை இருப்பிடமாகக் கொண்டவரே! சுத்த ஸத்வமயமான திருமாமணி மண்டபத்தில் நித்யவாஸம் பண்ணுபவரே! உம்முடைய திருவடிகளில் தெண்டனிடுகின்றேன்.

வேதாந்தத்தில் ஒப்பற்ற ஞானச்சுடர் விளக்காய்த் தோன்றுபவரே! ஸம்யஜ்ஞானமுடைய ரிஷிபுங்கவர்கள் உம்மை ஞேயரூபமான பிரபஞ்சத்திற்குக் காரணமென்று சொல்லுவார்கள். அன்றியும் அவர்கள், ப்ரளயகாலத்தில் சகல லோகங்களையும் அழியாமல் தன்னுள் அடக்கிக்கொள்ளும் புகலிடமாயுள்ளவரும், எக்காலத்தும் அழிவில்லாது நித்யமாயுள்ளவரும் நீரேயென்று நிரூபித்துக் காட்டுவர். ஆதலால் அத்தகைய உமது பெருமை எம்போலியரால் எடுத்துரைக்கும் இயல்பினதன்று.

போற்றுதற்கரிய ப்ரக்ருதி புருஷ தத்துவங்களும் அவற்றிற்கு ஆசிரயமும் நீரேயாகிறீர். தன்னிற் சிறந்ததொன்றில்லாத தனிப் பொருளாயும், தோஷரஹிதராயும், சர்வசேஷியாயும், ஜகத்விலக்ஷணராயும், நித்யராயும் உள்ளவர் நீரேயன்றோ?

அல்லாமலும் நீர், பலவகைப்பட்ட ஜீவசுவர்க்கங்களும் மற்றும் சராசரங்களடங்கிய ஸமஸ்த லோகங்களும் உம்முடைய திருவுதரத்திலொடுங்கிய யுகாந்த காலத்தில், ஏகார்ணவமான நீர்ப்பெருக்கினிடையே ஞான பக்திகளையுடைய சுகுமாரமான சேஷபர்யங்கத்திலே, தும்புரு நாரதாதி மஹரிஷிகள் தேவகானம் செய்ய சிரமபரிஹாரம் பண்ணுமவர்போலத் திருக்கண் வளர்ந்தருளினீர்.

இந்த ப்ரகாரமாக இரண்டு ப்ரஹ்மகல்பத்தளவும் சென்ற இராப்பொழுதைப் போக்கித் திருப்பள்ளி யுணருங்காலத்தில், அந்தகாரமயமாய் ஜ்ஞானசூன்யமாய் ஸ்தாவர ஜங்கம ஸங்கம சரீரங்க ளொன்றுமின்றி யிருக்கும் ஆத்மகோடிகளை அவற்றின் கர்மானுகுணமாக

விருப்பத்தை வெளியிடாமலிருக்க முடியவில்லை. அதனால் அவள், புருஷோத்தமனென்று மனதினாற் குறித்துப் புரூரவ சக்ரவர்த்தியின் பெயரை யாவரும் அறியுமாறு, தன் தேன்போலினிய மொழிகளால் தெரிவிக்கலானாள். தெரிவிக்கவே இமையவரனைவரும் அவளை ஏசி இகழ்ந்தனர். தேவபோகத்தை வெறுத்து, மானிடனொருவனை அவள் மனங்கொண்டதற்காக இந்திரனும் எல்லையில்லாத சீற்றமடைந்தான். அதனால் அவன் அவளை உருத்து நோக்கி, ஏடி பேதாய், இமையவரைக் காட்டிலும் மக்கள் எத்துணையோ இழிந்தவராயிற்றே? அங்ஙனமிருப்பவும் அவர்களுள் ஒருவனை நீ காதலித்ததற்குக் காரணம் யாதோ? அஃதெவ்வாறாயினும் ஆகுக. இவ் வானுலகத்து வாழ்க்கையைப் பெறுதல் இனி உனக்கு எவ்வாற்றானும் இயலாததாகும். இனி உன்னைப் பார்த்திருந்தாலும் யாங்கள் பாபத்திற்குள்ளாவோம். ஆதலால் நீ இக்கணமே இவ் விண்ணுலகைத் துறந்து மண்ணுலகமடையக் கடவாய், என்று சபித்தான்.

அதைக்கேட்டவுடனே ஊர்வசியின் மனம் துணுக்குற்றது. இந்திரனுடைய சாபத்தினாலும் இமையவருடைய இகழ்ச்சியினாலும் அறிவு கலங்கினவளாய்ப் பலவாறாக ப்ரலாபித்து, அவள் தன் விதியை நொந்து கொண்டாள். பின்பு அவள் ஒருவாறு தேறி, வாசவனைப் பல முறை வணங்கித் தன் இருகரங்களையுங் கூப்பி நின்று, "ஹே தேவராஜனே! ஆலோசனையில்லாமல், பழவினைத் தொடர்பால் பிழைபடச் சொன்ன என் புன்மொழியைப் பொறுத்தருள வேண்டும்; அன்றியும் அடியாட் கிட்ட இக் கொடிய சாபத்தின் முடிவு கூறிஆறுதலடைந்து என்னைக் கருணையோடு கடாக்ஷித்தருள்வீராக" என்று கண்ணீர்விட்டுக் கதறினாள்.

அவள் அங்ஙனம் இரந்துநிற்றலைக் கண்டு யாவரும் இரக்கங் கொண்டார்கள். அதனால் சதமகனும் அவளுக்குச் சாப விடை செய்தான். "பெண்மணீ! நீ வருந்துதலொழிவாயாக; சில காலம் பூலோகத்தில் தங்கியிருந்து பிறகு எப்பொழுதும்போல எம்மிடம் சேரக்கடவாய்" என்று அவன் அவட்கு இனிதாக இயம்பினன்.

அவ்வண்ணமே ஊர்வசியும் அவ்விடத்தைவிட்டு நீங்கினாள். நீங்கினவள் சந்திரமண்டலம் தரையை நோக்கி இழிவதுபோல, அந்தரமார்க்கமாய் வந்து அவனியை அடைந்தாள். அவ்வாறு அவள் வந்து தங்கின இடம் ஒருநிர்மானுஷ்யமான வனப்ரதேசமாய் இருந்தது. காற்றினால் முறித்துத் தள்ளப்பட்டதொரு கற்பகப் பூங்கொம்புபோல அவள் அங்கே படுக்கையிற் கிடந்தாள். அப்பொழுது அவளது கையே அவட்குத்

## கூடல்மான்மியம்

மலையைத் தனக்கு வாஸஸ்தானமாகவுடைய அகஸ்திய முனிவரால் தமது கரகத்தில் நிறைத்து வைத்துக்கொள்ளப்பட்ட பெருமை வாய்ந்ததாகவும் சொல்லப்படுகிறது.

முன்னோரூழியில் சத்யவிரதன் என்னும் பாண்டியராஜன் இந்த வைகை நதியில் தர்ப்பணஞ் செய்தான். அப்போது மஹாவிஷ்ணு அவன் கையில் ஒரு மத்ஸ்யமாகத் தோன்றினார். அவ்வாறு தோற்றஞ்செய்த அவர் அக்காலத்து இறந்தனவாகிய வேதங்களையெல்லாம் மீண்டும் அளித்து அந்த சத்யவிரதனுக்கு ஏழாவது மனுபதத்தையுங் கொடுத்தார். அதனாலேயே பாண்டியர் குலத்திலுள்ளாரெல்லாரும் மீனகேதனத்தைத் தமக்கு ஓர் அங்கமாகக் கொண்டார்கள். அந்த வம்சத்திலுற்பவித்தவளான அழகுவாய்ந்த அம்பிகைக்கு மீனாக்ஷியென்று பெயர் சூட்டப்பட்டதற்கும் அதுவே காரணமாகும். இத்தகைய ப்ரபாவத்தோடு டிய அந்த மஹாநதியின் மாண்புகளனைத்தும் மூதறிவுடைய முனிவர்களாலன்றி ஏனையோரால் இயம்புந் தரத்தினவல்ல.

### பாண்டியநாடு

இது நிற்க, கிருதமாலா நதியே பெற்றதாயாகவும், வைகை நதியே வளர்ப்புத் தாயாகவும் அமையப்பெற்று மிகுந்த சுபிக்ஷத்தையுடையதாயுள்ள பாண்டியநாடு எல்லாச் செல்வத்தாலும் ஒப்பற்று விளங்குகிறது. நீர்வளத்தாலும் நிலவளத்தாலும் செந்நெற் கழனிகள்தோறும் உரிய காலத்திற் பக்குவமாய் காக்கப்பட்ட பயிர்களெல்லாம், அந்த தேசத்தில் பாத்திர மறிந்து தர்மம் செய்தவர்களுடைய குலம் தழைப்பதுபோலச் செழித்தோங்கி வளர்கின்றன. அவ்வாறு வளர்ந்த பயிர்கள் பின், உலகிலுள்ள வறுமையாகிய மத்தகஜத்தை அடக்குவதற்கு ஒவ்வொன்றே போதுமானதென்று சொல்லுமாறு பல அங்குசங்களைப்போல கதிர்க்குலை சாய்கின்றன. பூமி முழுவதும் ஒன்று நூறாக விளைவதனால் அந்த நாடு தன்னிடத்தில் வாழ்பவர்களுக்கு எக்காலத்தும் இன்பத்தையே கொடுக்கிறது.

# கூடல்மான்மியம்

சிருஷ்டிக்கு விஷயமாக்கிய உம்முடைய ப்ரபாவம் ஒருவராலும் அளவிடத் தக்கதன்று.

நீர் ஸமஸ்த ஜீவர்களுக்கும் அந்தராத்மாவாய் சர்வ சாக்ஷியாய் நிற்கின்றீர். நிரவச் சின்னமாய் இடைவிடா தியங்கும் கால தேவதையை சரீரமாகக்கொண்டு ஜீவ சமஷ்டியை மஹதஹங்கார விசிஷ்டமாக்குகிறீர். அதனால் ஸாத்விகத்துடன் ராஜஸாஹங்காரம் டி அந்தக்கரணத்தோடு ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் உண்டாகின்றன. தாமஸாஹங்காரத்தினின்றும் ஸப்த ஸ்பரிசங்களும் உண்டாகின்றன. இவ்வாறு சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களையெல்லாம் பஞ்சீகரணம் பண்ணி நானாவிதமான ப்ரும்மாண்டங்களை நீரே சிருஷ்டிக்கின்றீர். ஒவ்வொரு ப்ரும்மாண்டத்திலும் ஒவ்வொரு ப்ரஹ்மாவை உண்டு பண்ணுகிறீர். பின்பு நீர் அவர்களைக் கொண்டு பதினான்கு புவனங்களையும் பலவகைப்பட்ட உயிர்த்தொகுதிகளையும் ஸத்வாரகமாகப் படைத்தருளுகிறீர். அவ்வாறு சிருஷ்டிக்கப்பட்டவற்றை அத்வாரகமாக நீரே நின்று ரக்ஷிக்கிறீர். அதன் பின்னர், காலதேவதையை வாயிலாகக் கொண்டு ஸத்வாரகமாக நீரே ஸம்ஹரிக்கின்றீர்.

இவ்விதமாக நீர் பல்வேறு உலகங்களையும் படைத்து, அளித்து, அழிக்கும் திருவிளையாடல் புரிந்து வருகிறீர். வேதவேத்யரான உம்மையே பரம்பொருளென்று வேதங்கள் முறையிடுகின்றன. தத்வஜ்ஞானிகளாயுள்ள மஹரிஷிகள் யஜ்ஞங்களால் உம்மையே ஆராதிக்கிறார்கள்.

எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும் கர்மானுகுணமாக பலப்ராப்த்தியை அளிப்பவரும் நீரே. அந்தணர் அனைவரும் உம்மையே நிஷ்காம்யகர்மத்தினால் ஆராதித்துப் பாசபந்தமற்று நிர்தோஷமான பரமபதத்தை அடைகிறார்கள். ஞானயோகிகளாவார் சிலர் சுத்த ஸாத்விக ஸ்வரூபியாகிய உம்முடைய ஸாயுஜ்ஜியத்தை அடைந்து துக்கமற்றிருக்கிறார்கள்.

கர்ம பலமாகப் புஜிக்கப்பட்ட தாபத்ரயத்தால் வருந்தி ஹிதாஹிதங்களை அறியாமல் அஞ்ஞானாந்தர்களாய் இருப்பவர்களை ஞானச் சுடர்காட்டி உஜ்ஜீவிக்கச் செய்யும் ஆசார்ய க்ருத்யம் உம்முடையதே அன்றோ? ப்ரும்ம நிஷ்டர்களுக்கு ஸதானுபாவ்யராயுள்ளவரும் நீரேயாவீர்.

தலையணையாக அமைந்தது. அவள் போர்த்தியிருந்த செம்பட்டாடையினுள்ளே புடைத்துத் தோன்றிய அவளுடைய அவயவங்களெல்லாம், அக்கற்பகக் கொம்பினில் அரும்புகள் முகிழ்த்தாற்போல விளங்கின.

அவ் வனத்தின்கண் ஊர்வசி தன்னந்தனியளாயிருந்து, இனத்தைவிட்டுப் பிரிந்த மான்பிணைபோல மயங்கினாள். புணை கவிழ்ந்த மீகான்போல அவள் நெடுநேரம் புலம்பி வருந்தினாள். அதன்பிறகு அளவில்லாத துன்பத்தினால், கணை உறைபுகுந்தாலென்னக் கண்களை மூடி அவள் அயர்ந்து நித்திரைபோயினாள். அப்பொழுது அவளைப் பார்மகள் தரிக்க, துயிலெனுந் தெய்வமங்கை தானும் துணையிருப்பவள்போல் அவள்பாற் சேர்ந்தனள்.

அவ்வளவில் ஊர்வசி ஒரு அரிய கனாக்கண்டாள். துக்க சாகரத்திலே துயில்பவளான அவள்முன்பு, செந்தாமரைக் கண்ணனான திருமால் ஒரு சுந்தரபுருஷனாகத் தோன்றி அவட்கு அபயமளித்தான். மீண்டும் அவன் அவளை நோக்கி, "ஹே திவ்யசுந்தரீ! இந்திரியங்களை ஒருப்படுத்தி எம்மையே சிந்தித்திருக்கிற நீ ஏன் துயருறுகின்றனை? இனி அதனை அறவே ஒழித்துவிடு; தேவலோகத்தில் உபேந்திரனாக விளங்குகின்ற நாம், உன்னை வாழ்விப்பதற்காகவே, வையைக் கரையில் கதம்பவன மத்தியில் அஷ்டாங்க விமானத்தில் இங்கு எழுந்தருளியுள்ளோம்; ஆதலால் நீ எம்முடைய அடியவர்க் கடியனான புரூரவனென்னும் புரவலனுடன் கூடி இன்புறுவாயாக; அதன் பிறகு நீ வானுலகமெய்தி வீடுபேறும் அடையக் கடவை" என்று திருவாய்மலர்ந்தருளினான். உடனே ஊர்வசியும் கண்விழித் தெழுந்தனள். தன் கனவிடைத் தோன்றின புருஷன் வ்யூகசுந்தரனே யாகுமென்று அவள் அவனைப் பலவிதமாக ஸ்தோத்திரம் செய்தாள்.

அவ்வேளையில் புரூரவசக்ரவர்த்தி தன் பரிவாரங்களோடு அவ்வனத்தில் வேட்டையாடுதற்கு வந்தான். வந்தவன் அங்கு ஒப்புயர்வில்லா அழகினையுடைய ஓர் தெய்வமாது நிற்றலைக்கண்டு பெரிதும் வியப்புற்றான். அவளது மலையொத்த முலையையும் வேயொத்த தோளையும் கொடி போன்ற இடையையும் மான் போன்ற விழியையுங் கண்டு அவன் தான் கருதி வந்த வேட்டமாகிய தொழில் வேறொன் றுண்டென்பதை அறவே மறந்தொழிந்தான்.

# கூடல்மான்மியம்

*"பொன்னனார்போகமென்னப்புலனெலாம்போகமோங்கும்*
*தென்னனாட்டணியின்சீர்மைதேவர்நாட்டிடத்துமுண்டோ*
*அன்னநாட்டிறைவன்வானத்தமரர்வேந்தனையுநீர்க்கோன்*
*தன்னையும்புறங்கண்டேழுமழையையுந்தளையிட்டானே".*

என்றபடி அந்த நாட்டிலுள்ளாரனுபவிக்கும் அனுபவமெலாம் தேவலோகத்திலும் அரியனவென்றே சொல்லலாம். ஒருகால் அந்நாடாளும் அரசனான பாண்டியன் தேவேந்திரனையும் வருணனையும் போரிலே புறங்கண்டு சப்தமேகங்களையுந் தளையிட்டானென்றால் அவனுடைய நாட்டில் வளத்திற்கும் அனுபவங்களுக்கும் என்ன குறைவுண்டு?

அந்த தேசத்திலுள்ளார் தமது விளைபொருள்களில் ஆறிலொன்றரசனுக்களித்து மீந்ததை தேவாலயங்களுக்கும், ப்ராஹ்மணர்களுக்கும் பிதிர்க்களுக்கும், வித்வான்களுக்கும் பங்கிடுகிறார்கள். தானம், மானியம், மடப்புறம், சத்திரம், சாலை முதலான நல்ல வழிகளிலும் வேண்டிய அளவு செலவிட்டு எஞ்சியதையே தங்களுக்குரியதாக ஆக்கிக்கொள்ளுவார்கள். அவ்வாறு தமது பங்காகவுள்ளவற்றையும், அவர்கள் உண்ணுவதற்குமுன் வைசுவதேவம் செய்தும் ஞானிகளுக் களித்தும் பிறகு தாமுட்கொள்வது வழக்கமாயிருக்கிறது.

அங்குள்ளாரனைவரும் த்ரிகரணங்களாலும் தர்மம் செய்வதிலேயே நோக்கமுடையவர்கள். அவர்கள் சரீரத்தினால் மிகவும் வருந்திச் செய்வனவெல்லாம் பிறர்களுக்கு ஹிதமாவனவேயாகும். தமது வாயினாற் சொல்லுஞ் சொற்கள் அவர்கள் செய்கைகளைக் காட்டிலும் பதின்மடங்கு இனிமையுடையனவாயிருக்கும். அப்போது அவர்களுடைய உள்ளமும் அதனினும் பன்மடங்கு உவகையுடையதாயிருக்கிறது. அப்படி தர்மம் செய்வதிலும் அவர்கள் தமக்கென்று ஒருவிதமான ப்ரயோஜனத்தைக் கருதுவதில்லை.

அன்றியும் நீர், உம்மை அடைந்த அஜ்ஞரையும் ப்ரும்மஜ்ஞானிகளாகச் செய்கிறீர். அவர்களுடைய ஸமஸ்த பாபங்களையும் தொலைத்து உமது திருவடிக்கீழ்த் தொண்டர்களாக்கிக் கொண்டருளும் உம்முடைய கருணையை என்னென்றுரைப்பது?

கலிகால தோஷத்தால் துஷ்டர்கள் ஸாதுக்களுக்குத் தீங்கிழைத்து வைதிக தர்மங்களுக்கு இடையூறு புரிகிறார்கள்; அப்போது அந்த தர்மங்களுக்கு அழிவுண்டாகாமல் பாதுகாக்க வேண்டி நீர் மானிடருள் மானிடராய் வந்து அவதாரம் செய்வீர். அறிவுடையார்க்கும் அஃதில்லாதார்க்கும் ஒக்க நின்று அருள் செய்தற்பொருட்டு அவ்வக் காலங்களில் அர்ச்சா ரூபமாகவும் அவதரித்தருளுவீர். அவ்வாறுள்ள உமது ப்ரபாவங்களை இவ்வளவென்று எடுத்துச் சொல்லுதல் யார்க்கும் இயலாததாகும்" என்று இங்ஙனமாகக் காசிபமுனிவர் க்ஷீராப்திநாதனான எம்பெருமானைப் புகழ்ந்து போற்றினார்.

மாசில்லாத மரகதமணிபோலும் வடிவுடையனான வாசுதேவன் அப்பொழுது பெரிதும் அகமகிழ்ந்தான். கடல்போல் நிறைந்த கருணையுடைய அவன் குளிர்ந்த வதனத்துடன் அக்காசிப முனிவரைக் கடாக்ஷித்தருளி, "நீ விரும்பியன யாவும் நினக்கு அளிப்பதற்காகவே யாம் இங்கு எய்தியுள்ளோம்; ஆதலால் நினது வேட்கையை வெளியிட்டுரைப்பாயாக" என்று அவரிடம் செவிக்கினிய செஞ்சொற்களால் திருவாய் மலர்ந்தான்.

முனிவர் அந்த அமுதமாகிய வார்த்தைகளைத் தன் செவிகளாகிற வாய்களில் மடுத்து இன்புற்றார். அவருடைய உள்ளம் உவகையால் நிரம்ப உடம்பு பூரித்தது. அதனால் அவர் தன் இருகரங்களையுங் குவித்து எம்பெருமானை வணங்கித் தடைப்படுகின்ற மிடற்றினால் கீழ்வருமாறு கிளக்கலுற்றார்.

"ஓ ஜெகத்பதியே! நீர் ஒவ்வொரு சேதனரிடத்தும் உயிர்க்குயிராய் வீற்றிருக்கின்றீர். ஆதலினால் அவரவர் மனத்தின்கண் விரும்புவன எல்லாம் உமது அறிவுக்கு விஷயமாகாதன அல்ல. ஆயினும் எனது வேட்கையை இப்பொழுது யானே தெரிவித்துக் கொள்ளுகிறேன். நெடுங்காலமாகப் புத்திரப்பேறில்லாதகுறையினால் என் மனம் கவலையுற்றிருந்தது. இச்சக்கர தீர்த்தத்தருகே யான் தவமியற்றியதற்கும் அதுவே காரணமாகும். இப்பொழுது நீர் சேவை சாதித்தருளியதனால் யான் மனக்கவலையை

# கூடல் மான்மியம்

**போது கொல்விசும்புகொல்லோ பொருப்பகங்கொல்லோசேக்கை**
**யாதுகொல் அறிகிலேமால் இருநிலத் தியங்கலானும்**
**காதுகொள் குழைமேற்பாயுங்கண்ணிமைப்பானும்பாரின்**
**மாதுகொல் எனினும் நெஞ்சம்மயங்குமேமாலைசாந்தால்.**

அவளுடைய அழகைக் கண்டு, செந்தாமரைப் பூவில் வஸிக்கும் திருமகள்தானோ? அன்றி அரம்பை முதலான தேவமாதருள் ஒருத்தியோ? அல்லது வரையாமகளோ? என்று அவன் சந்தேகங் கொண்டான். பின்பு கால் நிலந்தோய்தலாலும், கண்ணிமைத்தலாலும் அவள் ஒரு மானிட மடந்தையே என்று தேறினான். ஆயினும் அவளுடைய மாலையும் சாந்தமும் அப்ராக்ருதமான திவ்ய கந்தத்தைத் தருதலால், அவளை இன்னாளென்று துணியமாட்டாது மயங்கினான். இவ்வாறு அவளைக் குறித்து ஒரு கால் ஐயுறுவதும், ஒருகால் தெளிவடைவதும், மீண்டும் ஒருகால் ஐயுறுவதுமாக அவன் மனம் ஒருநிலைப்படாது ஊசலாடிற்று.

ஆகையால் அவன் அவளருகிற் சென்று, "ஓ மெல்லியல் நல்லாய்! நீ யார்? நின் திருப்பெயர் யாது? நினது குலமும் கோத்திரமும் யாவை? நினக்கு உறைவிடம் யாது? துணையாவார் ஒருவருமின்றித் துயருழந்துநிற்கும் நீ இப் புல்லிய தரையிடைப் பொருந்தியிருந்ததற்குக் காரணம் என்னை? இவற்றை எனக்குச் சொல்லுவாயாக" என்று இனிமையாய்க் கூறினான்.

அங்ஙனம் அவ் வேந்தர்பெருமானால் வினவப்பட்டவுடனே ஊர்வசியின் உள்ளம் களிகூர்ந்தது. அவள்உடல் புளகங்கொண்டது. அதனால் அன்பே உருவாயினாற்போன்ற அவள் மிகவும் இன்பமான வார்த்தைகளை இயம்பலானாள். "முன்பொருநாள் பொன்னுலகத்திற் புரந்தரன் கொலுவீற்றிருக்கையில் யான் அங்குச் சென்றேன். அப்பொழுது மிகுதியும் வனப்புவாய்ந்திருந்த என்னை அமரர்கோன் தன் ஆயிரங்கண்களாலும் நோக்கி சேயிழாய் நினக்கு யாவர்மீது வேட்கையுளது? செப்புவாயாக என்று பணித்தான். அதுகேட்டுச் சிற்றறிவினளாகிய யான் தேவர்களை யிகழ்ந்து புருஷர்களுக்குள் உத்தமனான புரூரவனைக் காதலிப்பதாக உரைத்தேன். உடனே அவன் வெகுண்டு என்னைச் சபித்தனன். அதனால் யான் இம் மண்ணுலகில் ஏங்கி வருந்துகின்றேன். என் பெயர் ஊர்வசியென்று சொல்லுவர். அது நிற்க என் மனதைக் கவர்ந்த ஓ மன்னர் மன்ன, கண்ணினுக்கினிய காட்சிக் காளையாகிய நீவிர் யார் என்பதை எனக்கு அறிவிக்க வேண்டுகிறேன்" என்று அவள் மிகுந்த வினயமாக மொழிந்தனள்.

# கூடல்மான்மியம்

இவ்வாறு தர்மார்த்த காமமோக்ஷங்களாகிற சதுர்வித புருஷார்த்தங்களையும் அடைவதையே அவர்கள் கருத்தாகக் கொண்டிருக்கிறார்கள். ஆதலால் அதர்மமென்பது அந்த நாட்டினின்று குடிபோயிற்று. தாம் பெற்றதையே பெரிதாக மதிக்கும் பேரறிவாளராகையால் அந்நாட்டார் துறவிகளைப்போல் விளங்குகிறார்கள். அதனால் அவர்கள் எக்காலத்தும் துன்பத்திற்காளாவதில்லை.

அன்றியும் அந்த தேசத்தில் ஒருவருக்கொருவர் விரோதமென்பது காணமுடியாது. நீல மணிபோலுந் திரு நிறத்தைக்கொண்ட மாயவனுடைய ஸ்தானத்தின் மாஹாத்ம்யத்தாலே பக்ஷிராஜனான கருடனும் ஸர்ப்பராஜனான ஆதிசேஷனும் தமது பகைமையை ஒழித்து உறவாடுதல்போல அவ்விடத்தில் புலிப்போத்தும் புல்வாயும் ஒரு துறையிலே ஒக்க நீரருந்துவனவாக வுள்ளன.

உலகமுழுவதும் ஒருகுடைக் கீழாண்ட புரூரவஸ் என்னும் அரசனும் இந்நாட்டிலிருந்துகொண்டே ராஜ்யபாரத்தை வஹித்து வந்தான். அகஸ்திய முனிவரும் தென்னாடு மிகவும் அதிசயமுடையதென்றெண்ணியே அத்தேசத்தில் நித்யவாஸம் செய்வாராயினர்.

## மதுரை மாநகரம்

இத்தகைய விசேஷங்களோடு கூடிய தெக்ஷிணதேசத்துக்கு நடுநாயகமாய் விளங்குவது கூடல் என்னும் மதுரைமாநகரமாகும். அது, ஸ்ரீ கூடலழகப் பெருமாள் உகந்தருளின திவ்யதேசமாகவுள்ளது. அதனால் அது ஸ்ரீய:பதியான ஸர்வேசுவரன் விரும்பி உறையும் பரமபதமும், பாற்கடலும், கருடவாகனமும், சர்ப்பசயனமுமாகிய இவற்றோடு ஒப்பிட்டுச் சொல்லும் உயர்வுடையதாகின்றது.

***போகபூமியையுவணையைப் பொங்குபாற்கடலை***
***நாகபாயலைப்போல்வது கூடல் மாநகரம்***

மாற்றியவனானேன். ஸ்ரீய: பதியான உம்முடைய சரண கமலங்களையே சர்வ காலமும் ஆராதித்துக் கொண்டு இவ்விடத்திலேயே இன்னல் தீர்ந்து இனிதாக இருக்கவேண்டுகிறேன். அவ்வாறே என்னைப் பின்பற்றி எனது சந்ததிகளும் தேவரீருடைய பாதாரவிந்தங்களிலே பக்தி செலுத்துபவர்களாகுமாறு திருவுள்ளம் பற்றியருள வேண்டும். அவர்கள் மேலும் பெருகிவளர்ந்து எக்காலத்தும் எல்லாவிடத்தும் உள்ளவர்களாக வேண்டும்'' என்று காசிபர் ப்ரார்த்தித்தார். ''அவ்வாறே ஆகுக'' என்று தேவதேவனும் திருவருள் சுரந்தான்.

முனிவருடைய எண்ணங்கள் யாவும் எண்ணியவாறே முற்றுப் பெற்றன. பின்பு ஸர்வேசுவரன் மீண்டும் ரிஷிசிரேஷ்டரை விளித்து, "திவ்ய தேசங்கள் பலவற்றுள்ளும் சிறந்ததான இந்த ஸ்தலத்தில் எல்லாரும் தொழுது உஜ்ஜீவிப்பதற்காகவே யாம் எழுந்தருளினோம்; உலகமுள்ளளவும் அழிவின்றி நிலைபெற்றிருப்பதாய இத்திருப்பதியின்கண் உள்ளும் புறமும் ஒரு தன்மையாக எல்லாவிடத்தும் யாம் ப்ரஸந்நமாயிருக்கிறோம்; வேத விதிப்படி ஆதரம்பெருக நம்மை அர்ச்சித்து ஆராதிக்கும் அடியார் குழாங்கள் அனுபவித்து உய்வதற்காகவே போகஸ்வரூபியாக நாம் இவ்விடத்தில் பொருந்தியுள்ளோம்'' என்று இவையனைத்தும் இனிதாகக் கூறிமுடித்துப் பிறகு கண்ணுக்கெட்டாத நெடுந்தூரத்தில் மறைந்தருளினான்.

"அவ்வாறு அவன் திருவுருக் கரந்த அன்றுதொடங்கிக் காசிபப்ரஜாபதியும் தனக்குக் கிடைத்த மேலான வரத்தினால் அளவில்லாத புதல்வர்களை அளித்து உலகத்தை நிறைவித்தார். இக்கதை முழுவதும் நாரதபகவான் எனக்கு நன்குரைத்ததாகும். இதனைக் கேட்பவர்களுக்குக் காமியமெல்லாம் எளிதிற் கைகூடும்'' என்று இவ்வளவும் வ்யாசமுனிவர் சௌனகாதியர்க்கு இயம்பியருளினார்.

## பிருதுச் சக்கரவர்த்தி பூசித்தல்

இவ்வண்ணமாக ஒருநாட் பொழுதுபுலர்ந்தது. மறுநாட்காலையில் சூரியோதயத்திற்கு முன்னதாகவே சௌனகாதி மஹரிஷிகள் ஸ்நாந ஸந்த்யாவந்தனாதி நித்யகர்மங்களை விதிப்படி செய்து முடித்தார்கள். மதுசூதனனை மனதிலே தியானித்தனர். செவிகளுக்கு நல்ல உணவாகிய கடம்பவன மான்மியத்தைக் கேட்பதிலேயே கருத்துடையவர்களாயினர். அதனால் அவர்கள் மதுவை விரும்பிய வண்டுகள் மலரை நாடிச் செல்லுதல்

# கூடல் மான்மியம்

அதனைச் செவியேற்றிருந்த புரூரவன் அவளை நோக்கி, "தையால்! யான் சந்திரன்பேரன். புந்தியின் புதல்வன். என் பெயர் புரூரவன் என்பது. யான் உன்னை மிகவும் காதலிக்கின்றேன். ஆதலால் நீ எனது உயிர்த் துணைவியாக வேண்டும். அன்றியும் இப்பொழுதே நாமிருவரும் இப் பூஞ்சோலையிற் கூடி இன்புறுவதற்கு நீ இணங்குவாயாக" என்று சொல்லி ஓர் ஏகாந்தமான இடத்தில் அவளுடன் மணந்து மகிழ்ந்தனன்.

அதன்பிறகு அரசன் தன்னுடைய அரண்மனைக்கு அழைத்துச் சென்று பெண்மணியாகிய அவளைத் தன் கண்மணி போலப் பேணி அவளுடன் ஆசைக் கடலில் அழுந்தினான். அது ஒருபுறமிருக்க அஷ்டாங்க விமானத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ கூடலழகப் பெருமாள் ஸந்நிதியின் பக்கத்தில் அழகிய மாளிகையொன்று அமைத்து அவன் அங்கிருந்து எம்பெருமானை நாள்தோறும் இறைஞ்சுவானாயினன். ஊர்வசியும் அப்பெருமாளை ஆராதித்துத் தனது ஆடலாலும் பாடலாலும் அவனை உகப்பித்து வந்தாள். அவ்வாறே அவள் அங்கு சில காலம் கழித்து, பின்பு சாபத்தினின்றும் விடுபட்டுச் சுவர்க்கம் புகுந்தனள். ஸ்ரீய: பதியான ஸர்வேசுவரனுடைய அநுக்ரஹத்தால் புரூரவ சக்ரவர்த்தியும் பரமபதமடைந்தனன்.

இந்தப்ரகாரமாக அந்த நாராயணனுடைய திருநாமத்தின் வைபவத்தை நாரத முனிவர் எனக்குச் சொல்லியருளினார். அதன் பெருமையை உணர்பவர் யாவரேயாயினும் அவர் ஸமஸ்த பாபங்களினின்றும் விடுபடுவர். பூர்வம் அஜாமிளன் என்போன் தன் இச்சையில்லாமலே பகவந்நாமத்தை உச்சரித்து அவனுடைய பாதாரவிந்தங்களை அடைந்தனனென்றால், அவனை மனமார வாழ்த்துபவர்களும் அவனிடம் இடைவிடாது அன்பு செலுத்துபவர்களும் அடையும்பேறு இன்னதென்று பேசவும் வேண்டுமோ? அவர்கள் செய்த தீவினைகள் யாவும் நல்வினைகளாக மாறிவிடும். அன்றியும் அவர்களே பிறவிப்பிணியை அறுத்து ப்ரஹ்மானந்தமும் அடையக்கடவர். இந்தப் புரூரவ ஊர்வசியின் கதையினைக் கேட்டவர்களும், பிறரைக் கேட்பித்தவர்களும், அந்த ஊர்வசியும், புரூரவனும் போலவே ஸகல போகங்களையும் அனுபவித்து முடிவில் மோக்ஷத்தையும் பெறுவார்கள் என்று இவ் வரலாறனைத்தும் சௌனகாதி முனிவர்களுக்கு வேதவ்யாஸர் சொல்லி முடித்தார்.

# கூடல்மான்மியம்

அவ்வூர் கோட்டை மதில்களாலும் அகழியினாலும் சூழப்பட்டு பல கோபுரங்களை உடையதாய் அழகுபெற அமைந்துள்ளது. எக்காலத்தும் இடையீடில்லாத திருவிழாவையுடைய வீதிகள்தோறும் ஆகாசத்தை அளாவிய மாடமாளிகைகள் நிறைந்துள்ளன. ப்ராஹ்மணர்களுக்கும் க்ஷத்ரியர்களுக்கும், வைசியர்களுக்கும், சூத்திரர்களுக்கும் ப்ரத்யேகமாக வெவ்வேறு வீதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

அந்நகரத்தின் ஒருசார் சிறுவர்கள் விளையாடுமிடங்களும், ஒருசார் வீரர்கள் ஆயுதம் பயிலுமிடங்களும், ஒருசார் ஸ்திரீ புருஷர்கள் சிருங்காரமாகப் பொழுதுபோக்குமிடங்களும் மற்றொருசார் இலக்கண இலக்கியங்கற்போரிடங்களுமாகக் காணப்படுகின்றன. இன்னும் அது சோதிடம், சிற்பம், கணிதம், சங்கீதம் முதலிய எல்லாக் கலைகளுக்கும் இருப்பிடமாகும் பெருமையுடையது.

அவ்வூரில் வாழும் மாந்தர்களனைவரும் எம்பெருமான் பக்கல் பக்தி செலுத்துவதிலிணையற்றவர்களாயிருக்கிறார்கள். அழகினாலும், செல்வத்தாலும், கல்வி கேள்விகளினாலும் குறைவில்லாதவர்களாகி அவர்கள் ப்ரஹ்மசர்யம், க்ருஹஸ்தம், வானப்ரஸ்தம், ஸந்நியாஸம் என்னும் நான்கு வகைப்பட்ட ஆச்ரமங்களினும் நின்று தங்கள் தங்களுக்கு விதித்த ஒழுக்கத்தில் வழுவாத உத்தமமான பாகவதர்களாயிருக்கிறார்கள். ஸ்திரீகளெல்லாம் மிகுந்த கற்புடையவர்களாய்த் தங்களுடைய பர்த்தாக்களுக்கு வேண்டிய சுச்ரூஷை செய்வதே காரியமாகக் கருதுகிறார்கள். ப்ராஹ்மணர்கள் ஓதும் வேதத்தின் ஒலி எல்லாவிடங்களிலும் நிறைந்திருக்கின்றது. அவர்கள் செய்யும் வேள்விகளில் எழும் ஹோமாக்னியின் புகை ஆகாயம் முழுவதும் வ்யாபிக்கின்றது. ஆதலால் அவ்விடத்தில் வர்ஷாகாலந் தவறாமல் நாடு மலிய மழைபெய்கிறது. இவ்வாறு எல்லாவிதத்திலும் சிறப்புற்று விளங்கும் மதுரை மாநகரத்தின் தன்மைகள் யாவும் முற்றச்சொல்ல முடியாதனவாகும். இது நிற்க.

போலப் பராசர புத்ரருடைய பாதாரவிந்தங்களில் தெண்டனிட்டு வணங்கினார்கள்

வேதவ்யாஸபகவான் அவர்கள் நடுவில் முனிவர்கள் நாயகமாய் விளங்கினார். அப்போது அவர் தன் தவயோகத்தால் குற்றங்கள் யாவும் முற்றக்கடிந்து ஸத்வகுண ப்ரசுரராய்த் தோன்றினர். கையிலே ஜெபமாலையை வஹித்திருந்தார். துவளுகின்ற ஆசினிப் பட்டாடையொன்று அவருடைய திருவரையினில் உடுக்கையாய்த் திகழ்ந்தது. தோளும் மார்புந் துலங்குமாறு அவர் உபவீதமணிந்திருந்தார். த்வாதச ஊர்த்வ புண்டரங்களும் தீட்டப்பெற்ற அவருடைய திருமேனி தூய்மையும் பொலிவுமுற்றுத் தோன்றியது. செந்தாமரைக் கண்ணனான திருமாலினுடைய த்யானத்திலேயே எக்காலத்தும் ஈடுபாடுடைய மனதுடன், அப்பெருமாளுடைய சரண கமலங்களிலேயே பலநாளும் மலர் தூவிப் பணிகின்ற அந்தப் பாராசரிய முனிவருடைய ஸந்நிதியில் சதுர்வேத பாரங்கதர்களான சௌனகர் முதலான ரிஷிசிரேஷ்டர்கள் எல்லாரும் இனிய மனதுடன் வீற்றிருந்தார்கள்.

பின்பு அவர்கள் வ்யாஸரை நோக்கி, "ஹே மஹாமுனியே! இம் மதுராபுரியில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை வழிபட்டு அநிஷ்ட நிரஸனத்தோடு இஷ்டப்ராப்தியும் எய்தி நலம் பெற்றவர்கள், இக் காசிபமுனிவரையன்றி வேறு யாரேனும் உளராயின் அவர்களைப் பற்றியும் அறிந்துகொள்ள அடியோங்கள் ஆவலுடையவர்களாய் இருப்பதால் அதனை விவரித்துச் சொல்லுமாறு உம்மை வேண்டிக்கொள்கிறோம்" என்று முறையிட்டனர். அது கேட்டுக் கருணையால் மனமிரங்கின வாதராயணர், நாரதர் சொல்லக் கேட்ட விஷயங்களையே தான் அவர்களுக்கு நன்றாக உரைப்பதாக வாக்களித்து, அப்பாலுள்ள கதையின் தொடர்ச்சியை அருளிச் செய்யலானார்.

"வேகவதிக் கரையிலுள்ள மதுரையின் மேற்காக ஒரு புண்ணிய தீர்த்தம் இருக்கிறது. அதற்கு கெஜதீர்த்தம் என்று பெயர் வழங்குகிறது. அஷ்டதிக் கஜங்களும் அவ்விடத்தில் அகலாது உறைகின்றன. அவை அச்சுதனிடத்தில் அளவில்லாத அன்பு பூண்டனவாகி அவனுடைய ப்ரீதிக்குப் பாத்ரமாயுள்ளன.

அதன் தென்பால் திசையில் சனகர், சனந்தனர் முதலிய முனிவர்கள்

## மலையத்வஜன் முதலாயினோர் பூஜித்தல்

அவர் மறுபடியும் அந்த முனிவர்களைப் பார்த்து, திருமந்த்ரத்தின் பெருமையை உள்ளபடியறிந்த ஓ மஹரிஷிகளே! மதிகுலம் வாழ வந்த மன்னவர் திலகனான புரூரவன் மரபின் புண்ணிய சரித்திரம் மிகவும் அற்புதமானது; அதனை உங்களுக்குச் சொல்லுவேன், கேட்பீர்களாக, என்று கூறி அக்கதையை மேலே தொடர்ந்து சொல்லலானார்.

புரூரவ சக்ரவர்த்திக்கு இந்த்ரத்யும்னன் என்று ஒரு புத்திரனிருந்தான். அவன் உயர்குணங்களனைத்திற்கும் உறைவிடமாய்த் தன்னை ஒப்பாரும் மிக்காருமின்றி உலகுபுரந்து வந்தனன். மிகுந்த பராக்ரமசாலியான அவனுக்கு மலையத்வஜன் என்பான் மகனாகத் தோன்றினான்.

**ஆயமலையத் துவசநாமவமு திக்குரிசில்**
**ஆயிரமோடெட்டுமுடிசேர்**
**தூயமலையுட்படுதராபதிகள் தெற்கிலுறை**
**சூரர் திசைஎட்டிலுறைவோர்**
**தேயமுழுதிற்குமெழுசேனைகள் பரப்பியெதிர்**
**சீறின வரைப்பொடிசெய்தே**
**போயவனிகட்டிவடமேருவரையிற்றனது**
**பேரெழுதிவைத்த புகழோன்.**

அந்த மலையத்வஜன் என்னும் பெயரையுடைய பாண்டியன் நிறைந்த செல்வமும் சிறந்த புகழும் படைத்தவன். அவனுடைய செங்கோல் செல்லாத தேசம் எங்குமேயில்லை. அஷ்ட திக்கிலும் ஆண்மையை நிறுவி, அவன் மேரு வரையிலும் தனது பெயரைப் பொறித்தனன். அங்ஙனம் அவன் வைத்த குறியை வானவரும் அறிந்தனரெனின் அவனுடைய புகழுக்கு ஓர்அளவும் உண்டோ? அது நிற்க.

அவன் மதுராபுரியை ராஜஸ்தானமாகக் கொண்டு, அகஸ்திய மஹாமுனிவரால் அபிமானிக்கப் பெற்று, அறிவிற் சிறந்தோர் அநேகருடன் சேர்ந்து ஆயிரம் ஸம்வத்சரம் அரசாட்சி செய்தான். அப்பொழுது ஒரு நாள் முத்தமிழளித்த வித்தகராகிய அத் தவசிரேஷ்டரை அவன் ஏகாந்தத்தி லெய்தித் தனக்குக் காமகம் என்னும் விமானத்தைக் கருணையுடன்

அளித்தருளுமாறு வேண்டினன். அவரும் அதனை அவனுக்கு உவகையோடு கொடுத்தார்.

அந்த விமானம் மிகவும் விரைவாகச் செல்லுமியல்புடையது. அரசன் அதனைக் கைக் கொண்டு அதி தூரம் சென்றான். கங்கை கடலுடன் கலக்குமிடத்தில் தீர்த்தமாடித் திருமாலைப் பணிந்து, பிறகு கயைக்குப் போய் மூழ்கி அங்குள்ள மாயவனையும் மனமார வணங்கினான். வேதியர்களோடும், பாகவதர்களோடும் பலவகைப்பட்ட தானங்களைச் செய்தான். பின்னர் விமானத்தை வேகமாகச் செலுத்திப் பொழுது படவருமுன்னே மதுரை வந்து சேர்ந்தான். அன்றுதொட்டுத் தினந்தோறும் அவ்வாறு சென்று திரும்புவதே அவனுக்கு வழக்கமாகிவிட்டது.

ஒருகால் அவன் புறப்பட்டுச் செல்லுகையில் மதிதொடுகுடுமி மாலிருஞ்சோலையில் அவன் விமான நிழல் தவறுதலாக விழுந்தது. உடனே அங்குள்ள விஷ்ணு பாரிஷதர்கள் தடை செய்ய அவ்விமானம் மேலே செல்லமாட்டாமல் நின்றுவிட்டது. அதுகண்ட அரசன் மெய்தளர்ந்து நின்ற எல்லைக்கண் எம்பெருமான் அசரீரியாக அவனுக்குச் சில உறுதிமொழி கூறினன். முகில் முழக்கம்போலும் கம்பீரமான இனிய குரலுடன் எழுந்த அவ்வார்த்தைகள், ஆகாசத்தினின்று துளிக்கின்ற அமுததாரைகள் போல அரசனுடைய செவிகளில் புகுந்தன.

“ஹே மலையத்வஜ மன்னவ! கேட்பாயாக. எல்லா நதிகளிலும் ஏற்றமானதும், நமது நூபுரத்தினின்று உத்பத்தியாவதுமான ஒரு புண்ய தீர்த்தம் இந்த ரிஷபாசலத்தின் மத்தியிலுள்ளது. கங்கை நதியே இங்கு அவ்வாறு வந்துளதென்பதை நீ அறியக் கடவாய். ஒருவன் கோடி ஜன்மத்தில் புரிந்த பாபங்களுளவாயினும், அந்நீரில் முழுகினால் அவை ஓடிவிடுவனவாகும். முன்பு த்ரிவிக்ரமாவதாரகாலத்தில் கமலாஸனன் நமது கால்களை விளக்கியதனாலுண்டான அந்த நன்னீர் பின்பு ஆகாயகங்கை யென்றும், த்ரிபதகை யென்றும் அழைக்கப்பட்டுப் பூமியிலே ப்ரவஹித்தது. சிலம்பினின்றும் தோன்றினமையால் அதற்குச் சிலம்பாறென்று பெயராயிற்று. அது நம் ஆச்ரிதர்க்கு சகலபோகமும் தந்து நமக்கும் இன்பமளிக்கின்றது. சங்கரனும் தனக்கு மங்களமுண்டாதற்பொருட்டே அதனை ஜடையிலே தரித்துக் கொண்டனன். ஆதலால் நீயும் அப்புனலுட் குளித்து பாகவதோத்தமர்களோடு எம்மைப் பரவி வழிபடுவாயாக. தர்மராஜனால் ஆராதிக்கப்பட்டு, இந்த ஸோம விமான நிகேதனத்தில் எழுந்தருளியுள்ள நம்மைப் பார்த்திபரனேகர் பல காலமும் பணிந்து நன்மையுற்றார்கள்.

அவ்வாறே நீயும் இவ்விடத்திலமர்ந்து, நம் அடியவர்களுக்கு அடித்தொண்டியற்றிவருவாயாக. அதனால் நீ எல்லாச் செல்வமும் எய்தி இன்புற்றுப் பின்னர் அழிவில்லாத வீடுபேறும் அடையக்கடவை என்று நாராயணன் நவின்றருளினன்.

அதுகேட்ட அரசன் நித்யதரித்திரன் நிதியைக் கண்டாற் போல அளவில்லாத அகமகிழ்ச்சி கொண்டான். எம்பெருமானுடைய ஆஜ்ஞையை சிரஸாவஹித்துத் திருச்சிலம்பாற்றில் மூழ்கினன். அவ்விடத்திலேயே வாஸமாயிருந்து, மாற்றற்ற பொன்னும் மாணிக்கமுங்கொண்டு அத் திருமாலுக்குப் பல திருப்பணிகளும் செய்தான். அங்கு அவனை ஸேவித்துக் கொண்டிருத்தலிலேயே காலமெல்லாம் கழிப்பவனாயினான்.

அப்பொழுது ஒருநாள் சக்கரவாரிதி, சுந்தரபாகு, சௌமியநாயகன், பரமசாமி, மலையலங்காரன், தெய்வசிகாமணி என்பது முதலான பல திருநாமங்களையுடைய அப் பெருமான் மலையத்வஜனை நோக்கி, "ஓ மன்னவர் பெரும! வையைக் கரையில் மதுரையென்னும் திவ்யதேசத்தில் தெய்வத் தச்சனால் செய்யப்பட்டதான அழகிய அஷ்டாங்க விமானத்திலும் நாம் அகலாது வீற்றிருந்தருளுவோம். அவ்விடத்தும் நீ எமக்குப் பல கைங்கர்யங்கள் செய்ய வேண்டும்" என்று ஆஜ்ஞாபித்தான்.

உடனே அரசனும் அப் பணியைத் தலைமேற்கொண்டு அங்கு சென்று அவனுகந்த கைங்கர்யங்களைச் செய்து, ஸ்ரீ கூடலழகப் பெருமாளுடைய திருவடி நிழலையே தஞ்சமாகப் பற்றி, தாய்போலுந் தண்ணளியுடையனாய் உலகுபுரந்து வந்தான், அங்ஙனம் சில காலம் சென்றவாறே, தன் புத்ரனாகிய சந்த்ரகேதுவென்பானைச் சக்ரவர்த்தியாக நியமித்து, அவன் தவநிலையை மேற்கொண்டவனாய் பிறகு பரமபதமும் அடைந்தனன்.

சந்த்ரகேதுவின் தவமே உருவெடுத்தாலன்ன அவனுக்கு ஒரு ஸத்புத்திரனுதித்தான். சோமசுந்தர பாண்டியனென்பது அவன் பெயர். அவனுந் தன் முன்னோர் போலவே அரசு செலுத்தித் திருமால் பக்தியிற் சிறந்தவனாய் விளங்கினான்.

அவன் மகப்பெறுதல் வேண்டி ரிஷபாசலத்தை மேவி அங்கே சருகு முதலியவற்றையே உணவாகக் கொண்டு நெடுங்காலம் தவஞ் செய்தான். அதனால் எம்பெருமான் அவனுக்கு எதிர்ப்பட்டு இனிய வார்த்தைகள் இயம்பிய காலையில், உமாபதியான சிவன் தன் தேவியோடும் அங்குவந்

தடைந்தனன். அடைந்தவன் அளவில்லாத அன்போடு பகவானைப் பலவாறு ஸ்தோத்ரம் செய்து, தான் அவனை ஸேவித்துய்யுமாறு அங்கு வந்ததாகவும், தனக்கு க்ருபை செய்ய வேண்டுமென்றும் ப்ரார்த்தித்து நின்றான். உடனே அழகனும் அவனுக்கு அருள்புரிந்து, பின்னரும், அவன் விடைகொண்டு திரும்புகையில் சோமசுந்தரபாண்டியனைச் சுட்டிக்காட்டி, "இம் மன்னவன் றனக்கு மகப்பேறுண்டாக மனம் பற்றுவையாயின் நீ எமக்கு அகங்குளிருமாறு அன்பு செய்தவனாவாய்" என்று திருவாய்மலர்ந்தருளினான்.

"அவ்வாறே ஆகுக" என்று அரனும் அதற்குடன்பட்டுத் தன் தேவியை நோக்கி, "மாதராய்! நீ பாண்டியன் புதல்வியாய்ச் சென்று மூன்று முலையுடன் தோன்றுவாயாக" என்று கட்டளையிட்டான். அவளும் அதற்கிசைந்து அவன் புத்திரியாய் அவதரித்தாள்.

அப்பொழுது அமரரும் முனிவரும் அலர்மழை தூவ, மன்னனுந் தேவியும் தம் கன்னியை நோக்கிக் களி ர்ந்தவராயினர். தவப்பயனாகத் தோன்றின அவளுக்கு அவர்கள் தடாதகையென்று நாமகரணமுஞ் செய்தார்கள். அவள் உருவமும் பருவமும் அமைந்து, வளர்பிறைபோல நாள்தோறும் பெருகி, கலைகள் யாவும் நிறைந்து விளங்கினாள்.

அஃ தவ்வாறிருக்க; சிவபெருமான் தன் தேவியான அக் கன்னிகையை மீண்டும் வந்து கண்டு, "பெண்ணே! நின் தந்தையின் பின்னர் நீயே இப் பூமி முழுவதும் புரந்தருளக் கடவாய். யாமும் விந்த்யப்ரதேசத்தில் வேடர்கோனொருவனால் வியந்து பூஜிக்கப்பட்டு அவனுடைய க்ருஹத்தில் அமர்ந்திருப்போம். நின் நால்வகைப் படையோடும் அங்கு வந்து நீ செருச் செய்து வென்றிமாலை புனையும்போது, யாம் உன்னுடன் போர்புரிய எழுந்து வருவோம். அவ்வமயம் நமது நோக்கத்தால் நினது தனங்களில் ஒன்று மறைந்து நீங்கிவிடுவதாகும். அதனால் நாணமுற்று, கயல்போலுங் கண்களையுடைய நீ எம்மைக் காதலனாக வரிப்பாய். மதுரையம்பதியில் யாம் உன்னை மணம்புணர வருவோம். பின்னர் எமது தோள்நலந்துய்த்து, உலகனைத்திற்கும் ஒரு தனியரசியாய் நீ காவலை நடாத்துவாய். சுந்தரபாண்டியனென்று யாவராலுந் துதிக்கப்படுகிற நாம், இறுதியில், திருமாலிருஞ் சோலை சேர்ந்து பெருமாளுகந்த கைங்கர்யம் செய்துவருவோம். அன்றியும் அந்த க்ஷேத்ரத்தைப் பரிபாலிப்பதனால் க்ஷேத்ரபாலனென்று அழைக்கப்பட்டு அழகனுக்கு இடது பக்கத்திலமர்ந்து, ஆச்ரிதர்களுக்கு எல்லா நன்மையும் எளிதில் கொடுப்போம்" என்று இங்ஙனம் கூறிவிட்டுச் சென்றனன்.

# கூடல் மான்மியம்

இப்பால் தடாதகைப் பிராட்டியை முடிசூடுவித்துத் தந்தையும் வானுலக மெய்தினான். அரனுரைத்தன யாவும் அடைவே நிகழ்ந்தேறின. திருமாலிருஞ்சோலை எம்பெருமானையும், ஸ்ரீ கூடலழகப் பெருமானையும் போற்றித் தடாதகைப் பிராட்டியும் தன் காலத்தைக் கழிப்பவளாயினாள் என்று இவை முழுவதும் வ்யாசர் ரிஷிகளுக்குச் சொல்லி, மீண்டும் அத் திருமாலருளின் சரிதையைத் தான் வினவியறிந்தவாறே, அவர்களுக்கு வெளியிடுவதாக உரைத்தனர்.

### பட்டர்பிரான் மதுரையை அடைதல்

பாண்டியகுலத்திற் பார்த்திபர்களுள்ளே ஸ்ரீவல்லபன் என ஒருவன் தோன்றினான்.

**உலகம்யாவும் உவப்பவன் செஞ்சொலான்**
**பலர்மனங்கவர்பண்பினன் நண்பினான்**
**நிலவும் ஆழமுடையநிலைமையான்**
**இலகுமாநகர் ஏத்தும் சதுரனே,**

**தீரன் பின்செயல்முன்சொலும் சீர்த்தியான்**
**யாரும்தூயரும் தன்னிடத்தெய்துவோன்**
**சாரும்பல்லுயிர்க்கேற்பன தான்செய்வோன்**
**ஒரும்வேதவேதாங்கம்உணர்ந்துளோன்,**

**வள்ளியோன் பெருந்தெய்வம்வழுத்துவோன்**
**உள்ள தன்றிப்பிறர்மனைஉள்ளிடான்**
**தெள்ளிதென்றுந்திருமாலடித்துணை**
**அள்ளுமன்புளன் அவ்வியமில்லனே.**

அந்த ஸ்ரீவல்லபதேவனென்பான் உலகமுவப்பத் தண்ணளிபுரிந்து செங்கோல் செலுத்தினன். ப்ரஜைகளுக்கெல்லாம் ஹிதத்தையே நாடினன். எல்லாரிடத்திலும் இனிய வார்த்தைகளே பேசி, பலரையும் மனங்கவரும் பண்பு வாய்ந்திருந்தனன். அவன் நீதிநூற்கடலை நிலைகண்டுணர்ந்து, வேதவேதாங்கமும் விளங்கக் கற்றவன்; ஆழ்ந்த அறிவும் அமைந்த செய்கையும் உடையவன்; நல்லொழுக்கத்தினால் யாவராலும் நன்கு மதிக்கப்பட்டவன்; பகவத் பக்தியும் பாகவத பக்தியும் நிறைந்து திருமா

லடியையே தஞ்சமாகப் பற்றியிருப்பவன். அன்றியும், அவன் மிகுந்த பராக்ரமசாலியாய்த் தீவ்ரமான வ்ரதானுஷ்டானங்க ளுடையவனாகவும், ஸத்யம், தயை, ஸாந்தம் முதலான ஸத்குணங்களமைந்தவனாகவும், சிறந்த தார்மிகனாகவும், பரமோதாரனாய் வித்வான்களையும் வேதியர்களையும் ஆராதிப்பவனாகவும் இருந்தான்.

அத்தகையனான அவ்வரசன், தன் ராஜதானியாய மதுரையில், ஒருநாள் நள்ளிரவு நகர் சோதனையின்பொருட்டுப் புறப்பட்டான். புறப்பட்டவன் எவ்விடத்தில் யார் என்ன சொல்லுவார்களோ என்று தன் இரு செவிகளும் சாய்த்து, நிறைந்த தெருக்கள் தோறும் நின்று நின்று செல்லுவானாயினன். அப்பொழுது அவன், அங்குள்ள தேவாலயத்தினின்றும் வேதியனொருவன் வெளிப்பட்டு வருதல் கண்டு, அவனை எதிர்ப்பட்டு யாரென்று வினவினான். அதற்கு அம் மறைவலாளன், "ஓ மன்னவர் பெரும! யான் கௌசிகசாத்திரத்தி லுதித்தவன்; என் பெயர் சோமசன்மா என்பது; யான் அவந்தியினின்று தீர்த்தயாத்ரையாகப் புறப்பட்டு, இன்று என் பாவந்தொலையுமாறு உவந்து வந்து இம் மதுரையை உற்றனன்" என்று மறுமொழி கூறினான்.

அதுகேட்ட அரசன் மீண்டும் அப் பார்ப்பனப் பெரியோனைநோக்கி, தனக்குப் பரம புருஷார்த்தத்தை அருளிச் செய்யுமாறு வேண்டினன். உடனே அவனும் மிகப் பழமையானதும், இதிஹாஸத்திற் பொருந்தினதும், உயர்ந்த பொருளுடையதுமான ஒரு சுலோகத்தை உரைத்தனன்.

**வருடநாள் வேண்டும்பண்டம்மற்றைஎண்மதியிற்கொள்க**
**இரவிடைவேண்டிற்றெல்லாம்எல்லொளிப்பகலேதேர்க**
**நரையுறுமூப்பிற்கேற்பது இளமையேநாடிச் சேர்க்க**
**பரகதிக்கேதுவாவது இம்மையிற்றேடற்பால.**

"மாரிக்காலத்துக்கு வேண்டும் பொருள்கள் கோடைக் காலத்தில் சேகரிக்க வேண்டும்; முதுமைக்கு வேண்டுவன இளமையிலே செய்து கொள்ளவேண்டும்; அவ்வாறே மறுமைக்கு வேண்டுவதும் இம்மையிலேயே தேடற்பாலது" என்னும் அர்த்தமுடைய அந்த சுலோகத்தை அரசன் ஓர் ஏட்டில் எழுதிக் கொண்டான்.

மறுநாட்காலையில் அவன் தன் ஆஸ்தான மண்டபத்தை அடைந்தனன். அமைச்சர்களை அங்கு வரவழைத்தான். அவர்களுடன் புரோஹிதரும் வந்தார்.

# கூடல் மான்மியம்

அவர் செல்வநம்பி என்னும் திருநாமமுடையவர். அரசன் வேண்டுகோளின்படி, ஓர் உயர்ந்த ஆஸனத்தின்மீது வேதவேதாங்க பாரங்கதரான அவர் வீற்றிருந்தருளினார். அப்பொழுது பாண்டியன் அவர் முன்பு தனக்குப் பரதத்வம் இன்னதென்று தெளிவிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தான். அந்தக்கரண சுத்தியுடைய ஆசார்யரும் மன்னவன் கேள்விக்கு மனமுவந்தவராயினார்.

அதன்பிறகு அவர், ஸகல சாஸ்த்ர ஸம்பந்நர்களான வித்வான்களும் வேதியர்களும் நிறைந்த மஹாஸபையில், தத்வங்களையும் அவற்றை அறியும் ஞானத்தையும், ஜீவகோடிகளுக்கு எதனால் பிறவிப் பிணி நீங்குமென்பதையும் தெளிவாக உரைக்குமாறு ஸகலர்க்கும் தெரிவித்தனர். உடனே ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் மதத்திற்கேற்ப நூல்களின் உண்மையை நுவலத் தொடங்கினர். ஆனால், அவை மெய்ப்பொரு ளன்றென்று அப்பொழுது ஓர் அசரீரி வாக்கு உண்டாயிற்று.

மீண்டும் அவ் ஆகாயவாணி பாண்டியனை நோக்கி, "வேந்தனே! நீ கிழியொன்றில் பொன்னைப் பொதிந்து வித்யாசுல்கமாகத் தூக்கி வை. நாம் அதில் ஸாந்நித்யமாயிருப்போம். வேதாந்த தத்வத்தை யாவனொருவன் வெளியிடுவானோ அவனுக்கே அந்தக் கிழி அடையக் கடவதாகும். அவன் மனதில் நாம் அந்தர்யாமியாயிருந்து உண்மையை உரைத்து அவன் அக் கிழியைப் பெறுமாறு செய்வோம்" என்று றி அடங்கிற்று

அதுகேட்ட அரசன் வியப்பும் களிப்பும் மேலிட்டவனாகிச் செல்வநம்பியைப் பார்த்து, "அருமறை தெளிந்த அந்தணராகிய நீரே எனது ஐயுறவினை நீக்கியருளல் வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தான். அவரும் "அவ்வாறே ஆகுக" என்று பணித்துத் தன் திருமாளிகை சேர்ந்தனர்.

அப்பால் அவர் கூடலழகப் பெருமாள் கோவிலுக்குச் சென்று, அன்புடன் அருச்சனை புரிந்து புஷ்ப பல தாம்பூலாதிகள் அளித்து, அறுசுவையடிசில் அமுதுகண்டருளப்பண்ணி, பின்பு ததீயாராதனமும் செய்து அவ்வாறே த்ரிராத்ரம் அங்கே தங்கி எம்பெருமானை வழிபடுவாராயினர். அப்பொழுது அழகன் அவர் கனவில் தோன்றிப் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினான்.

**முறைபடுமருமறை முழுவதும்யாமே**
**மறைகளின் நெறியுணர்வரதனும்யாமே**

# கூடல் மான்மியம்

**பொறையுறுதருமபுராணமும்யாமே**
**அறைதருமனுவி திஹாஸமும்யாமே.**

**விரிதருசாகையின் மிகுமறையானும்**
**அரிதுணராங்க தினங்கமதானும்**
**மருவிஎம் அடியிணை வழிபடலானும்**
**திரிமலமறுநமதுருவொளி தெரியும்.**

"வேதவேதாங்கங்களாலும், புராணேதிஹாஸங்களாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற பரதேவதை நாமேயாவோம். ஆதலால், வேதாந்த விசாரம் செய்து ப்ரஹ்ம ஜ்ஞானமடைவதனாலும், பக்தியோகத்தால் நம்மை வழிபடுவதனாலும், தேஜோமயமான நம்முடைய திவ்யமங்கள விக்ரஹத்தை தெரிசிக்கலாகும். அவ்வாறாகவே, இப்பொழுது நமக்குப் பாதஸேவை புரியும் பக்தனொருவனுடைய ஹ்ருதயத்தில் எழுந்தருளியிருந்து, நாம் அவனை முன்னிட்டு உனக்கு உண்மைப் பொருள் நிறுவுவோமென்பதை அறிவாயாக" என்று எம்பெருமான் சொல்லிமுடித்த அளவிலே. செல்வநம்பியும் தம்சிந்தைநோய் தீர்ந்து தெளிவடைந்தவராயினர்.

அவ்வாறு கனவுகண்டதை அவர் பின்பு அரசனிடம் தெரிவித்தார். அதைக் கேட்ட மன்னவனும் மனமகிழ்ந்து, அதனைத் தன் அமைச்சர்களுக்கு அறிவித்தனன். உடனே அவர்கள் அதற்கு ஆவனபுரியுமாறு ஒருப்பட்டுப் பதினான்கு கோடி பசும்பொன்னைக் கொணர்ந்து செல்வநம்பியிடம் சேர்ப்பித்தனர்.

அவர் அதில் ஸ்ரீமந் நாராயணனை ஆவாஹனம் செய்து அர்ச்சனைபுரிந்து ஆராதித்தார். பூமகளும், நாமகளும், புரு தன் முதலான தேவர்களும், ஏகாதச ருத்ரரும், த்வாதசாதித்யரும், அஷ்டவசுக்களும், மருத்துக்களும் அதில் சாந்நித்யமாயிருந்தனர். ஸ்ரீ வல்லபதேவன், மிகுந்த பக்தியோடு, அப்பொன்னைக் கிழியிலே பொதிந்து ஆகாசத்தில் தூக்கி, அதனுள்ளிருந்து பரதத்வ நிர்ணயம் செய்தருளுமாறு பகவானை ப்ரார்த்தித்தனன். அப்பால் அவன் தன் கருத்தின்படியே பல தேசங்களுக்கும் ஓலையனுப்பி அந்தணரனைவரையும் வரவழைத்தான். அவ்வாறு வந்தவர்களை நோக்கி, அவன் மிகுந்த வினயத்துடன், வேதாந்தார்த்த நிர்ணயம் செய்துவித்யாசுல்கத்தைப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டிநின்றான்.

அஃதவ்வாறிருக்க, ஸ்ரீ சுந்தரராஜப் பெருமான் அரசன்மீது நிறைந்த

அருளுடையனாதலால் அவன் மனக்குறையை மாற்றுதற்குத் திருவுள்ளம் பற்றினான். உடனே அவன் பெரிய திருவடியையும் சேனை முதலியாரையும் நினைக்க, அவர்களும் வந்து அடிதொழுது நின்றனர்.

அப்பொழுது அவர் பெரிய திருவடியை நோக்கி, "ஓ வைனதேயனே! நாம் விரும்பிய கருமமொன்றை நீ விரைவினில் முடிக்கற்பாலை. தெளிந்த மனமும் திருந்திய செய்கையுமுடைய உன்னால் ஆகாத காரியம் ஒன்றுமே இல்லை. ஆதலால் நீ ஸ்ரீவில்லிபுத்தூரென்னும் திவ்யதேசத்தை நோக்கிப் புறப்படு. அங்கு வட பெருங்கோயிலில் பள்ளிகொண்டருளும்நம்மைப் பணிந்து அனுஜ்ஞை கொண்டு, நீ மேலே செய்ய வேண்டுங் காரியத்தை இப்பொழுது கேட்பாயாக. அவ்வூரில் விஷ்ணுசித்தரென்னும் விப்ரச்ரேஷ்டர் ஒருவருளர். அவர் பகவத்பக்தியும் பாகவத பக்தியும் நிறைந்தவர். நமக்குத் திருவாராதன மியற்றும் திருப்பொறையுடையவர். வேதப் பொருளை விளங்க உணர்ந்தவர். சமதமாதி ஸகலகுண ஸம்பந்நராய்ப் பட்டர் பிரானென்று பலராலும் புகழ்ந்து கூறப்படுபவர். அவர் திருத்துழாய் வனத்தைப் பரிபாலித்து, நமக்குத் திருமாலை புனைந்து சாத்துவதைத் தமக்கு உகந்த கைங்கர்யமாகக் கொண்டு வாழ்ந்துவருகிறார்.

அவ்வாறு அவர் நம் திருவடிக் கன்பராய்ச் சிறந்தவராகலின், அவரைக் கொண்டு நாம் அரசனைத் தெளிவிக்க எண்ணினோம். ஆதலால் இங்கு நிகழ்வன யாவையும் அவருக்கு நீ ஸ்வப்நத்தில் அறிவித்து, அவரைத் தம் சிஷ்யர்களுடனே அதிசீக்கிரத்தில் அழைத்து வருவாயாக. மாறனுக்கு மறைப் பொருளுணர்த்தவல்லார், இக் காலத்தில், அவரையல்லால் எவருமே இல்லை.

**ஆதிநூலெனப்புகன்றிடும் அருமறைப் பயில்வும்**
**ஓதும்வேதத்தின் அந்தமும் அதனுரிப்பொருளும்**
**மூதுநூன்மொழிவைதிகநடைமுறைபிறவும்**
**கோதிலாதனகலியுகத்தொழிந்துகுன்றினவால்,**

**சீலமில்லரும்வணங்கிடாத்தீயரும் அகந்தை**
**மேலிடுஞ்செயலாளரும்வேதியராயும்**
**சாலவேகுறுக்கிட்டபுண்டரந்தரித்தோரும்**
**காலமோர்கிலாக்கருமமீமாங்கியத்தவரும்,**

**பிரமபாகையிலமுந்திடாமனத் தரும்பிறக்கும்**
**உருவம்யானெனுமகத்தரும் உணர்வுகுன்றினரும்**

# கூடல் மான்மியம்

**பரவும்எம்மிடைப்பராமுகரானபாதகரும்**
**தரணிஎங்கணும்தழைத்ததாலிறந்தன தவங்கள்**

"உலகின்கண், பழமையான வேதம் பயிற்சிகுன்றி யிருத்தலோடு, கலியின் கொடுமையால், ஒழுக்கமும் அடியுடன் ஒழிந்துபடுவதாயிற்று. பாபக்ருத்யங்கள் எங்கும் பரவி வருகின்றன. வேத நிந்தகரும், விஷ்ணுபக்தியில்லாதவர்களும், குணங்கெட்டவர்களும், குதர்க்கமே பேசுபவர்களும், ஞானசூன்யரும், நாஸ்திகவாதிகளும், அகங்காரிகளும், ஆத்மஜ்ஞானமில்லாதவர்களும், த்ரிபுண்ட்ரதாரிகளும், தேஹாத்மாபிமானிகளும், முதலான அசாதுக்கள் நிறைந்து துராசாரமே தலையெடுத்துவிட்டது. ஆதலால் ஓ பக்ஷி ராஜனே! யாம் கூறியவாறு நீ இப்பொழுதே சென்று அவ் விஷ்ணுசித்தரை விரைவினில் கொணர்தி" என்று ஆஜ்ஞாபித்தருளினன்.

அதைக் கேட்டவுடனே பெரிய திருவடி அளவில்லாத சந்தோஷத்தோடு ஆகாசத்திலெழுந்து காற்றினுங்கடுகிய வேகத்துடன் புதுவையம்பதியை நோக்கிப் படர்தலுற்றார். அநந்தரம் அவர் அந்த ஸ்தலத்தில் வடபத்ரசாயியாய் எழுந்தருளியுள்ள பெரிய பெருமாளை வணங்கி விடைகொண்டு ஸ்ரீவிஷ்ணுசித்தருடைய திருமாளிகைக்குச் சென்று, அங்கு அவருடைய ஸ்வப்நத்தில் ஸ்ரீ கூடலழகப்பெருமாள் திருவாய்மலர்ந்தருளின விஷயங்களைத் தெரிவித்தார்.

அதுகண்டு வியப்பும் களிப்பும் மேலிட்டவராகி, விஷ்ணுசித்தர் உடனே விழித்தெழுந்தனர். தாம் கண்ட கனவின் திறத்தைத் தம் தேவியிடம் உரைத்தார். வடபெருங்கோயிலுடையானை வணங்கி அவனுடைய நியமனமும் பெற்று மதுரைக்கு எழுந்தருளலானார். அவருடைய சிஷ்யர்கள் வேதகோஷத்துடன் அவரைப் பின்தொடர்ந்து வந்தனர்.

அப்போது ப்ராஹ்மணோத்தமரான செல்வநம்பி அவரை மதுரைக் கழைத்துச் செல்லுவதற்காக அங்கு எதிர்கொண்டு வந்தார். வந்தவர் அதி தூரத்திலேயே விமானத்தினின்றிழிந்து, வரன் முறையாக வந்தனை வழிபாடியற்றி, பட்டர்பிரானை மதுரையேற எழுந்தருளிப் பரதத்வ நிர்ணயம் செய்தருளுமாறு ப்ரார்த்தித்தனர். அவரும் அதற்கு 'ஓம்' என்று இசைந்து, திருச்சின்னமும் சங்கமும் பணிமாற, தேவியுந் தானுமாக தெய்வீக விமானத்திலேறி மதுரைமாநகரம் வந்து புகுந்தனர்.

# கூடல் மான்மியம்

## மெய்ப்பொருள்கூறிப் பொற்கிழி பெறுதல்

அதனோடு அன்று சூரியாஸ்தமனமாயிற்று. மறுநாட் காலையில் பொழுது விடியுமுன்னே பட்டர்பிரான் பள்ளியுணர்ந்தெழுந்திருந்தார். அவர் நல்லதொரு முகூர்த்தத்தில் வல்லபதேவ பாண்டியனைக் காணவேணுமென்று, தன் சிஷ்யர்களோடு ராஜக்ருஹத்தை நோக்கிச் சென்றனர். அப்பொழுது அரசன் தன் பரிஜனங்களோடு எதிர்கொண்டு வந்து அவரைப் பணிவுடன் வரவேற்றனன்.

அதன்பின்னர் அரசன் அவர்க்கு முகமன் கூறி ஆஸனமளித்து, தான் உய்யும் வண்ணம் உண்மைப் பொருள் கண்டருளுமாறு அவரை ப்ரார்த்தித்தான். அப்பொழுது அவர் பெருமாளையும் பெரிய திருவடியையும் மனதில் நினைத்து, அரசனுக்கு மறுமொழி கூறாதிருந்தனர்.

அதனால் அரசன் அவரிடம் சிறிது ஐயமுற்றான். உடனே செல்வநம்பி பட்டர்பிரானுடைய தகுதியைக் கூறிப் பாண்டியனைத் தெளிவித்து, முன்பு தாம் கண்ட கனவின்படியே கருதியனவெல்லாம் கைகூடுமென்று அவனுக்கு வற்புறுத்தினர். அதுகேட்டு மன்னவன் பெரிதும் மனங்களித்தவனானான்.

அவ்வாறிருக்கையில் அமைச்சர்கள் பல தேசங்களினின்றும் பற்பல சமய வாதியரை அங்கே அழைத்து வந்தனர். அவர்கள் காணாபதம், கபிலம், யோகம், பாதஞ்சலயம், ந்யாயம் முதலான சாஸ்த்ரங்களில் வல்லுநரும், பௌத்தரும், பாசுபதரும், ஆர்ஹதரும், சமணரும், சார்வாகருமாக எங்கும் நிறைந்து, அவரவர் தங்கள் தங்கள் சித்தாந்தத்தை நாட்டி எழுதிய ஏடுகளைப் பாண்டியன் தூக்கிய பொற்கிழியின்மீது பொருந்துமாறு விடுத்தனர். ஆனால் அவை யாவும் கிழியினிற்றங்காது கீழே விழுந்தன. அதனால் அவ்வாதியரனைவரும் நாணத்தினால் தலைகுனிந்து நின்றனர். அவ் வேளையில் பட்டர்பிரான் பரதத்வ நிர்ணயம் செய்யத் திருவுள்ளம் பற்றி அடியில் வருமாறு அருளிச் செய்யலானார்.

"ஸ்ரீமந் நாராயணனை யல்லது பரதத்வம் வேறொன்றுமில்லை; பரப்ரஹ்ம ஸ்வரூபியாயுள்ளவனும் அவனேயாவன் என்று மனு முதலிய நூல்கள் மயக்கமற உரைக்கின்றன. குறைவின்றி எங்கும் நிறைந்து விளங்குபவன் கோவிந்தனே என்பது, இதிஹாஸங்களிலும், ஸாத்விக புராணங்களிலும் இயம்பப் பெற்றுள்ளது. ஸகலமான வேதங்களும், உலகமெல்லாம் அந்த

விஷ்ணுவின் வடிவமேயல்லது பிறிதில்லை என்பது ஒரே மிடறாக ஒலிக்கின்றன.

**யான் மறையனைத் துங்காண நின்றுளேன் யான் இவ்வையம்**
**தான் முழுதுடையேன் என்னைச் சார்ந்த இச்சராசரங்கள்**
**நூன் மணிக்கொத்ததென்ன நுடங்கும் என்று இறைவன்தானே**
**மேன்மொழிந்துள்ள பாரதாதிகள் மெய்யேதேற்றும்.**

அன்றியும் ஸகலவேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்படும் ஸர்வேச்வரன் அவனே என்பதும், நூலின்கண் மணித்தொகுதிபோல அவனைச் சார்ந்த இச் சராசரங்களனைத்தும் அவனால் வ்யாபிக்கப்பட்டுள்ளன என்பதும், அவன் தானே அருளிச் செய்த கீதை முதலான ப்ரமாண சாஸ்த்ரங்களில் வெளிப்படையாக விளங்கக் காணலாம். அது நிற்க, வேதத்தின் பூர்வகாண்டம் விஷ்ணுவை ஆராதிக்கும் முறையை விரிவாகப் பேசுகின்றது; ப்ரஹ்மகாண்டமும் அவ் வெம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைச் சொல்லுகிறது. ஆகையால், ஸர்வ வ்யாபியாயுள்ள ஸர்வேச்வரன் ஸ்ரீமந் நாராயணனே" என்று இவ்விஷயங்களை ஸ்ரீவிஷ்ணுசித்தர் நன்குதெளிவித்து, அதனை ஓர் ஏட்டில் எழுதிக் கிழியினிடம் செல்லுமாறு விடுத்தனர்.

**பாசுரமிதனைத் தால்பத்திரத்தெழுதிப்புத்தூர்ப்**
**பூசுரன்எடுத்தான் அன்ன ஆவணம்புறநூலோரை**
**மாசறத் துணிப்பான் சென்றவாளெனப்பிறங்கியோடித்**
**தேசுறநிறுவும்விஞ்சைக்கிழித் தலைச்சிறந்ததன்றே.**

உடனே அது அந்தப் பொற்கிழியோடு பொருந்திச் சிறப்புற்று நின்றது. அதில் அமர்ந்திருந்த தேவதைகள் அவ் வாவணத்தை அங்கீகரித்தனர். வித்யாசுல்கமாக வைத்திருந்த பொன்னும் ஸரஸ்வதி தேவியால் விஷ்ணுசித்தர் கையினில் அளிக்கப் பெற்றது. அப்பொழுது எல்லோரும் எல்லையில்லாத இன்ப வெள்ளத்தில் மூழ்கினர். இந்திரன் முதலிய இமையவர் குழாங்கள் தத்வத்தின் உண்மை தெளிந்து ஆனந்தபரவசராய் அலர்மழை தூவினார்கள். தேவதுந்துபி முதலான மங்கள வாத்யங்கள் எங்கும் முழங்கின.

அந்நிகழ்ச்சிகளை எல்லாம் அரசனும் தன் கண்மணி குளிர்ப்பக் கண்டு மகிழ்ந்தான். அதனால் அவன் அவருக்குப் பலவகைச் சிறப்பும் பரிவுடன் இயற்றினன். ஒருசீரிய சிங்காதனத்தின்மீது விஷ்ணுசித்தரை

வீற்றிருந்தருளுமாறு வேண்டிக் கொண்டான். தன் மந்திரிகளுடனே மரபு வழுவாமல் அவர்க்குப் பூஜனைபுரிந்தான். மிகவும் விலையுயர்ந்த செம்பட்டாடைகளை அவருடைய திருமேனியில் சாத்தினன். சூர்ய சந்த்ரர்போல ப்ரகாசிக்குமாறு சுவர்ணகசிதமான ஆபரணங்களால் அவரை அலங்கரித்தான். அப்பொழுது பட்டர்பிரானுக்குப் பாவையரனேகர் பணிவிடை புரிந்தனர். வெண்கொற்றக் குடைமேலே நிழற்ற அவர்கள் அவர்க்கு வெண்சாமரைகளும் விசிறியும் வீசினர்.

**பல்லியம்பெரிது மார்ப்பப்பரிசனர்பரவிமொய்ப்ப**
**வெல்லுறுதடக்கைஏந்தல்வேழத்தின் பிடரிலேற்றி**
**மல்லுறு திணிதோள் வென்றிமன்னவன்நடந்துபின்னே**
**செல்லுவதாகிக்கூடல்நகர்வலஞ்செய்வித்தானே.**

அவ்வாறே பாண்டியன் பட்டர்பிரானை ஓர் யானையின் மீது எழுந்தருளப்பண்ணி, மிகுந்த விமரிசையோடு அவரை நகர்வலஞ் செய்வித்துத் தான் பின்னே நடந்து செல்வானாயினன். அங்ஙனம் அவர் பவனிவருங்காலையில், ஸ்ரீ சுந்தரராஜன் கருடாரூடனாக ஸேவை ஸாதித்தருளினான். அப்பொழுது சேனைத் தலைவர் முதலான திவ்யபரிவாரங்களும், நித்யசூரிகளும், மற்றுமுள்ள தேவர்களும் திரண்டு ஸ்தோத்ரம் செய்தார்கள். அவனுடைய திருமேனியில் ஹாரகேயூரங்களும், பாஹுவலயங்களும் அழகுபெற்று விளங்கின. கோடிசூர்ய ப்ரகாசமுள்ள கிரீடமொன்று அவனுக்கு சிரோபூஷணமாகத் திகழ்ந்தது. திவ்யமான பீதாம்பரம் அவனுடைய திருவரையில் அணியப் பெற்றிருந்தது. ஸ்ரீ கௌஸ்துபமும் வனமாலைகளும் அவன் திருமார்பினை அலங்கரித்தன.

உலகுக்கெல்லாம் ஒருதனி முதல்வனான எம்பெருமான், எழுதுதற்கரியவடிவழகோடு தன் கமலம் போலுங் கண்ணிணைகளால் குளிரநோக்கி அருள் செய்தவுடனே, ஸ்ரீ விஷ்ணுசித்தர் அவற்குத் திக்குநோக்கி தெண்டன் ஸமர்ப்பித்துப் பல்லாண்டு கூறிவாழ்த்துவாராயினர்:

**திருமால்கருணைப்பேரழகாந்தெய்வத் திருப்பாற்கடல்மூழ்கி**
**வருமாதரத்தாற்பேரன்புவளரத்தளராமொழிவிம்மக்**
**கருமாணிக்கச்செழுந்திரளே கண்ணே மணியேகற்பகமே**
**பெருமாவென்றுபுதுவைநகர்ப் பெம்மான்வாழி வாழ்த்துகின்றான்**

**மல்லாண்டிலங்குமணத் தின்டோள் மாயாதூயபரமேட்டி**
**தொல்லாண்டிருந்த குடியடியோ முன்னோடியாமுந்தொழுதொழும்பும்**

# கூடல் மான்மியம்

**எல்லாந்தருமுன் திருவடிகளிரண்டும்பண்டைஎமதுணர்வும்
பல்லாண்டுழிபல்லாண்டுபலகால்நூறாயிரத்தாண்டே.**

**உருளுஞ்சகடமுடைந்தோட உதைத்தமலர்த்தாள் பல்லாண்டுன்
மருமாமார்பத் துறைகின்றமங்கைதானும்பல்லாண்டு
பருதிகோடியெனப்பிறங்கும்படைச்சக்கரமும்பல்லாண்டு
தருணமதியமயுதநிகர்சங்கத் திறையும்பல்லாண்டே.**

**பூணும்பணியான் சிலைமுறித்தபுனிதக்கேண்மைபல்லாண்டு
தாணின்றுதைப்பத்தலைகுனிக்குஞ்சார்ங்கவில்லும்பல்லாண்டு
காணுங்கனகன் மார்பிடந்த கடும்போர்த் திறமும்பல்லாண்டு
வாணன்புயமாயிரமறுத்த மறச்சேவகமும்பல்லாண்டே.**

இங்ஙனம், எம்பெருமானுடைய திவ்ய சௌந்தர்யத்துக்கு ஓர் அவத்யம் வாராவண்ணம், ஸ்ரீவிஷ்ணுசித்தர் அவனுக்குத் திருப்பல்லாண்டுபாடி மங்களாசாசனம் செய்தருளினவுடனே, தேவதேவனான திருமால் பெரியதோர் உவகையுற்று, அவரைநோக்கி, உமக்கு வேண்டுவதொன்றனை வினவுதிராயின் யாம் அதனை அவ்வாறே அளிக்கக் கடவோம் என்று திருவாய் மலர்ந்தருளினான்.

அதைக் கேட்டவுடனே அவர் தம் உள்ளக் கமலம் வாய் மலர்ந்து, காதல் பெருகக் கரைந்துருகினவராகி, "நித்ய சூரிகளுக்கு நிர்வாஹனான ஓ எம்பெருமானே! அடியேன் இப்பொழுது போலவே எப்பொழுதும் தேவரீரை ஸேவித்துக் கொண்டிருக்குமாறு திருவுள்ளம்பற்றி யருளல்வேண்டும்" என்று ப்ரார்த்தித்தார். அப்பொழுது பகவான் அவரை நோக்கி "ஸ்ரீ வல்லபதேவ மஹாராஜருடைய ஸபா மத்தியில், மிகவும் அழகிய வேலைப்பாடுள்ளதும், மனதைக் கவரத்தக்க மாட்சியுடன் விளங்குவதுமான ஒரு மண்டபம் உளது. அதுவே மல்லமண்டபம் என்று வழங்கப்படுவதாகும். அதன்கண் யாம், உம்முடைய சேர்த்தியினின்று அரைக்கணமும் அகலாமல் உகப்புடன் வீற்றிருந்தருளுவோம்" என்று மறுமொழியளித்தனன்.

அவ்வாறருளிச்செய்து எம்பெருமான் அந்தர்த்தானமானவுடனே, பட்டர்பிரானைப் பாண்டியன் தன் அரண்மனைக்கழைத்துச் சென்றான். அங்கு அவர்க்கு ஸமஸ்தமான உபசாரங்களும் செய்து, அவருடைய திருவடிகளைத் தன் சென்னியில் சூடி, அரசன் தான் முன்பு அவரிடம் சந்தேகங் கொண்டு அவர் பெருமையறியாதியற்றிய பிழையினைப் பொறுத்தருள வேண்டினன். அதன் பின்னர் அவன், அளவில்லாத

நிதிக்குவைகளையளித்து, அவற்றையெல்லாம் ஒட்டகங்களின் மீதேற்றி அவருடைய ஊருக் கனுப்பினான்.

அநந்தரம் ஸ்ரீ விஷ்ணுசித்தரும் மிகுந்த வைபவங்களோடு மதுரையினின்று புறப்பட்டு, ஸ்ரீவில்லிபுத்தூரைச் சென்றடைந்தார். அவ்விடத்தில் அவர் தென்னவனளித்த த்ரவ்யங்களையெல்லாம் கோயிற்றிருப்பணியிற் செலவிட்டு, எம்பெருமானுகந்த கைங்கர்யங்களில் எப்பொழுதும்போல் ஈடுபாடுடையராய் எழுந்தருளியிருந்தார்.

இவ் வரலாறுகள், நிகழ்வதற்கு முன்னரே, எனக்கு நாரதமஹர்ஷியால் நவிலப் பெற்றுள்ளன. இவை கேட்பவர்களுக்கு இம்மை மறுமைப் பயன்களை எய்துவிக்கவல்லன. ஓ தபோதனர்களே! நீங்களும் இவற்றைக் கேட்டு க்ருதார்த்தரானீர்கள். அஷ்டாங்க விமானமும், வையைநதியும், சித்ர ரதவனமும், யானைமலையும், ரிஷபாசலமும், முதலானவற்றின் மாஹாத்மியங்களை நான்முகன் நாரதருக் கருளிச் செய்ய, அவர் எனக்குக் கூறியவாறே நான் உங்களுக்குச் சொல்லி முடித்தேன். மிகவும் உத்தமமான இந்த க்ஷேத்ரமான்மியத்தை வைகாசிமாதம் சுக்லபக்ஷ த்வாதசியிலேனும் மற்றை நாட்களிலேனும் கேட்பவர்கள் ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரனுறையும் ஸ்ரீவைகுண்டத்தையே அடையக்கடவர் என்று இவ்வகையாக மதுரையின் மான்மியத்தை ஸ்ரீ சௌனகாதி முனிவர்களுக்கு வேதவ்யாசர் விஸ்தாரமாக அருளிச் செய்தார்.

**பதின்மர்பாடலுக்கு முற்பதிகமாகவே**
**புதுவையாசிரியனார்புகல்பல்லாண்டுதான்**
**மதுரைமாநகர்தனிற்பிறந்தவாய்மையால்**
**இதனைநேர்தலநிலத்தியம்பவல்லமோ?**

**வாழிதென் கூடல்மாநகரம்வாழியிவ்**
**ஆழிசூழ் புவியெலாம்வாழியாரணம்**
**வாழிமாலழகனும்மதுரவல்லியும்**
**ஊழிதோறூழி பல்லாண்டுமோங்கவே**

**கூடல் மான்மியம் முற்றும்**

**(1925ல் மதுரை "ஹரிஸமய திவாகரம்" வெளியீடாக வந்தது.)**

ஸ்ரீ:

# இராமாயணத் திருப்புகழ்

## முன்னுரை

**ஸ்ரீ**ராமச்சந்த்ரனுடைய திவ்யசரிதமாகிய அமிர்தத்தைப் பலரும் பருகிக் களிகூருமாறு அருந்தமிழா லளித்த பெருந்தகையாளர் கம்பரென்னுங் கவிச்சக்கரவர்த்தியாவர். அவர்தம் இராமாயணமென்னும்நூலின் அருமை பெருமையை அறியாதார் எவருமே இல்லை. தனக்கு ஒப்புயர்வற்ற தன்மையால். தமிழ்க் கவிகட்கெல்லாம் அஃதொரு சிந்தாமணியே என்னத் திகழ்கின்றது. அது பற்றிப் பிற்காலத்தறிஞரிற் பெரும்பாலார் தமது செய்யுட்களிலும், உரைநடையிலும், சொற்பொழிவுகளிலும் அதன் பொருள்நயங்களைப் போற்றி எடுத்தாளுவாராயினர். அங்ஙனம் அக் கல்வியிற்பெரியாரது கவிகளில் மிகுதியும் பயிற்சியுடைய புலவர் பெருமான் ஒருவரால் இயற்றப்பெற்றதே இவ் இராமாயணத் திருப்புகழும் என்பது ஈண்டுக் குறிப்பிடற்பாலது.

இராமாயணமென்னும் புண்ணிய கதையே புகழ்பொருளாகப் பண்ணியல்வழாத வண்ணவிருத்தங்களிற் பாடுதலின், இப் பிரபந்தம் இராமாயணத் திருப்புகழ் என்று பெயர் பெறுவதாயிற்று. ஆயினும், இதன் ஆசிரியர் இதற்கு இராமசெயம் என்ற மற்றொரு பெயரை வழங்கியிருப்பதாகவும் அறியப்படுகிறது. "யாது நினைந்தாலு மந்த வாழ்வு தரும் த்யாகசிந்து ராமசெயம் பாடவந்து துணையாவாய்" என்பதனை நோக்குக. அக்காரணத்தால் இதற்கு இராமசெயத் திருப்புகழ் என்றும் பெயர் கூறுவதுண்டு.

இதனை இயற்றியருளிய பெரியாரது திருப்பெயர் பாலபாரதி என வழங்கலாகும். எனினும், "துற்றபொருள் கொண்டு பாரதி அப்பன் உனை நெஞ்சிலேகொடு சுத்தகவி கம்பநாடன் இனிதோதும், சொற்படி விளம்பும் ராமசெயம்" என அவர் தாமே கூறுதலினின்று, அப்பன் என்பது அவர் இயற்பெயரும் பாரதி என்பது சிறப்புப் பெயருமாக இருக்கலாம் என்று எண்ண இடமுண்டாகின்றது.

இவரது காலமும் இடனும் முதலாய வரலாறொன்றும் தெளிவாக இந்

நூலகத்துக் காணக்கிடையாவேனும், தலைமைசான்ற புலமையாளரில் இவரும் ஒருவரேயென்னத் தட்டில்லையென்பது இனிது விளங்கும். இவர் இயற்றமிழுடனே இசைத் தமிழும் பயின்றவர்; தென்மொழியோடு வடமொழியிலும் வல்லுநர். இவரது கவித் திறமை மிகவும் மேலானதாக மதித்தற்குரியது.

இப் பனுவல் முழுவதும் சந்தவின்பம் செறிந்த செந்தமிழ்ப் பாடல்களால் நிறைந்து மிளிர்கின்றது. அவற்றுள் வடமொழிப் பதங்கள் பெரும்பான்மையாக வழக்குப் பெறுகின்றன. ஆயினும், அவை செவிக்கினிய ஓசையுடன் செய்யுள்நடையை அழகு செய்வனவாம். ஒவ்வொரு செய்யுளிலும் பெருமாளை முன்னிலையாக்கி, முற்பகுதியிற் கவியின் பிரார்த்தனையோடு கூடிய புகழ்ச்சியும், பிற் பகுதியில் இராமாயணக் கதையின் தொடர்பான நிகழ்ச்சியும் அருமையாக அமைத்துப் பாடப் பெற்றுள்ளன. கம்பநாடரது கருத்தமைதியிற் பொருத்தமானவற்றை இடையிடையே எடுத்தாளும் திறமும் மிக லயிக்கற்பாலது. உவமை, உருவகம் ஆகிய அணி வகைகள் எல்லாம் இந் நூலுள் மலிந்து காணப்படுகின்றன. சிற்சில விடங்களிற் சொற்றொடர்களின் பொருளாழம் பெரிதும் போற்றத்தக்கது. இவ்வாற்றாற் பலவகையானும் வரையறைப்பட்ட பொருளை மேற்கொண்டு இசைப்பாக்கள் இயற்றுவதெனின், அது யார்க்கும் எளிதினில் வாய்ப்பதின்று. ஆதலின் இவ்வாசிரியரும் ஒரு தெய்வக் கவியே என்பது தெள்ளிதிற் றுணியப்படும்.

இஃதன்றி, இவர் திருமாலடிமையே தமக்குப் பெருவாழ்வாக மதித்த ஸ்ரீவைஷ்ணவ திலகரென்று தெரிகின்றது. திருவரங்கச் செல்வரான அழகிய மணவாளப் பெருமாளை இவர் இப் பிரபந்தத்திற்கு நாயகராகக் கொண்டுள்ளார்.* இவரது பாசுரங்கள் யாவும் பக்திச் சுவை பழுத்தனவாகி, அப்பெருமானிடம் இவர்க்குள்ள அளவு கடந்த அன்பைப் புலப்படுத்துகின்றன. ப்ரபந்நஜன கூடஸ்தரான நம்மாழ்வார் விஷயமாக இவர் நூன்முகப்பில் மங்களாசரணம் செய்திருக்கிறார். மற்றுள்ள ஆழ்வார்களையும் அவரருளிச் செயல்களையும் அடிக்கடி புகழ்ந்து போற்றுகின்றார். திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தின் பெருமையைப் பலவாறாக வற்புறுத்தியிருக்கிறார். திவ்யதேசங்கள் நூற்றெட்டின் திருப் பெயர்களையும் இடையிடையே எடுத்தோதி இனியராகிறார். திருமண்காப்பும் திருமணித் தாவடமும் அணிந்து, பஞ்சஸம்ஸ்காரம்பெற்று அடியார்குழாத்துடன் கூடிப் பண்ணலங்கனிந்த பாடல்களாற் பெருமானை மனமுருகப்பாடி மகிழ்வதைத்

* இவ்வுண்மை யுத்த காண்டத்திறுதிச் செய்யுள்களால் விளங்கும்

தக்குப் பெரும்பேறாக மதித்துப் பேசுகின்றார். பாகவதஸேவையே தமக்கு கந்த பணி என்று பாராட்டிக் கூறுகிறார். திவ்யப்ரபந்தம், அஷ்டப்ரபந்தம் முதலானவற்றிலுள்ள அருந்தொடர்களும் அபிப்பிராயங்களும் இத் திருப்புகழில் விரவிவருதலும் அறிந்து மகிழற்பாலது. இவற்றால், ஸ்ரீவைஷ்ணவ ஸமயத்தில் இவ்வாசிரியர்க்குள்ள ஊற்றம் இத்தகைத்தென்பது ஒருவகையாக உணரலாகும்

இனி, திருமால்மருகரான முருகக் கடவுள்மீது அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பிரபந்தம் இதற்குக் காலத்தான் முந்தியதோ அன்றிப் பிந்தியதோ என்பது அறியக்கூடவில்லை. இதன்கண்ணுள்ள இரண்டொரு பாடல்கள் சிற்சில வேற்றுமையுடன் அதனிடத்துங் காணப்படுகின்றன. ஆயினும் அவை இவ் இராமாயணத் திருப்புகழுக்கே சிறப்பாக உரியன என்று தோன்றுவதால், பிற்காலத்து ஏடெழுதுவோர் அவற்றை அருணகிரியார் திருப்புகழில் இடைச்செருகலாக மாற்றி எழுதிவிட்டனர்போலும். அது நிற்க.

இப் பிரபந்தமுழுமையும் அமுதவெள்ளம் பெருக்காறெடுத்தாற் போன்ற உயரிய ஒழுக்கமுடையதாய்ச் செல்லுகின்றது. சிந்தையால் நினைக்குந்தோறும், செவியினாற் கேட்குந்தோறும், வாயினாற் பாடுந்தோறும் தெவிட்டாத தீஞ்சுவையாய் இஃதெல்லையில்லாத இன்பம் விளைக்கின்றது.சிந்திக்கத் தித்திக்கும் தேனாகிய திருமாலைவழுத்துதலுற்ற இப்பனுவலும் அத்தன்மையதாதல் அருமையுடைத்தன்றே? இச் சிறப்புப் பற்றி, ''சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய வந்த இருவினைக்கு மாமருந்து'' என்னும் ஆன்றோர் கூற்றிற்குத் தக்கதோர் இலக்கியமாக இதனை எடுத்துக்காட்டலும் ஏற்புடையதாகும். ''இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு'' என்பவாகலின், இத் திருப் புகழையும் ஓதியுணர்ந்து ஒழுகவல்லார்க்கு இருவினைத் தொடர்பு மற்றுப் பேரின்பமாகிய பெருவாழ்வும் எய்துமென்பதில் ஐயமென்னை? இப் பெற்றியானே வானோர் மருந்தும் இதனை மானுவதின்றெனத் துணிந்து கூறலாம். அது நாவின் பொறி ஒன்றினே நற்சுவையளிக்கும் இது செவியினும் வாயினும் சிந்தையினும் தித்திக்கும். அது மரணமொன்றனையும் நீக்கும். இது வினைப்பயனை வேரறுத்து வீட்டின்பமும் ஆக்கும். ஆகலின் இதன் ஒப்பற்ற உயர்வினைப் பிறிதோராற்றாற் பேசலாவதில்லை.

இனி இத்தகையவாய் எழினலங்கவினும் இவ் விழுமிய பனுவலின் முதற்பகுதி இங்ஙனம் குறிப்புரையோடு அச்சிட்டு வெளியிடப் பெறுகின்றது. இதனைப் பயிலுந் திருவுடையார் எவர்க்கும் இஃதொரு நல்விருந்தாகுமென்றே நம்புகின்றனம். ஆகலின் இதன் விஞ்சிய பகுதிகளும் விரைவினில் வெளிவருமாறு இறைவன் திருவருள் புரிக.

**திரு. நா. அப்பனையங்கார்,**
மதுரை

# பாலகாண்டம்

ஸ்ரீ:

# இராமாயணத் திருப்புகழ்

## தற்சிறப்புப்பாயிரம்

1. பணிமேலே படுத்தவனைத் தனுவேதா னெடுத்தவனைப்
பகைசேர்தா டகைக்குமுதற் கணையேவிப்

பதையாதே துணித்தவனைத் திருவோடே [1]திளைத்தவனைப்
பரதாழ்வா னிருக்கவனத் திடையே போய்க்

கணையாலே குரக்கரசைப் பொருசீரா மனைக் கடலைக்
கடவா[2]நீ டளக்கர்குலக் கிளைமாளக்

களமீதே யறுத்தவனைப் பரிவோடே துதிக்கமுழுக்
கலைஞானோ தயத்தெளிவைத் தரவேணும்

துணைவாகா சினிப்புலவர்க் கரசே[3]சீ தளப்பொருநைத்
துறையாளா வெதிர்ச்சமயக் குலகாலா

தொழுவார்தீ வினைச்[4]சிகரிக் கிடியேறே மணக்குமகிழ்த்
தொடைமார்பா [5]தடுத்திடுமுட் பகையாவுந்

தணிவோனே யருட்கடலுட் டுளைவோனே சகத்துணர்வைத்
தருவோனே செழித்தமறைப் பொருள் சேரத்

தமிழோரா யிரத்திலமைத் திடுவோனே யெடுத்தபுகழ்ச்
சடகோபா திருக்குருகைப் பெருமாளே.

(குறிப்பு: இது நம்மாழ்வார்விஷயமான காப்பு. பணி-பாம்பு; ஈண்டு ஆதிசேடனைக் குறித்தது. தனு-வில். திரு-இலக்குமி; அது இங்கு சீதாபிராட்டியைக் குறித்தது. திளைத்தல் - அனுபவித்தல். குரக்கரசு-குரங்கரசு-குரங்குக் கூட்டங்களுக்கு அரசனான வாலி. பொருசீராமனை-அம்பாலெய்துகொன்ற ஸ்ரீராமபிரானை. கடலைக்கடவா- கடலைக் கடந்து. களம்-போர்க்களம். பரிவு-அன்பு, சீதளம்-குளிர்ச்சி, பொருநை-தாமிரபர்ணிநதி, சிகரி-மலையுச்சி, உட்பகை - காமம், குரோதம், லோபம்,

---

[1]மணத்தவனை, [2]நீளரக்கர், [3]சீதளக்குமரித், [4]சிகரத்திடி, [5]பிறப்படவுட்

# இராமாயணத் திருப்புகழ்

மோஹம், மதம், மாற்சரியம் என்பன. தமிழ்ேோராயிரம்-ஆயிரம் பாசுரமுடையதாகச் செய்யப்பட்ட **திருவாய்மொழி** யென்னுந் திவ்யப்ரபந்தம், குருகை-ஆழ்வார்திருநகரி, திருக்குருகைப் பெருமாள் என்றது இங்கு நம்மாழ்வாரை)

2. பாரதிநெஞ் சாலுணர்ந்து மேல்வருமென் றேதெளிந்து
பாடியநன் காதைபண்டை மொழிவேதம்

பார்பகருந் தூயமந்த்ரம் நோய்முழுதுந் தீர்மருந்து
பாலமுதந்[1]தேனெதிர்ந்த வினையீர்வாள்

ஈரமில்வெம் பாறைநெஞ்சு நேருருகும் பாடலண்ட
ரீசனயன் பேணுமின்ப மறவாதோர்

யாதுநினைந் தாலுமந்த வாழ்வுதருந் த்யாகசிந்து
ராமசயம் பாடவந்து துணையாவாய்

வாரிகடந் தேகி வஞ்சி யாருயிர்பொன் றாதுகண்டு
மாநகரஞ் சூறை கொண்டு களமீதே

வானின்மருந் தேகொணர்ந்து வீரர்மயங் காவிதந்து
மாலிருதிண் டோள் விளங்க வமராடிச்

சோரன்மடிந் தேகவன்று தேவிபதஞ் சூடிநின்று
சோபனமுங் கூறிவந்து சுடுதீமுன்

சூழ்பரதன் காணமுந்தி யாவிபுரந் தேயுகந்த
தூதனெனும் பேர்புனைந்த பெருமாளே

(குறிப்பு இது அநுமான்விஷயமான காப்பு, பாரதி-சரஸ்வதி, 'பார்தி..... காதை' என்றது ஸரஸ்வதியே வான்மீகரது நாவில் வீற்றிருந்து இராம சரிதத்தைப் பாடினாள் என்று பெரியோர் கூறியதைப் பின்பற்றிக் கூறியவாறு. சிந்து - கடல். வஞ்சி - சீதாபிராட்டி. பொன்றுதல் - அழிதல். களம் -யுத்தரங்கம். மருந்து - சஞ்சீவி. ஆவி - உயிர். சோரன் - இராவணன். இவ்விரண்டு பாட்டும் 'நாடிய பொருள்கைகூடும்' என்னும் கம்பர் பாடலின் விரிவுரை போன்றிருத்தல் காண்க)

---

[1] தேனெதிர்ந்து

# பாலகாண்டம்

3\. கோழையா னவர்மிகுத்த வீரமே புகலுகிற்பர்
கோதுசே ரிழிகுலத்தர் குலமேன்மை

கூறியே நடுவிருப்பர் சோறிடார் தருமபுத்ர
கோவுநா னெனவுரைப்பர் மிடியூடே

யாழுவார் நிதியுடைக் குபேரனா னெனவுரைப்பர்
ஆசுசேர் கலியுகத்து நெறியீதே

யாயுநூ லடைவுகெட்ட நானும்வே றலவவர்க்கு
ளாகையாலவையடக்க முறையேனே

யேழைவா னவர்பிழைக்க ஆணைவா சவனடத்த
ஈழமேல் வெயிலெறிக்க மதிவேணி

ஈசனார் தனதிடுக்கண்மாறியே கயிலைவெற்பில்
ஏறியே யினிதிருக்க விருநாலு

வேழமா னவையினெற்றி நாலுகோ டுகண்முளைக்க
வேதவீ டணனொருத்தன் முடிசூட

வீரரா வணனுடற்குண் மூழ்கியே கழுகுகொத்த
வீறுசேர் சிலையெடுத்த பெருமாளே.

(குறிப்பு: மிடி-தரித்திரம். ஆசு-குற்றம். ஆணை-ஆக்ஞை. வாசவன்-இந்திரன். ஈழம்-இலங்கை. மதி-பிறைச்சந்திரன். வேணி-சடை. இடுக்கண்-(கைலாயத்தை இராவணன் தூக்கியசைத்தமையாலுண்டான) துன்பம். வெற்பு-மலை, வேழம்-யானை. வீறு-பெருமை. முதலிரண்டு பாட்டும் வணக்கம், வருபொருளுரைத்தல், பய னென்றவற்றைக் கூறலானும், இப்பாடல் அவையடக்கங் கூறலானும் தற்சிறப்புப்பாயிரமாயினவாறு காண்க.)

# இராமாயணத் திருப்புகழ்

## நூல்

### பாலகாண்டம்

4. உலக மொருமூன்று மொண்பெற்ற தத்துவமும்
அகர முதல்சான்ற வைம்பத்தொ ரக்கரமு
முரிய மறைநான்கு மந்தத்து நற்பொருளு முயிர்யாவும்

உருவு நடைவாய்ந்து மண்பற்றி நிற்பனவும்
அகமு மகமேய்ந்த வண்டத்தி னிற்புறமும்
ஒளியி லொளிபோன்ற இன்பத்தி னிற்சுடரு மறிவாகி

யிறுதி யறவாழ்ந்து நண்பர்க்கு ளொத்துருகி
யடிமை மலபாண்ட தொந்தத்தை விட்டொழிய
விதய விருள்வாங்கி யென்றுன் க்ருபைக்கணருள் தருவாயோ

மலரு மலரேந்தி யண்டத்து நக்கனயன்
அமரர் கிளைசூழ்ந்து வந்திக்க [2]நற்கமலை
மருவு மிசையோங்க வந்தக் கடற்றிடரின் முகில்போலே

வடிவி னெழிறோன்ற முந்தக கவுத்துவமும்
இனிய ப்ரபைகான்று விஞ்சத் திருத்துளப
மருவ வொருகாந்தை நண்புற் றிடப்பெரிய கரமீதே

நிலவு தருகாந்தி சங்கத்தி னிற்பிறழ
வெயிலை யழகார்ந்த செஞ்சக்ர முற்றுமிழ
நிகரில் கதைசார்ங்க முங்கட்க மெய்ப்படையு முடனவாழ

நிரைகொ ளுலகீன்ற வுந்தித் திருக்கமலம்
மலர வடிசேர்ந்து கங்கைத் திருப்பொலிய
நெடிய தொருபாம்பி னின்பத் திருக்கண்வளர் பெருமாளே.

---

[1] புரிவாயோ. [2] நக்கமலை

# பாலகாண்டம்

(குறிப்பு : அகரமுதல்சான்ற ஐம்பத்தொரக்கரமும் என்றது வடமொழி முதலெழுத்துக்களை. பற்பம்-தாமரைமலர். சரணம்-திருவடி. நக்கன்-சிவன். அயன்-பிரமன். அமரர்-தேவர்கள். கமலை-இலக்குமி. மருமம்-மார்பு. முகில்-மேகம். வடிவம் -சொரூபம். எழில்-அழகு. ப்ரபை-ஒளி. கான்று-கக்கி. விஞ்ச-மேம்பட. மருவ-பொருந்த. காந்தை-நாயகி, இங்கு பூமிப் பிராட்டியைக் குறித்தது. கரம்-கை. நிரை-வரிசை. உந்தி-கொப்பூழ்.)

5. கொழுந்தசை நிணத்துட னெலும்பு
நரம்புகுடர் சுக்கில மலங்கள்
குறும்புன லிரத்தமொ டமைந்து முடைநாறுங்

குரம்பையை நமக்குநிலை யென்று
தனம்பலகுவித்துநிறை பெண்கள்
கொடுங்கையி லணைக்கமகிழ் சிந்தை யொருகாலம்

உழுந்துருள்கணப்பொழுது நின்று
தரங்கமற வுட்பகை களைந்து
னுடன்படு மெனிற்புவி யடங்க வரசாளும்

ஒடுங்கலில் சிறப்பினிது தந்து
பெரும்பத மளித்திடுவை யென்ப
துணர்ந்துமுணர் வற்றுநர கின்கண் விழுவேனோ

செழுந்தருண பற்பபதி நஞ்ச
மருந்திய தனிக்கடவு ளண்டர்
திருந்துகுலி சத்தனொ டடங்க வனைவோருஞ்

செறிந்திடு மரக்கர்பொர நொந்து
நெடுங்கனக வெற்பின்மிசை வந்து
தெளிந்துகமலப்பத நினைந்து க்ருபையாளா

வழிந்தன மிளைத்தனம னங்கொ
டிரங்குனத டைக்கல முகுந்த
வனந்தலையினித்தவிர்க வென்று துதிபோதின்

# இராமாயணத் திருப்புகழ்

அடைந்திடு திருத்துயி லொழிந்து
நெடுங்கட லிடைப்ரபைசி றந்த
அநந்தசய னத்தினலெ ழுந்த பெருமாளே

(குறிப்பு : குரம்பை-கூடு. பற்பபதி-பிரமன். நஞ்சம் அருந்திய தனிக் கடவுள்-சிவன். அண்டர்-தேவர். குலிசத்தன்-வச்சிராயுதத்தையுடைய இந்திரன். கனகவெற்பு-மஹாமேரு. கமலப்பதம்-தாமரை மலர் போலும் திருவடி. அனந்தல்-நித்திரை.)

6. மடுவிலே கரிக்குமுந்து வந்து
நெடியதூ ணினைப்பிளந்து நின்று
மருவுபா ரனைத் துமண்ட ரண்ட வகையாவும்

மதுரவாய் மடுத்தடங்க வுண்டு
[1]பெரியநாபி யிற்பரிந்து தந்து
வருசரா சரத்துளும் புறம்பு மகலாநீ

அடியனே னினைக்கவுங் குணங்கள்
பரவியே துதிக்கவுந் தெளிந்துன்
அடிதொழா வழைக்கவும் பரந்து திரியாதே

அறிவிலே செலுத்தவுங் கலந்தெ
னளவுபோ லவொத்துநின்ற தஞ்ச
மதனையா னுரைத்திடுந் தரங்க ளெனலாமோ

நெடியவேலை விட்டெழுந்து சங்கு
திகிரிபாணி யிற்றுலங்க வெங்கு
நிகரிலாத பற்பமங்கை துங்க மணிமார்பா

நிறையவே நிறத்த கொண்டன் மண்டி
வருவபோ லெழுச்சிகொண்டு நுங்கள்
நினைவையா முடிப்பமென் றெழுந்த வெழில்காணாக்

---

[1]நெடியநாபி.

# பாலகாண்டம்

கடவுளே க்ருபைத் தடங்க ணெங்கள்
-இறைவனே[2] யிரக்ஷியென்று வந்து
கனகமேரு வுச்சியின்க ணின்று சிவனாடக்

கமலயோனி பொற்கணம்பு சிந்த
வமரர்பூ விறைத்திறைஞ்ச வன்று
கருடவா கனத்தில்வந் திழிந்த பெருமாளே

(குறிப்பு : கரி-கஜேந்திரன். மதுரம்-இனிமை. வாய்மடுத்து-வாயிற் பெய்து..அடங்க-முழுவதும். நாபி-கொப்பூழ். பரிந்து-விரும்பி. வேலை-கடல். திகிரி-சக்கரம். பாணி-கை. துங்கம்-உயர்வு. மண்டி-நெருங்கி. கொண்டல்-மேகம். கமலயோனி-பிரமன். அமரர்-தேவர். இறைஞ்ச - வணங்க.)

7. அகப்பொருண் மார்க்க முணர்ந்து
புறப்பொருள்போக்கி மதங்கள்
அடுத்த தொல்காப்பிய பஞ்ச வதிகாரம்

அனைத்திலு நாக்க ளழுந்தி
வழுத்திடு நாற்கவி யின்சொ
லழுக்கறு பாட்டுட னின்று புலவோருன்

மகத்துவ மேத்தின ரந்த
நெறித்தமிழ் கேட்டு மியன்ற
வழக்க மிலாக்கவி கொண்டு தமியேனும்

வழுத்துகை தோத்திர மென்று
பொறுத்தரு ணீக்குத லின்றி
மகப்பெறு வார்க்கவர் புன்சொ லிதமாமே

மிகுத்த விராக்கதர் தங்கள்
கனத்த பராக்ரம மின்று
விரித்திட லார்க்கு வசந்தண் மதிபானு

---

[2] யிரக்ஷியென்றெழுந்து.

வெளிப்படு காட்சி யொழிந்து
மகத்திறை யாக்கை குலைந்து
மிடித்தது நூற்றுறை யெங்கு நெறிகோடிச்

செகத்திறை மாட்சி குலைந்த
தெமக்கினி மூச்சிலை யெங்கள்
சிறைத்தலை மீட்டரு ளென்று முடிதாழாச்

சிறப்புறு நாற்றலை மைந்த
னுரைத்திடும் வார்த்தைக ளன்று
திருச்செவி சாத்தி யிருந்த பெருமாளே.

(**குறிப்பு** : மதங்கள்–பிறர்மதம் உடன்படல் முதலிய ஏழும். பஞ்ச அதிகாரம்–எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்னும் ஐந்ததிகாரங்கள். நாற்கவி–ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பனவாம்; வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா என்பனவுமாம். வழுத்துகை–சொல்லுதல். மதி-சந்திரன். பாநு–சூரியன், மனத்திறை-யாகபதி–விஷ்ணு. கோடி–வளைந்து. செகத்து–பூமியின்கண். இறைமாட்சி–அரசின்சிறப்பு. தாழா–தாழ்த்து. நாற்றலைமைந்தன்–பிரமன். செவிசாத்தல்–கேட்டல்.)

8. முனை யழிந்தது பூர்த்தி குலைந்தது
வயது சென்றது வாய்ப்பல் விழுந்தது
முதுகு வெஞ்சிலை காட்டி வளைந்தது ப்ரபைதானும்

முகமிழந்தது நோக்க மிருண்டது
ளிருமல் வந்தது தூக்க மிகுந்தது
மொழி தளர்ந்தது நாக்குழ றுந்தொறு மறிவேபோய்

நினை வயர்ந்தது நீட்டன் முடங்கலு
மவச மும்பல வேக்கமு முந்தின
நெறி மயங்கின மூப்பு முதிர்ந்தது பலநோயும்

நிறைய நின்றது பாய்க்கிடை கொண்டது
சல மலங்களி னாற்ற மெழுந்தது
நிமிட மிங்கினி யாச்செனு மன்றுமுன் வருவாயே

இனி யெழுந்திரு மாத்திர ளண்டர்கள்
கவியு மெண்குமெ னாச்சொரு பங்கொளு
மினிய குன்றொடு காட்டி லடைந்திடு நிரையார்தோள்

இருபதும் ப்ரபை காட்டு நெடுந்தலை
யொருப துந்துக ளாக்கி வணங்கல
ரெவரை யுந்தனி யாக்ஞை யிடும்படி யினிமேல்[1]யான்

மனுவரம்பது காத்து நிறம்பெறு
திகிரி சங்கமு மாற்ற லநந்தனு
மருவு தம்பிய ராய்த்தொழ நந்தய ரதனார்தம்

மதலையென்று[2]ந லேற்ற மிகுந்துள
மனித னென்று மயோத்தி யிடந்தனில்
[3]வருவ னென்றொரு வார்த்தை வழங்கிய பெருமாளே.

(**குறிப்பு** : சிலை–வில். ப்ரபை–ஒளி. நோக்கம்–கண். கவி–குரங்கு. எண்கு–கரடி–குரங்கினுள் ஒருவகை. குன்று–மலை. வணங்கலர்–சத்ருக்கள். திகிரி–சக்கரம். அநந்தன்–ஆதிசேடன். மதலை–புதல்வன்.)'

9. கமலமுற்றவ ளுலகுபெற்றவள்
திருவுரத்திடை குடியிருப்பவள்
கமைபடைத்தவ ளழகுமிக்கவள் நெடுவேலை

கடையுமப்பொழு திளிலுதித்தவள்
புனிதலக்குமி யொருதினத்திடை
கழல்செறித்திடு திருவடித்தொழு திறையோனே

நிமலநிட்கள ப்ரியமுனக்குள
தெவரிடத்தினி லெனவுரைத்தலு
[4]நிறைவிருப்பொடு னிசைபுலப்படு கவிபாடும்

---

[1]யாம், [2]நமேற்றமறந்துன, [3]வருவமென், [4] நிறைவிருப்புட..

நிபுணர்சொற்களி லெனவுரைத்தனை
யதனையுட்கொடு [1]கவியுரைக்கினு
நினது பொற்றிரு வடிதுதிப்பது தவிரேனே

சமிதைபத்திர மிகுதருப்பைகள்
பசுவிருத்தொடு விபுதர்மெய்த்தவர்
சருமநற்றுகி லுரலுலக்கைகள் நடுயூபம்

சருவரைத்திடு சிலையுருக்குநெய்
[2]யரணிநத்தொடு கயிறுநெற்பொரி
சகடைமற்றுள கலமனைத்தொடு முறையாலே

யமரர்பெற்றிட வவிகொடுத்தொரு
வருடமிப்படி கலைமுகத்தவ
ணணிமகத்திடை தயரதப்பெயர் மகராசன்

அரியமுத்தழல்வளரவுத்தம
நெறிநடத்தலு மவனிடத்தினி
லவதரித்திடவெனநினைத்தருள் பெருமாளே.

(**குறிப்பு** : கமலம்--தாமரை. உரம்--மார்பு. கமை—க்ஷமை—பொறுமை. வேலை—கடல். கழல்- கொடை., வீரம் முதலியவற்றால் மேம்பட்ட ஆடவர் காலணி. செறித்திடு—கட்டப்பட்ட. நிமலன்—சுத்தன். நிட்களன்—உருவமில்லாதவன். நிபுணர்—சாமர்த்தியவான்கள். சமிதை—சமித்து—ஓமவிறகு. பத்திரம்—புரசு முதலிய இலை. இருத்து—ரித்யுக்கள். விபுதர்—தேவர். சருமம்—கிருஷ்ணாஜிநம். துகில்—வஸ்திரம். யூபம் — தறி. சரு—தேவருணவு. அரைத்திடு சிலை—அம்மி. அரணி—தீக்கடைகோல். நத்து—சங்கு. சகடை—வண்டி. அமரர்—தேவர். அவி - தேவர்க்கு வேள்வித்தீயிற்கொடுக்கும் உணவு. கலைமுகத்தவன்—கலைக்கோட்டு முனி. மகம்—யாகம். முத்தழல்—ஆகவநீயம், காருகபத்யம், தக்ஷிணாக்கினி என்பன. உத்தமம்--நன்மை. நெறி--வழி. அவதரித்தல்—பிறத்தல்.)

---

[1]கவிவிரிக்கினு, [2]யரணி நற்றொடுகயிறு நற்பரி.

10. பாதித்ரி யம்பக னுந்தி நான்மக னம்புய மங்கை
பாக மிகுந்த வுரங்கண் மதிபானு

பாத நெடும்புவி கங்கை வேத மியம்புவ துன்சு
பாவ [1]முணர்ந்திட லெந்த [2]வகையேயாம்

யாதுமுன் வஞ்ச வுடம்பு வேறிலை யிங்கொரு சிந்தை
யாவை [3]விளம்பிலு மன்பு [4]தவிராதே

யாரைவ ணங்கினு நண்பி னாரை யிணங்கினு நெஞ்சி
லாரை விரும்பினு மங்கு நினதாமே

ஓது மிரண்டறு திங்கள் வேள்வி நடந்தபின் வந்தொ
ரூனமில் பிண்டம் வழங்கி யொருபூதம்

ஓடி மறைந்திட மைந்தர் பேறினி யுண்டெென நெஞ்ச
மோகை யுறுந்தவ னம்பொ னடிசூடிக்

கோதறு பிண்டம் வகிர்ந்து தேவிய ரொன்றொ டிரண்டு
கோதைய ருண்டிடு மென்று முறையாலே

கோமக [5]னன்று வழங்க மாதவ முன்பு புரிந்த
கோசலை பங்கொடு சென்ற பெருமாளே

(**குறிப்பு** : த்ரியம்பகன்–முக்கண்ணன்–சிவன். உந்தி–கொப்பூழ். அம்புய மங்கை–இலக்குமி. உரம்–மார்பு. மதி–சந்திரன். பானு–சூரியன். சுபாவம்–இயல்பு. இரண்டறுதிங்கள்–ஒருவருடம். வேள்வி–யாகம். ஊனம்–குறை. ஓகை–விருப்பம். தவன்–கலைக்கோட்டுமுனி. கோமகன்–தசரதன். வழங்க–கொடுக்க).

11. மாலையை முடித்து விளங்கு
சேலையை யுடுத்து நிறைந்த
வாண்முக மினுக்கி நெருங்கு முலைமீதே

மாமணி நிரைத்து முயங்கு
தோள்களை யசைத்து நடந்து

[1]முணர்ந்திடிலிந்த, [2]வகையேயோ, [3]யியம்பினு, [4]தவறாதே [5]னின்று

வாள்பொரு கடைக்க ணெறிந்து தெருவூடே

சாலுமிளை ஞர்க்கு மிகுந்த
[1]வாதைவரு வித்திடு பெண்கள்
தாமிடு துவக்கி லழுந்தி யயர்வேனைத்

தாமத குணத்திலு மந்த
ராசத குணத்திலு முந்து
சாதுகுண நிட்டையி லென்று விடுவாயே

யாலிலை கிடக்கை தணந்து
வேலையி னிருக்கை திறம்பி
யாதவ னிடத்திலு மின்றி யமரேசன்

ஆமர சிருப்பு முனிந்து
மாகயிலை வெற்பொடு கஞ்ச
மாதியிட முற்று மகன்று கரைகாணாக்

கோலமறை யுச்சி துறந்து
மாதவர் மனத்தை நெகிழ்ந்து
கோகனகை சொர்க்க மிகந்து வளர்பாயற்

கோளரவை விட்டு விகங்க
பூபதி கழுத்தை மறந்து
கோசலை வயிற்றி லிருந்த பெருமாளே.

(**குறிப்பு** : வாண்முகம்–ஒளிபொருந்திய முகம். முயங்குதோள்–பொருந்திய தோள். பொரு–தாக்குகின்ற. துவக்கு–கட்டு. தணந்து–நீங்கி. திறம்பி–மாறி. ஆதவன்–சூரியன். கோகனகை–இலக்குமி. சொர்க்கம்–தனம். இகந்து–நீங்கி. கோளரவு–வலியபாம்பு–ஆதிசேடன். விகங்கபூபதி–கருடன்.)

12. கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பெயர்ந்து

[1]வேட்கை

# பாலகாண்டம்

கடையில்லந் துதித்துக் குழந்தை வடிவாகிக்

கழுவியங் கெடுச் சுரந்த
முலையருந்தி விக்கக் கிடந்து
கதறியங்கை கொட்டித் தவழ்ந்து நடையாடி

யரைவடங்கள் கட்டிச் சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
யவையணிந்து முற்றிக் கிளர்ந்து வயதேறி

அரியபெண் களைப் பற்றி நொந்து
பிணியுழன்று சுற்றித் திரிந்த
[1]தமையுமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ

இரவியிந்த்ரன் வெற்றிக் குரங்கின்
அரசரென்று மெய்ப்பற்ப வுந்தி
யிறைவ[2]னெண்கி னிற்கர்த்த னென்று நெடுநீலன்

எரியனென்று மைப்பற்று கண்டன்
அனுமனென்று மொப்பற்ற வண்டர்
எவருமிந்த வர்க்கத்தில் வந்து வணமேவத

தரையிடம் பிடிக்கச் சுமந்த
திருவநந்த னுக்ரப்ர சண்ட
தவளசங்கு சக்ரத்தொ[3]டன்று பிரியாதே

தனியுடம் பெடுத்துத் தயங்கு
மிளைஞரென்று சுற்றத் துலங்கு
தயரதன்ற வத்திற் பிறந்த பெருமாளே.

(**குறிப்பு**: குதம்பை–ஒருவகைக் காதணி. பிணியுழன்று–நோயினால் வருந்தி. இரவி–சூரியன். பற்பவுந்தி இறைவன்–பிரமன். எண்கிணிறகத்தன்–ஜாம்பவான். சூரியன்–அக்கினி. மைப்பற்று கண்டன்–சிவன். அண்டர்–

---

[1]தமையவுன், [2]னெண்கினக்கர்த்த, [3]டொன்று

ர். உக்ரம்-வேகம். பிரசண்டம்–வீரம். தவளம்–வெண்மை. துலங்குதல்–
ங்குதல்)

நளிகடல் பூத மெடுத்த திக்கொடு
வரைகள் சுராசுரர் பற்பன் முக்கணன்
நடவு சராசர முற்று மற்றுன — ததிரூப

நணுகி விசார முறைத்து நித்தமும்
நுணுகிய கேள்வி படைத்து மப்படி
நவில்வது தூரமெனக் குறித்துனை — மதுசூதன்

துளவணி மாலரி க்ருஷ்ண னச்சுதன்
நரஹரி கேசவ னத்ரி விக்ரம
சொருபன் முராரி ப்ரசித்தன் விஷ்ணு — மண்மகள்கேள்வன்

சுரிவளை யாழியன் மச்சன் வாமனன்
மரகத மாய னெனத் திருத்திய
துதிபெறு பேர்பல விட்ட ழைத்திடு — மெனையாள்வாய்

இளையகை கேசி வயிற்றி லுத்தம
பரத குமார னுதிக்க நட்புடன்
இணைபிரி யாத சுமித்திரைப் பெயர் — மடமாதின்

இருவிழி போல விலக்கு வப்பெய
ரறிவுடை யானொடு சத்து ருக்கனன்
இருவர்களாகி யுதிக்க வித்திற — மொருமூவர்

கிளரிளை யார்கள் சிறப் புறத்தச
ரதநர பாலனு மிக்க புத்திரர்
கெழுமிய நால்வ ரெனக் கனத்தபொன் — மழைவீச

க்ரகநிலை நாள்கண் முகுர்த்த மொப்பற
வருபுனர் பூச தினத்தின் முற்படு
கிளிமொழி கோசலை பெற்றெ டுத்தருள் — பெருமாளே.

(**குறிப்பு** : நளி- குளிர்ச்சி. வரை–மலை. பற்பன்–பிரமன். நடவுதல்–

செலுத்தல். சராசரம்–அசையும் பொருளும் அசைவில் பொருளும். அதிரூபம்–மிகச் சிறந்தவடிவம். விசாரம்–ஆராய்ச்சி. உறைத்து–உறுதி பெற்று. கேள்வி–உபதேசம். நவில்வது–சொல்லுவது.)

14. படாப்ர வாள வலங்க்ருத பூஷண
கராத்ரி ரூப சுகந்த மனோகர
பராக்ர மாதுல துங்க பயோதர மடவார்தம்

பராக்கி லேதிரி யுங்குண கீனன்மெ
யுறாத்து ரோகி யிடும்பன் வியாகுலி
படாத் [1]துராக்ருத தொந்த மெலாமுறு கொடியேன்பான்

சுடாக் கடாவி வருஞ்சம னார்பொரு
பிராப்தி யாயுயிர் நின்றுவெரீவரு
கனாப்ர கார மெனும்படி போவதன் முனமேநீ

கராத்தன் [2]வாயற வந்தது போலவென்
விடாய்க்கு மேவெளி நின்றுக்ரு பாகர
கடாக்ஷ மானது தந்து பராகதி யருள்வாயே

நடாத்து நேமி யசஞ்சலனேசக
வியாத்தி யான பரஞ்சுட ரேசெழு
நறாத்[3]துழாய்புனை யெம்பெரு மானெமை யுடையோனே

நமோத்து நாரண வென்றிமை யோர்தொழ
வுலாத்துமோர்கரு டன்புய மேறியு
நகார்ப்ர வாசம்விடுஞ்சிவ னான்முகன் முதலோரென்

றடாப்ர வாகன விலங்கையின் மீதுள
விராக்க தாதியர் கொண்டுள நீள்வர
மயோாக்ய வாழ்வொடடங்கலு நீறெழ நரனாகி

யராக்கு லாவிய பொங்கணை பாழ்பட
விடாப் பயோததி யும்பொலி வேயற
வயோத்தி மாநக ரந்தனின் மேவிய பெருமாளே

---

[1]துராகத, [2]வாயுற [3]துழாயணி

# இராமாயணத் திருப்புகழ்

(**குறிப்பு**:படாம்–வஸ்திரம். ப்ரவாளம்–பவளம். அலங்க்ருத–
அலங்கரிக்கப்பட்ட. பூஷணம்–ஆபரணம். கராத்ரி–யானை. ரூபம்–வடிவு.
கந்தம்–நறுமணம். மனோகரம்--அழகு. பராக்ரமம்–வீரம். அதுல–ஒப்பற்ற.
துங்கம்-உயர்வு. பயோதரம்–தனம். மடவார்–பெண்கள். பராக்கு–அசட்டை.
குணகீனன்–குணமற்றவன். மெய்–சத்யம். துரோகி–கொடும்பாவி.
இடும்பன்–அகந்தையுடையவன். வியாகுலி–துக்கமுடையவன். துராக்ருதம்
கெட்டநடை. தொந்தம்–ஒன்றோடொன்று முரண்பட்டது. சமன்–யமன்.
ப்ராப்தி–அடைவு–முடிவு. வெரீ–பயந்து. கரா–முதலை. விடாய்–இங்கு
பரமாத்மாவையடைய வேண்டுமென்ற விருப்பு. க்ருபாகரகடாக்ஷம்–
கருணைக்கிருப்பிடமான பார்வை. பராகதி–மேலான பதவி. நேமி – சக்கரம்.
நடாத்தல் – நடத்துதல். அசஞ்சலன் – அசைவற்றவன். சகம்- உலகம்.
வியாப்தி – நிறைவு பரஞ்சுடர் – மேலான ஒளி. நமோத்து–நமோஸ்து–
வணங்குவார் கூறும் கூற்று. நகார் – நகர். சிவன் நான்முகன் முதலோர்
உம்நகார்ப்ரபாசம்விடும் என்று எனக் கூட்டிச் சிவனும் நான்முகனும்
முதலாகிய தேவர்கள் எல்லாரும் உங்கள்
கட்டினவாசத்தைவிட்டு(விலங்கினங்களாக) வாருங்கள் என்று கூறி என்ற
பொருள்காண்க. அடா–அடைய முடியாத. பிரவாகம்–நீர்ப்பெருக்கு.
இடங்களும்–முழுதும். நீறெழ–பொடிபட அழிய. நரனாகி–
மனிதவடிவுடையனாகி. அராக்குலாவிய பொங்கணை–பாம்பாகிய
விளக்கமிக்க சயனம். விடாப்பயோததி–நீங்காது பள்ளிகொண்டருளும்
பாற்கடல். பொலிவு–விளக்கம்.)

6. வீழுடம்பு தானெடுத்து நின்ற
[1]மானிடங்க ளாமிறைச்சி யெங்கு
மேலெழுந்த வாசையிச்சை[2]யொன்றி வருகோலின்

மீதடர்ந்து கோவையற்ற பின்பு
கோபவங்கி மீதிலிட்டு வெந்த
மேனிகண்டு வாய்மடுத் தருந்து மொருகாலன்

பாழிலிந்த நீள்பிறப்பில் [3]வந்த
லாபமொன்று மேயிலைத் திரிந்து
பாதகங்க ளேபடைத்து வெம்பி யுழல்வேனோ

---

[1]மானுடங் [2]யென்று [3]வந்து

## பாலகாண்டம்

பாரதொந்த மாயையைக் கடந்து
ஞானசிந்தை யாலனைத்தும் வென்று
பாதசெஞ்ச ரோருகத்தி லென்று புகுவேனோ

வாழுமுண்ட காசனத்தன் மைந்த
னாறிரண்டு நாளினிற் புகன்ற
வாய்மைகொண்டு நீர்விடுத்து மஞ்சள் திமிராமேல்

மாலைதண்டை யாழிபொற்சதங்கை
காறைசங்கு நாணொடுத் தணிந்து
மார்புகண்கை கான்மினுக்கி யண்ட மொடுபூமி

யேழுமுண்ட வாய்விளக்கி யெங்கள்
கோசலன்கு மாரிமுற்ப யந்த
ராணியன்பொ டேகொடுக்க நெஞ்சு களிகூர

ராசவம்ச மேருவொத்த தந்தை
யாகமொன்ற வேயணைத் திருந்து
ராமனென்று பேரிடக் கிடந்த பெருமாளே

(**குறிப்பு** : இறைச்சி–மாமிசம். மானிடம்–மானுடம்,மனிதப்பிறவி. ஆசை–அன்பு. இச்சை–விருப்பம். ஒன்றி–பொருந்தி. கோலின்–தண்டத்தினால். மீதடர்ந்து–மேலேபுடைத்து. கோவை–உடற்கட்டு. கோபஅங்கி–கோபமாகிய நெருப்பு. வாய்மடுத்து–வாயிற்பெய்து. அருந்துதல்–உண்ணல். காலன்–யமன். வெம்பி–வாடி. உழலுதல்–அலைதல். பாரதொந்தமாயை–கடத்தற்கரிதாய்ப் பெரிதாய் முரண்பட்டுத் தோன்றும் மாயை. பாதசெஞ்சரோருகம்–திருவடியாகிய செந்தாமரைமலர். முண்டகாசனத்தன்–பிரமன். முண்டகாசனத்தன்மைந்தன்-பிரமன்மகனாகிய வசிட்டன். புகலுதல்–சொல்லுதல். வாய்மை–வாக்கு. திமிர்தல்–பூசுதல். தண்டை–காலணி. ஆழி–மோதிரம். நாண்–அரைஞாண். ஆகம்–மார்பு. ஒன்ற–பொருந்த.)

16. வேலியடைய யாப்பயிர் நெடுங்கரை யற்றபுனல்
தாய்முலை பெறாச்சிறு குழந்தை தருக்குமிள
வேனிலடை யாக்குயில் கரும்புய லற்றமயில் அரசாளும்

# இராமாயணத் திருப்புகழ்

வீரனையி லாப்புவி மதங்கய மற்றபடை
காலவிசை பெறாக்கல மரும்பொறை கெட்டதவம்
வேதமறு பூச்சுர னருங்கவி யற்றவைவை பலநூலின்

சீலமுண ராக்கவி மடந்தையை யற்றமனை
நாணமறு கோற்றொடி விருந்துவி லக்குகுடி
சேர்பொரு ளிலாக்குறை பிறந்தநலத்திளமை கதிராளி

தேகமரு வாக்கமல மிங்கிவை யொத்துமுழு
ஞானமறு மாக்கையொ டுழன்ற வெனக்குமறை
தேடுமிரு தாட்டுணை வழங்க நினைப்பதுவு மொருநாளே

பாலொடுநெய் கூட்டியொரு சங்குநிறைத்துமணி
வாயினிடை காட்டிவிரல் கொண்டுதெறிக்கழுது
பாகுபடு தேக்கொடுக டைந்துகுடித்தவுடன் முறையாலே

பாலடையை நீக்கிமுடி நின்றுசுழற்றியது
பூமிமிசை மூக்குற[1]மு னன்று கவிழ்த்துவிரி
பாணிகொடு மீட்டுமுட லங்கமுலுக்கியிரு தொடைமேற்கொண்

டேலமுறு நீர்கொடு குடைந்து துடைத்துமண
மேவுபொடி போட்டுமெய்தி மிர்ந்து நிலப்பொடியி
னேறுமொரு காப்பினி தணிந்துயர்தொட்டிலினுள் வளர்வாயென்

றேடுசெறி சேக்கையிலு கந்துகிடத்திநனி
கோசலைப ராக்கறவி ருந்து வளர்க்குமபி
ராமகம லாக்ஷரகு நந்தன[2]நற்பெரிய பெருமாளே.

(**குறிப்பு** : புனல் நீர். தருக்குதல்–களிகொள்ளுதல். புயல்–மேகம். மதங்கயம்–மதத்தையுடைய யானை. படை–சேனை. கால்–காற்று. விசை–வேகம். கலம்–கப்பல். பொறை–பொறுமை. பூச்சுரன்–பூசுரன்–பிராமணன். கவி–வித்துவான். அவை–ஸபை. சீலம்–அழகு. கவி–செய்யுள். மடந்தை–பெண். நாணமறு கோற்றொடி–வெட்கம் இல்லாதபெண். கோற்றொடி–வளைந்த வளைகளையுடையாள். பொருளிலாக்குறைபிறந்த நலத்திளமை–தரித்திரனுடைய யௌவனம். கதிராளிதேசு மருவர்க்கமலம்–சூரிய காந்தி

[1] மருங்குகவிழ்த்து, [2] மெய்ப்பெரிய

பொருந்தாத தாமரை. மறை–வேதம். இருதாட்டுணை–பெரிய இரண்டு திருவடிகள். தெறிக்க – அமுது என்று விரித்துக் கொள்க. பாகு–குழம்பு. தேக்கு–ஏப்பம். முடி–தலை. பாணி–கை. உலுக்கி–குலுக்கி. திமிர்ந்து-பூசி. வளர்தல்-தூங்குதல். ஏடு – பூவிதழ். செறிதல்–நிரம்புதல். சேக்கை–அணை. நனி–மிக. பராக்கற–அசட்டை நீங்க.)

17. மகபதியே தாணுவேநிதி தருமணியே மேகமேயென
மகிமைகளே றி[1]நீளிர வலரானோர்

வருபொழுதே னேனெனாநகை முகமுடனே யோடிவாருமின்
மனமதுநா ணாதுகேளுமின் எனவோதித்

தகைபெறவே வீசுமேலவர் ப்ரியமொடுகா ணாது[2]வாழ்வறு
சதிரிலியாய் லோபியாய்மிடி யனுமாகித்

தளர்வுறுமா பாவியாகிய வெனையடியா ரோடுமேதகு
தலைமையினா லாளுநாளினி யொருநாளே

முகிலினைநே ரானமேனியும் வளைநிகரே ரானக்ரீவமு
முறுவலுமா வேததாலுவு மணிவாயும்

முகமுமிரா ஜீவலோசன யுகளமுநீ ணாமரேகையும்
முடிபுனையா லோலமாலையும் இருகாதும்

அகலியபூ ணாவமார்பமும் இகலியவா ஜாநுவாகுவும்
அபிநவவா ரீஜநாபியும் அரைஞாணும்

அதிவிதபா தாதிகேசமும் இளமையும்லீ லாவிநோதமும்
அழகியரா மா[3]பராபர பெருமாளே.

(**குறிப்பு** : மகபதி–இந்திரன். தாணு–சிவன். நிதிதருமணி–சிந்தாமணி. இரவலர்–யாசகர். வீசுதல்–கொடுத்தல். மேலவர்–பெரியோர்களை. லோபி–உலுத்தன். மிடி-தரித்திரம். மாபாவி-மஹாபாபி. முகில்–மேகம். வளை–சங்கு. ஏர்–அழகு. க்ரீவம்–கழுத்து. முறுவல்–புன்சிரிப்பு. தாலு-நா. இராஜீவலோசனயுகளம்–(இராஜீவம்–தாமரைப்பூ. லோசனம்–கண்.

[1]நீள்கவிவலரானோர். [2]வாழ்வுறு [3]சுராசுரர் பெருமாளே

யுகளம்–இரண்டு.) செந்தாமரைப் பூப்போன்ற இணைக்கண்கள். நாமரேகை–திருமண்–(வரை)கோடு. புனை–தரித்த. ஆலோவமாலை–அசைகின்ற மாலை. பூண்–ஆபரணம்–ஆரம்–மாலை. இகலிய–ஒத்த. ஆஜாநுவாகு–முழந்தாள்வரைநீண்ட கை. அபிநவம்–மிகப் புதியது. வாரீசம்–தாமரை. நாபி–உந்தி. அதிவிதபாதாதிகேசமும்–அநேகவிதமான திருவடிமுதல் திருமுடியீறாக உள்ள அவயவங்களும்.)

18. தாதையெனு முந்துவித் தினையொரு
தாய்வயிறெ னுந்தனிப் புலமிசை
தாழ்வறமு யன்றுவித் தியுமது பயிராகச்

சார்வினைக ளென்றுமுற் பெருகிய
நீரினைவ ளைந்துகட் டியுநெடி
தாய்மிகவ ளர்ந்துமுற் றியவழி விளைவானாற்

றூதரொடு வந்தறுத் துவலிய
பாசமது கொண்டிழுத் தொழிவறு
தூரமனை சென்றுபுக் கெரிவிழி முதுகாலன்

சோபனமு டன்புசித் திடும்வகை
யாகியபெ ரும்பிறப் பறவொளிர்
தூயபத பங்கயத் தொருதின மடைவேனோ

பாதமிசை தண்டையொப் பனை செய்து
மேதகுச தங்கைகட் டியுமறை
பாடுமொரு கிண்கிணித் திருவரை யதுசேரப்

பாணி[1]கிரி சங்குறப் புலியுகிர்
தாழ்வடமு ரம்பொருத் தியுமிரு
பாரகுழை குண்டலப் ரபையெழ முடிமீதிற்

கோதைமலர் கொண்டைசுற் றியுநுத
னாமமொடு சிந்துரப் பொடியது
கோலியுமி லங்குசுட் டியுமதி னடுநாலக்

[1]புரிசங்குறப்

# பாலகாண்டம்

கூரெழின்மு கந்திருத் தியுமுடை
யாடையவைவி சிந்துடுத் தியுமொரு
கோசலைய லங்கரித் திடவளர் பெருமாளே.

(**குறிப்பு** : வித்து—விதை. புலம்—நிலம். வித்தியும்—விதைத்தும். காலன்—யமன். புசித்தல்—உண்ணல். பதபங்கயம்—பாததாமரை. ஒப்பனை—அலங்காரம். மேதகு—மேலானதகுதியையுடைய. மறை—வேதம். கிண்கிணித் திருவரையெனச் சந்தநோக்கித் தகரவொற்றிரட்டித்தது. புலியுகிர்—புலிநகம். (சிறுவர்க்கு நோய் சீர் முதலியன அணுகாதிருத்தற்பொருட்டுப் புலிநகத்தை ஆபரணத்திற் சேர்த்துத் தரிப்பது பண்டை வழக்கு.) தாழ்வடம்—தாவடம்—மாலை. உரம்—மார்பு. பாரகுழை—பெரியகாது. ப்ரபை—ஒளி. குண்டலம்—ஒரு காதணி. கோதை—மாலை. நுதல்—நெற்றி. நாமமொடு சிந்துரப் பொடி—திருமண்காப்பும் ஸ்ரீசூர்ணமும். கோலுதல்—அமைத்தல். நால—தொங்க. விசிந்துடுதுதியும்—இருக்கிக் கட்டியும்.)

19. வேதனை முற்றும் பெருகிய
மாயவு டற்பைங் குளமிசை
வீசுவ லைத்திண் கயிறுகொ டுயிராகு

மீனடை யப்புண் படவொரு
காலனி ழுக்கும் படிபடி
மீதிலு ழைக்கும் பிறவியி தமையாதோ

போதொடி ருக்கும் பரிமள
வாசமெ னப்பொன் கிளரொளி
போலுமெ னச்செஞ் சொலினுறு பொருள்போலப்

போதம ணக்குந் திருவடி
மீதுக ருத்தொன் றிடவது
பூதிப டைக்கும் பரகதி யருள்வாமே

நாதமு றத்தண் டைகள்பல
கீதமெ ழக்கிண் கிணிமணி
நாவசை யத்தண் டுளவள வியமாலை

நாலவு டுக்குஞ் சிறுதுகில்
சோரமி ழற்றுங் குதலைக
ணாவுத வத்தும் பிகளுறு மலர்சூடுங்

கோதைநெ கச்சிந் துரநுதல்
வேர்வுத ரக்குண் டலவொளி
கூரமு கத்தின் ப்ரபையெழ மறைநாலுங்

கூடிவ ரச்செந் தளிர்நடை
கால்பத றத்தம்பியரொடு
கோசலை முத்தங் கொளவரு பெருமாளே

(**குறிப்பு** : படிமீதில்–பூமியினிடத்து. உழைக்கும்–வருந்துகின்ற. போது–.புஷ்பம். போதம்–ஞானம். அநுபூதி–அநுபவம். பரகதி–மேலானபதவி. நாதம்-ஓசை. கீதம்–இசை. துளவளவியமாலை–திருத்துழாய் கலந்துதொடுத்தமாலை.)

20. ஓடுநதி சேர்மித வைபின்வருமோ
நீரைவிட வேகுமு தமுமெழுமோ
ஓடைவடி வாய்வர வரவதன்மீன் மரைபோமோ

ஊணினொடு போவது பசியலவோ
தீபவொளி தானறு நெயினளவே
யோகையுறு மோவிலை மகண்மனநேர் பொருள்போனா

னாடிவிடு மேநிழலவர்பிறகே
நாயகனொ டேசுப மழிவிலையோ
நாயிறொடு போய்வெயில் விழவிலையோ விலைபோலே

நாளினுட னேயுயிர் செலுமினிநீ
நாளையெனி லோவச மலவுடனே
ஞானநிலை சேர்பர கதியுறுமா றருள்வாயே

நீடுமுகி லேயென துகண்மணியே
ஞானவடி வேரகு குலபதியே
நீலமலை யேதய ரதன்மகனே வெயர்வாற

# பாலகாண்டம்

நீர்கள்சொரி கோநுகர் வனதரவோ
நாமமிட வோதுயில் கொள்விடவோ
நீதியிளை யாருழை கொடுசெலவோ மடிகோலி

யாடைபுனை கோவரை வடமணிகோ
கோதைசெரு கோகுழை யினையிடுகோ
வாழிவிரன் மோதிர நிரைசெரிகோ நினைவேதென்

றாரவணை யாமுலை யமுதருளா
நேயமுறு கோசலை மடிமிசைசீ
ராடுமர சேயயன் முதலிமையோர் பெருமாளே

(**குறிப்பு** : மிதவை–தெப்பம். வடிவாய்வரவர–வற்றவற்ற. ஓடை–நீரோடை. ஓகை–விருப்பம். நாயிறு–சூரியன். வெயில்–ஒளி. முகில்–மேகம். நுகர்வன–புசிப்பவற்றை. துயில்–நித்திரை. இளையாருழை–தம்பிகளிடத்து. மடிகோலி–மடிகட்டி. ஆடை–வஸ்திரம். செருகோ–கூந்தலுள் மறைத்து முடியவோ.)

தொந்தி சரிய மயிரே வெளி றநிரை
தந்த மசைய வுடல் போய் வளையவுடை
தொங்க வொருகை தடிமேல் வரமகளிர் நகையாடித்

தொண்டு கிழவ னிவனு ரெனவிருமல்
கிண்கி ணெனுமு னுரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு செவியாகி

வந்த பிணியு மதிலே மிடியுமொரு
பண்டி தனுமெ யுறுவே தனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடுகு துயர்தானும்

மங்கை யழுது விழுமோ சையுநமனு
நின்று சருவ மனமே சிதறவுயிர்
மங்கு பொழுது கடிதே கருடன்மிசை வரவேணும்

எந்தை வருக ரகுநா யகவருக
மைந்த வருக மகனே யினிவருக
வென்கண் வருக வெனதா ருயிர்வருக வபிராமா

இங்கு வருக வரசே வருகமுலே
யுண்க வருக மலர்சூ டுகவருக
வென்று பரிவி னொடுகோ சலையணுகி விளிபோது

சிந்தை யிளக வரைஞா ணெகிழவளர்
குஞ்சி யலைய நுதல்வேர் வசையவிரு
செங்கை மருவு கிரிதாழ் வடமசைய மணிவாய்நீர்

சிந்தி யொழுக நகையே பெருகவொரு
தம்பி தொடர முதிரா நடையொடவள்
செம்பொன் மடியி லினிதே றிய[1]கரிய பெருமாளே.

(**குறிப்பு** : தொந்தி–வயிறு. வெளிற–வெண்மைநிறமடைய. நிரை தந்தம்–வரிசையாயமைந்தபற்கள். நகையாடி–சிரித்து. உரை-பேச்சு. துஞ்சு குருடு-உறக்கத்திலுள்ள பார்வையற்றநிலே. பிணி-நோய். மிடி-வறுமை. பண்டிதன்-வித்வான். மெய்-சரீரம். உடைமை-சொத்து, கடன்-பிறர்க்குத்தரவேண்டியது. முடுகுதுயர்-எதிர்த்துவருகின்றதுயர். நமன்-யமன். சருவ-கிட்ட. கடிதே-சீக்ரமாக. பரிவு-அன்பு. விளிபோதில்-கூப்பிடும்பொழுது. குஞ்சி-சிகை.)

22. [2]கதிர்த்தகுடைக்கீழ் முற்படு தண்டிகை
யெடுத்தலேப்பா ரக்கரி யின்சிறு
கழுத்திலிருப்பார் கத்திகை யின்புற மசைவார்தங்

கனத்த பொருட்போய் மெத்தமு றிந்துத
முடைத்துகிலற்றே வட்டக ருந்துணி
[3]கசக்கியுடுத்தே வெட்குதல் [4]கிஞ்சிது மிலராகிப்

பதைத்துநடுக்கா மற்றெர்பு றங்கடை
மிதித்திடர்பட்டே [5]யச்சமு ளங்கொடு
பசித்தனமப்பா பிச்சையி டென்றுயிர் தடுமாறிப்

---

1. பரமபெருமாளே. 2. கதித்த. 3. கடுக்கி. 4. கிஞ்சமு. 5. பொக்கணமுங் கொடு.

பதைப்பர் தவித்தே நிற்பது கண்டுமொர்
நிலைப்பரிவுற்ற கெட்டம னம்பெறு
பணத்தைமகத்தா கக்கரு துந்துய ரொழியாதோ

இதத்தொடுசுற்று நத்திடு தம்பியர்
நிழற்சுவடொத்தே நட்பின ணைந்திட
வெடுத்து வளர்த்தே நற்சவு ளங்களொ டுபவீதம்

எனைத்துமியற்று வற்பகல் சந்தத
நிலைப்பிரிவற்றே கைக்கொடு முந்திய
வியற்கைமனுப்போல் கொற்றவ னின்பற வளர்நாளின்

மதிக்குவிளக்காய் மிக்கசு ணங்களொ
டுயிர்க்குயிரொத்தே யுட்புற மெங்கணு
மயக்கறவுற்றே முற்றுமு ணர்ந்தும [1]துணரார்போன்

மறைப்பொருள்விக்ஞா னத்தடை வென்பது
[2]படைத்திடுசொற்கீ தத்தொட டங்கலும்
வசிட்டரிடத்தே கற்றுவி ளங்கிய பெருமாளே.

(**குறிப்பு** :- கதிர்த்த—விளங்குகின்ற. தண்டிகை—சிவிகை. பாரக்கரி—பெரியயானை. கத்திகை—மாலை. புறம்—மெய். துகில்—உடை. கிஞ்சிதும்—சிறிதும். புறங்கடை—தலைவாசல். மகத்து—பெரிது. நத்திடு—விரும்புகின்ற. சுவடு—அடையாளம். சவுளம்—குடுமிவைத்தல். உபவீதம்—பூணூற்சடங்கு. எனைத்தும்—எல்லாம். இயற்று-செய்து. அற்பகல்-இரவும்பகலும். சந்ததம்-எப்பொழுதும். கொற்றவன்-அரசன்-தசரதன். (சந்தநோக்கி. வட்டக்கருந்துணியென்பது ஒற்றின்றி. வட்டகருந்துணி என வந்தது. பதைத்துநடுங்கா என்றிருக்க வேண்டியது சந்தநோக்கிப் பதைத்துநடுக்கா என நின்றது வலித்தல்விகாரம்)

23. மாலை குந்தள பந்திபுனைந்துபொன்
ஞாலையின்குழை யின்கணணிந்தெதிர்
வாடுகின்றமருங்கினறுங்கலை யதுசேர

---

1. துணராய்போன். 2. படித்திடு.

# இராமாயணத் திருப்புகழ்

வாண்முகம்ப்ரபை கொண்டொளிர்சிந்துர
ரேகைமுந்தவ ரைந்துதனங்களின்
வாசகுங்கும சந்தகிலிங்கித மொடுபூசி

மேலிங்குக ரும்புநறுங்கொடி
தோளமுந்துந லஞ்செய்துமென்பத
மீதுதண்டைசி லம்புசெறிந்தினி நுமராயம்

மேவுநன்பதி யிங்கணிதென் றிறை
சோலையின்கண கன்றிடலென்றுவிர்
தாவில்வஞ்சகர் முன்சொலியென்றமிழ் கெடலாமோ

நீலமஞ்சுவி ளங்கியபங்கய
மானகண்கைமு கஞ்சரணங்கொடு
நீணிலந்தனில் வந்துபுகுந்தென வழகாகி

நேசமும்பரி வும்பெறுதம்பியர்
மூவரும்புடை நின்றுமகிழ்ந்திட
நேரின்மங்கையர் சிந்தைசெழுங்கனன் மெழுகாகக்

கோலவெஞ்சிலை கொண்டுபுறங்கடை
மீதுநின்றுநி ரந்தரமுங்களி
ருமைந்தரு டன்சபதஞ்சொலி விளையாடிக்

கூனிநெஞ்சினில் வஞ்சம்விளைந்திட
மேனிகன்றிய லைந்திடவங்கவள்
கூனிமிர்ந்திட வுண்டைதுரந்தருள் பெருமாளே.

(**குறிப்பு** :- குந்தளம்-கூந்தல். பந்தி-கூட்டம். குழை-காது. மருங்கு-இடை. கலை-வஸ்த்ரம். ப்ரபை-ஒளி. ரேகை-வரை. வரைந்து-எழுதி. சந்து-சந்தனம். இங்கிதம்-இனிமை. ஆயம்-தோழியர்கூட்டம். பதி-ஊர். அணிது-சமீபத்திலுள்ளது. இறை-தலைமகன். விர்தாவில்-வீணே. மஞ்சு-மேகம். சரணம்-திருவடி. புடை-பக்கம். நேர்-ஒப்பு. சிலை-வில். புறங்கடை-அரசமாளிகையின் தலைவாசல். நிரந்தரமும்-எப்பொழுதும். சபதம்-பந்தயம், பிரதிக்ஞையுமாம். துரத்தல்-செலுத்தல். சிலம்பு செறித்து எனற்பாலது சந்தநோக்கிச் சிலம்பு செறிந்து என வழங்கப்பட்டது.

மெலித்தல்விகாரம். மாலேகுந்தளபந்தி புனேந்து.............மேவுநன்பதி யிங்கணிதென்று என்பதனுல் களவியலின் இரண்டாம் பகுதியாகிய வன்புறையின் றுறைகள் குறிக்கப்பட்டன.)

24. வேதமெ லாமிறந்து பூதமெ லாமெடுங்கி
வேலேயெ லாமெழுந்து பிரமாவும்

வேறுள தேவரும்பொய் [1]லோ மெ லாமழிந்து
வீடுறு காலமந்த வடமீதே

சீதள மார்கொழுந்தி ஞேரிலே யூடமர்ந்து
சாமள பாலனென்ருேர் வடிவாகிச்

சீறிய பாணிகொண்டு வாயிதழ் கோலிமென்ற
சேவடி காண வென்று பெறுவேனு

மாதவ மாமுகுந்த சீதர தேவரங்க
வாமன நாரசிங்க மணிவாழு

மார்பவ ராகமுந்து [2]கூர்மவ ரூபவென்பறும்
வாழியெ ஞவிறைஞ்சி மலர்தூவிக்

கோதறு தேவர்கண்டு வாழ்வுற வீதிநின்று
கூனினள் கூனிலுண்டை விடுவோனே

[3]கோமள மானதுங்க ராகவ ராமசந்த்ர
கோசல நாடவெங்கள் பெருமாளே.

(**குறிப்பு** :- வேலே-கடல். தேவரும்போய் எனற்பாலது சந்தநோக்கித் தேவரும்பொய் எனநின்றது குறுக்கல்விகாரம். வடம்-ஆலவிருக்ஷம். பாணி-கை. இறைஞ்சி-வணங்கி. கோமளம்-அழகு.)

25. கோயிலெனவுரையரங்க நீரகமழிசைகுடந்தை
கோவிலினிடைகழியன்பி லுறையூர்பேர்

கூடல்விணகர்கணமங்கை காரகம்வடமலேபொன்செய்
கோயில்கணபுரமழுந்தை. புலியூர்நா

1. போலவெலாமழிந்து 2. கூர்மாவதாரத்து மாயவெனாவிறைஞ்சி.
3.கோமளமான கங்கை வேணிச தாவுகந்து கூறுமிராமமந்த்ரபெருமாளே.

வாய்வடமதுரைகுளந்தை நீர்மலைகடிநகர்தஞ்சை
மாமணிதொலைவிலிமங்கை நறையூர்கார்

வானம்வெளறைதிருவிந்த ளூர்கடிநகரெனுமிந்த
மாநகர்தொறுமுனைவந்து புகழ்வேனே

ஆயுதவகைகள்பயின்று நீள்கலையடையவிளங்கி
யாரணமெனவளர்கின்ற திருநாளில்

ஆடியசையுமெலிந்த மேனியுமருவியதண்டு
மாமுறுகரகமுமன்பு முளனாகிச்

சேயொளிகிளரநடந்து கோசிகன்வருவதுகண்டு
தேறுதலறமனமஞ்சி யெதிரேபோய்த்

தீதறுமுனியைவணங்கு பூபதிதயரதன்முன்செய்
சீரியதவமெனநின்ற பெருமாளே.

(**குறிப்பு** :- கோயில் என்பது முதல் கடிநகர் என்பது வரையுள்ளவை திவ்ய தேசங்கள். பேர்-திருப்பேர்நகர். இது சோழநாட்டுள்ளது. கூடல்-மதுரை. விணகர்-நந்திபுரவிண்ணகரம். பொன்செய்கோயில்-செம்பொன்செய் கோயிலென்னுந் திருப்பதி. அழுந்தை-திருவழுந்தூர். புலியூர்-திருப்புலியூர்-மலைநாட்டுள்ளது. குளந்தை-திருக்குளந்தை. பாண்டியநாட்டுள்ளது. தஞ்சை மாமணி-தஞ்சைமமாமணிக்கோயில். தொலைவிலிமங்கை-தொலைவில்லிமங்கலம். வெளறை-திருவெள்ளறை. அடையவிளங்கி-முழுதும்தெரிந்து. ஆரணம்-வேதம். ஆம்-நீர். கரகம்-கமண்டலம். கோசிகன்-விசுவாமித்திரன்.)

26. உரையறியாதே சிலநாள்போயுஞ்
சிறுமகவாயே திரியாமேலங்
குறுகலைதேரு நெடுநாள்போயும் பொருண்மீதே

யுளமதுநாடா வதையேதேடுங்
கவலைவிடாதே தனவானாய்நின்
றுயர்குடிவீடாய் மடவார்போகந் தலையாயும்

பொருளதுபோயே வறியேனாயும்
பிணியதனாலே மெலிவேனாயும்
பொறியனல்போலே பசியேமூளுந் துயராயும்

# பாலகாண்டம்

புதுநடைகாணு வுடல்கூனுய்வெங்
கிழவனுமாயே யவமேபோமென்
பொழுதுபிரானே பிறவாவாழ்விங் கருள்வாயே

யரசர்பிரானே வரவேகேளுந்
புதல்வனேநீதா வவனுலேயெங்
கனலவியாதே மகமீடேறுந் தவமேயாம்

அதிசயவாழ்வே யுளதாம்வேறும்
பலபுகழ்பேறும் விடுவேனுனெந்
தசடுபடாதே யறிவாயேயென் குணம்யாவும்

தருதியெனுநீ டுலகீரேழும்
பிறிகருண்மேலோ னுரையாடவஞ்
சகமறநேரே கொடுபோவான்வந் திடலோடுந்

தரணியின்வீழா நிலேசோராநொந்
துடலதுவேரா முனிதாள்சூடுந்
தயரதன்வாழ்வே ரகுநாதாநம் பெருமாளே.

(**குறிப்பு** :- உரை – பேச்சு. தேரு-தேறி. உளம்-மனம். நாடா-நாடி. தனவான்-செல்வமுடையவன். மடவார்போகம் தலையாயும்-பெண்களால் அடையும் இன்பத்தை மிக வுடையவனும். என் பொழுது-என் ஆயுட்காலம். பிரான்-தலைவன். வரவு-வருதல். புதல்வன்-புத்திரன். கனல்-அக்கினி. அவியாது-அணையாமல். மகம்-யாகம். ஈடேறும்-குற்றமின்றி நிறைவுறும். அசடுபடுதல்-அறியாமையுடையவனுதல். குற்றமுடையவனுதலுமாம். உலகீரேழும்பிறிதருண் மேலோன்-விசுவாமித்திரன். உரையாடா-சொல்லி. கொடுபோவான்-கொண்டு போகும்பொருட்டு. தரணி-பூமி. வேரா-வேர்த்து. முனிதாசன்-விசுவாமித்திரனது பாதங்களை. சூடும்-சிரசிலே தரித்துக்கொண்ட (அதாவது வணங்கிய). உளமது, பொருளது, பிணியது, உடலது என்பவற்றுள் அது பகுதிப்பொருள் விகுதி.

27. பனிமலரெடுக்கிலவந்த மலரதுதொடுக்கிலமுந்து
பழமலர்கழிக்கிலமஞ்ச னமதாடும்

படிபுனல்விடுக்கிலநின்று திருவடிவிளக்கிலதொங்கல்
பழுதறநிரைக்கிலசந்து புகைதீபம்

இனிமையினளிக்கிலவிஞ்சு கவரிகளிரட்டிலபண்பி
னிணையவகையெட்டினிரண்டு பணிதானும்

இசையுறநடத்திலவன்பொ டமுதுகள் படைக்கிலவென்ற
னிருகையுமவத்திலிருந்த பிழைதீராய்

மனமிசைகருத்துவெகுண்ட கவுசிகர்பதத்தை வணங்கி
மகனொருசிறுப்பிளைவந்து தமியேனின்

மகமதுமுடிப்பனெதிர்ந்த நிருதரையறுப்பனெழுந்து
வருகெனமறுப்பவெகுண்ட வினைநாடித்

தனிமகனிலக்குவனந்த விருவரையுமொக்கவழங்கு
தரமலமறுத்திடலென் பரிவோடே

தவமுனிவசிட்டர்விளம்ப முனியுனதடைக்கலமென்று
தயரதன்விடுக்கநடந்த பெருமாளே.

**(குறிப்பு** :- பனிமலர்-குளிர்ச்சியுள்ள பூ. (அதாவது வண்டுவிழாததும் வாடாததுமான பூ.) புனல்-நீர். தொங்கல்-மாலை. பழுதற-குற்றம் நீங்க. நிரைத்தல்-வரிசையாகத் தொங்கவிடல். எட்டினிரண்டுபணி-சோடசோபசாரம் அவம்-வீண். கவுசிகர்-விசுவாமித்திரர். சிறுபிள்ளை எனற்பாலது சந்தநோக்கிச் சிறுப்பிளையென விகாரமாயிற்று. நிருதர்-இராக்கதர். தனிமகன்-ஒப்பற்ற புதல்வனான இராமன். வழங்கு-கொடு. தரம்-தகுதி, மேன்மை. பரிவு-அன்பு. தவமுனிவசிட்டர்-தவமுனியாகிய வசிட்டர். முனி-முனிவனே.)

28. அடியவரோதிருதுமண்டர் மலரயனோபொருந்துமைந்த
னணையதுவோபெரும்புயங்கர் பெருமானோ

அலர்மகளோபுணர்ந்தமங்கை நிலமகளோவிரும்புநங்கை
யருமறையோவிளம்புசெஞ்சொ லிருதாளின்

விடுபுனலோகறங்குகங்கை யசனமதோபரந்தவண்டம்
வெயின்மதியோவிரண்டுகண்கள் அடன்மாவோ

[1]விநதைகுமாரனின்ப்ரபஞ்ச மகிமையையாவர்கண்டுகொண்டு

1. விதிமறைரூபனின் ப்ரபஞ்ச

வெளியிடுவார்தரங்கரங்க வருள்கூராய்

உடலுயிரேகவெம்பிநின்ற தெனவொருதாதையங்கழுங்க
வொருதவன்வேணுமென்றியம்ப வவனோடே

யுறைநகர்வீதியுங்கடந்து சரயுவையேறிமுந்தியிந்த்ர
னுலவியசோலைதங்கியந்த வழியேபோய்

முடுகியபாணமுந்தெரிந்து வரிசிலைகோலிநம்பிதம்பி
முறைதவிராதுபின்பொருந்தி வரவேநீண்

முடிபுனைகாமன்வெந்தழிந்து பொடிபடுகானகங்களெங்கு
முனிபிறகேநடந்துசென்ற பெருமாளே.

**(குறிப்பு** :- அண்டர்-தேவர். அணை-படுக்கை. புயங்கர் பெருமான்-ஆதிசேடன். அலர்மகள்-இலக்குமி. கறங்குதல்-ஒலித்தல். அசனம்-உணவு. வெயின்மதி-சூரியசந்திரர். அடன்மா-வலியகுதிரை. விநதைகுமாரன்-கருடன். தரங்கரங்க-அலைகளையுடைய காவிரியாற் றினிடைப்ரதேசத்தை யுடையவனே. அழுங்க-வருந்த. தாதை-தகப்பன்-ஈண்டுத் தசரதன். தவன்-விசுவாமித்திரன். இந்திரன் மருதநிலத்துக்குரிய வனுதலின் அந் நிலத்துள்ள சோலையை இந்திரனுலவியசோலை யென்றுர். சிலை-வில். கோலி-வளைத்து. நம்பி-இராமன். தம்பி-இலக்குமணன். முனி-விசுவாமித்திரன்.)

29. ஆசன மெனவடங்கி நீள்குடை யெனவிளங்கி
யாடைய தெனவணங்கி வளர்பாய

லாமென வுடல்விரிந்து பாதுகை யெனவொடுங்கி
யாரிருள் கடியமுந்து. சுடராகித்

தேசணி திருவநந்தன் மீளவு மிளவலென்று
தீவன முடனலைந்து தொழுபாதந்

தீமைகள் புரியுமென்ற னீரமில் கொடியநெஞ்சு
சேர்வுறு மெனவிரும்பி லெளிதாமோ

வாசவன் வெருவவண்டர் கோவென யமனுெதுங்க
மாதிர கரிகளஞ்ச [1]வெழுகோளு

1. நவகோளு.

மாறிட வெகுளிகொண்ட தாடகை வருதல்கண்டு
மாதிவள் சரிதமென்கொ லெனநாடி

ராசத முடன்மகிழ்ந்து கோசிக முனியைமுந்தி
யாரென வினவிநின்ற பெருமாளே.

**(குறிப்பு** :- ஆசனமெனவடங்கி..............தேசமணி திருவநந்தன். என்றது சென்றாற் குடையாம் என்ற முதற்குறிப்புள்ள பாசுரத்தை யுட்கொண்டு கூறியவாறு. பாயல்-படுக்கை. கடிதல்-போக்குதல். சுடர்-விளக்கு. திருவநந்தன்-ஆதிசேடன். இளவல்-தம்பி. தீவனம்- கொடியகாடு. வாசவன்-இந்திரன். அண்டர்-தேவர். கோவென-கோவென்று அலற. கோ-ஈண்டு ஒலிக்குறிப்பு. மாதிரகரிகள்-திசையானைகள். எழுகோள்-சூரியன் முதலியன. வெகுளி-கோபம்.)

30. மீனெனவுதித்துமந்த வாமையெனமற்றும்வந்து
மேருவையடக்குபன்றி வடிவாகி

மேலொருபிறப்புவெங்கணாளரியெனப்பிறந்து
மேதினியளக்கவென்று குறளாகி

யீனமறவெற்றிகொண்ட மூவர்களெனச்சிறந்த
ராமர்விசயற்குநண்ப னெழின்மாவெ

னேயவதரித்துமுந்து பாகவதருக்குகந்த
தேமுறவளிக்குமெந்தை யருள்வாயே

தானெருமறத்தியெங்கண் மாதவமழிக்கும்வம்பி
சாதனையரக்கியென்று பலவாகத்

தாடகைசரித்திரங்கள் யாவையுநிகழ்த்தியுன்ப்ர
தாபமிதனிற்றெரிந்து விடவேணும்

வானுலகளித்தியென்று நீதியோடெடுத்தியம்ப
மாதெனநினைந்து நெஞ்சின் மிகநாணி

வார்சிலைகுனிப்பதின்றி யோர்கணைதொடுப்பதின்றி
மாமுடியசைத்துநின்ற பெருமாளே.

**(குறிப்பு** :- ஆளரி-நரசிங்கம். குறள்-வாமனன். வெற்றிகொண்ட

மூவர்களெனச்சிறந்த ராமர்-பரசுராமன், தெசரதராமன், பலராமன் எ
விசயற்குநண்பன்-கண்ணன். மா-கற்கி. ஏமுற்-இன்பமுண்டாக.
எனற்பாலது ஏம் என நின்றது. தொகுத்தல்விகாரம். ம
வலிமையுடையவள்.)

31. மின்னைப் போலே யிடைதுவள வன்னப்போர்வேல் விழிபுரள
வெண்முத் தேயா கியமுறுவ னி

வெம்மைக்கோலா கலமுலைகள் கொம்மைக் கோடா மெனமுடுகி
விம்முற் றேவா ரொடுகறுவ வருகா

தன்னத் தாமு தனதனன வென்னத் தான்வார் குழன்மருவு
தண்மைப் பூமா லைகள் சரிய விரிதே

தன்னைப் போலே மலர்மருவு பொன்னைப் போலே வருமகளிர்
தம்மைக் காணு மனமெலிவ தொழிய

மன்னுற் றேதா டகைமுடுகு வெம்மைச் சூலா யுதமுறிய
வன்மத் தேவீ சியமரமு மலைய

மண்ணிற் றூளாய் விழவிரகு பண்ணித் தானே வுகன்மழையும்
வண்ணக் கோலா கலவலியும் நிலை

கன்னத் தேகோல் பலசொருகு புண்ணிற் கேநீ டெரிகதுவு
கண்ணிற் கேபேய் நரிகழுகு விளைய

கன்மத் தாலா னவண்மடிய மன்மத் தோர்வா ளிகொடுழுது
கன்னிப் போராடிய[1]கரிய பெருப

(**குறிப்பு** :- முறுவல்-சிரிப்பு. வெம்மை-ஆசை. கோலா
சம்பிரமம். கொம்மைக்கோடு-அழகிய யானைக்கொம்பு. விம்முற்று-ப
வார்-கச்சு. கறுவ-கோபிக்க. வார்குழல்-நீண்டகூந்தல். தோகை-
மலர்மருவுபொன்-இலக்குமி. மன்னுற்று-அடுத்து. முடுகுதல்-செலு
விரகு-உபாயம். தான் என்றது இங்கு தாடகையை. கோலாகலம்-ஆர
கோல்-அம்பு. மன்மம்-மார்பு. வாளி-அம்பு. கன்னிப்போர்-முதற்பே

32. ஓடுமுருகுந்துயர்கொண்டு வாடுமிளகுந்தனதென்று
லோபமுடனின்றுமயங்கு மிரு

# இராமாயணத் திருப்புகழ்

மூடுதெளியுந்தனிகண்ட தேதுமருவும்பலதொந்த
ரூபமுமடைந்திடுமிந்த மனநேரே

கோடுறுகுரங்கெனவிஞ்சு நீடுசெயல்கண்டதும் வஞ்சர்
கோலமிதுதந்திடுபண்பு மமையாதோ

கோயிலுமரங்கமுமுந்த மேவியுனதன்பரைவந்து
கூடியிடவென்றினியன்பு புரிவாயே.

மாடுறுசிலம்புதொடர்ந்து கூடிவரவண்டம்நடுங்க
மாநிலமதிர்ந்திடமுந்தி வருவாளே

மாதெனநினைந்ததுவம்பு கோறிபழியன்றெனநின்று
மாமுனிவிளம்பவொரம்பை விடலோடுங்

காடுதிரண்மண்டியலைந்து தாடகைபுலம்பியிருண்ட
காரெனமுழங்கிவிழுந்த பொழுதேமுன்

காதிவருகண்டகர்தங்க ளானவுயிரின்சுவையன்று
காலனறியும்படிகண்ட பெருமாளே.

(**குறிப்பு** :- மனம் ஓடும், உருகும், வாடும், இளகும், மயங்கும், இருளாகும், தெளியும், மருவும், அடைந்திடும் எனக் கூட்டுக. மாடு-பக்கம். சிலம்பு-மலை. கோறி-கொல்வாயாக. காதுதல்-கொல்லுதல். கண்டகர்-துஷ்டர். காலன்-யமன்.)

33. பசையற்ற வுடல்வற்றி வளைவுற்று நடைநெட்டி
பரியக்கை சொரியப்பல் விழலாகிப்

பகலைக்கும் விழிகெட்ட குருடுற்று மிகநெக்க
பழமொத்து நரைகொக்கி னிறமேவி

விசைபெற்று வருபித்த மதுசுற்றி விழுவிக்க
மெலிவுற்று விரல்பற்று தடியோடே

வெளியற்ப மெனும்[1]விர்த்த னென வெட்கு சனனத்தை
விடுவிக்க வருள்வைப்ப தொருநாளோ

---

[1]விர்த்த வென

அசைவற்ற நிருதப்பெண் மடிவுற்ற பிரியத்தி
 னடல்வச்ர தரன்மற்று முளவானே

ஏளவற்ற மலரிட்டு நிலமுற்று மளவிட்ட
 வடிபற்றி விடைபெற்று நெடிதேக

வசையற்று முடிவற்று வினையற்று மதமற்று
 வடுவற்று நிகரற்ற முனிராசன்

மதுரித்த மொழிசெப்பி யருளுற்ற பொழுதத்து
 மனமொத்த படைபெற்ற பெருமாளே.

**(குறிப்பு** :- நெட்டி-யாக்கைக்குற்றத்தொன்று. நெட்டிபரிய-நெட்டையுண்டாக. பகலைக்கும்-பகலிலும். நெக்க-நெகிழ்ந்த-கனிந்த. நிருதப்பெண்-தாடகை. வச்ரதரன்-இந்திரன். வசை-பழிச்சொல். வடு-குற்றம். முனிராசன்-விசுவாமித்திரன். மதுரித்த-இனிய. படை-ஆயுதம்.)

34. வீதியினின்றுநின்று காமனைவென்றுவென்று
 மேல்விழவந்துவந்து விழியாகும்

வேலையெறிந்தெறிந்து காதலறிந்தறிந்து
 வேதனைதந்துதந்து குழல்கோதிக்

கோதையணிந்தணிந்து சாலவசைந்தசைந்து
 கூசுதலின்றியின்றி யருகாகிக்

கூடியிருந்திருந்து வேசியர்கொண்டகொண்ட
 கோரணிகண்டுகண்டு தளர்வேனோ

போதவளைந்துகொண்ட தாடகையங்கழிந்து
 போயினபின்புமுன்பு நெடிதேகிப்

பூபதியென்றிருந்த மாவலியன்புகொண்டு
 போதமகங்கண்முன்செய் தலமேவிக்

காதிபயந்தமைந்தன் வேள்விதொடங்கலன்று
 காதுதல்விஞ்சுதம்பி யவனோடே

கார்முகமுந்தெரிந்து வார்கணையுங்கைகொண்டு
காவல்புரிந்துநின்ற பெருமாளே

(**குறிப்பு** :- காமன்-மன்மதன். குழல்- கூந்தல். கோதை-மாலை. சால-மிகவும். கோரணி-அருவருக்கத்தக்கசெயல். பூபதி-அரசன். மாவலி-மஹாபலி. போத-மிகவும். மகம்-யாகம். காதிபயந்தமைந்தன்-விசுவாமித்ரன். வேள்வி-யாகம். காதுதல்-கொல்லுதல். விஞ்சுதல்-மேம்படுதல். கார்முகம்-வில். வார்-பெரிய-நீண்ட.)

35. மிடியர்வாலிபம் வாயாடம்பர
லகிரியேதுமி லாரோ துங்கலை
விழுமியோர்சின நாணுர்தங்குல மநுராக

விழைவிலாதவர் பாலாமைங்கணை
கொடையிலார்பொரு ளுல்வாய்தன்பெலம்
விரவுபேடிகை வாள்வேல்வெம்பசி யிலையானே

ரிடையின்மேவிய வூணுமின்சுவை
குருவின்வாய்மொழி பேணுர்மந்திர
மிறைவன்மார்பு பெருதாள்கொங்கைகள் இவைபோலே

எனது ஞானமும் வீணேமங்கின
வதனைவேறுப டாதேயிங்குன
திருசரோருக சீர்பாதந்தனில் விடுவேனே

அடைவுசேர்முனி மாயாகஞ்செய
நெடியசாலையி னூடேசென்றிடு
மளவிலேவினை மாருவஞ்சகர் படைமாரி

யனலமாமென மேலேயுந்தியு
முனியைநாடியு நீள்போர்கண்டிட
வரியதோர்சர கூடாலங்கிர்த மதுகோலிக்

கடுகியேயெம மாதாவின்பழி
தருதியாலென மேலேவந்தடர்
கபடதாடகை பேருமைந்தரின் மலைவீசுங்

கரசுவாகுவு நேரேவிண்புக

விரகினுலொரு மாரீசன்பொரு
கடலிலேவிழ வோர்பாணந்தொடு பெருமாளே.

**(குறிப்பு** மிடியர் வாலிபம்-தரித்திரரின் இளமை. வாயாடம்பரலகிரி- உத்ஸாகமாகப் பேசுந்திறம். விழுமியோர்சினம்-பெரியோருடையகோபம். அநுராகவிழைவு-சிற்றின்பவிருப்பம். ஐங்கணை-(மன்மதனுடைய) பஞ்ச பாணங்கள். நால்வாய்தன்பெலம்-யானையின்வலிமை. பேடிகைவிரவுவாள் வேல் எனக் கூட்டுக. விரவு-பொருந்திய. இறைவன்-தலைவன்-நாயகன். கொங்கை-தனம். சரோருகம்-தாமரை (மலர்). அடைவு-முறை. முனி-விசுவாமித்திரன். வினைமாரு வஞ்சகர்-தீவினைநீங்காத அரக்கர். படைமாரி-சரமழை. அனலம்-அக்கினி. உந்தி-செலுத்தி. சரகூடாலங்க்ருதம்-அலங்காரத்தை யுடைய சரகூடம். கோலி-அமைத்து. கடுகி-விரைந்து. எம-எங்களுடைய. மாதா-தாய். அடர்-நெருங்கிய. கரம்- கை. விண்புக-இறக்க. விரகு-உபாயம். பொருகடல்- (அலை) மோதுகின்ற கடல். மிடியர்வாலிப முதலிய பதினைன்றும் எண்ணடுக்காய் நின்று உவமையாயின.)

36. மடமகளிர் மாட்டின்மாட்டினை
விரகியென நாட்டிலோட்டினை
வறுமைமுது நீர்க்குள் வீழ்த்தினை பொருண்மீதே

மனமுறுப ராக்கிலாக்கினை
தனமுடைய பேர்க்கியார்க்குமென்
வரவுசொலி யேற்கநூக்கினை பிணியாகுங்

கொடியகன லூட்டியாட்டினை
யசடனெனும் வார்த்தைநாட்டினை
குறுகினபி ராத்திநாட்களு மினிநீயென்

குறைமுழுது மாற்றியேற்றதொ
ரடியரொடு கூட்டிவாட்டமில்
குறைகழல்கள் காட்டிவீட்டினை யருள்வாயே

நெடுமுனிவர் கூட்டமேத்திய
மறையினொலி சாற்றவேற்றதொர்
நெறிமுறையின் வாய்த்தசாத்திரம் வழுவாதே

நிலைமைபெறு சூத்ரவாக்கிய
கரணவகை யாற்பிராத்தியி
னிலமுழுது காட்டவார்த்தெழு தவராசன்

அடுகனலை மூட்டிமாட்டுறு
சமிதைவகை போட்டுமூர்த்திக
ளமரர்தச நூற்றுநேத்திரர் களிகூர

அவியுணவை யூட்டியீட்டிய
மகமினிது காத்துமேற்படும்
அவபிருத தீர்த்தமாட்டியே பெருமாளே.

**(குறிப்பு** :- விரகி-காமநோயுடையான். வறுமைமுதுநீர்-தரித்திரமாகிய பெரியகடல். ஏற்க-யாசிக்கும்படி. நூக்குதல்-தள்ளுதல். பிராப்திநாள்- கிடைத்த ஆயுட்காலம். சூத்ரவாக்கியகரணவகை-கல்பஸூத்திரத்திற் சொல்லியசடங்குகள். பிராத்தியின் நிலம்-உத்தேசியமான யாகபூமி. தவராசன்-விசுவாமித்திரன். மாட்டுறு-பக்கத்தேயுள்ள. தசநூற்றுநேத்திரர்- விஷ்ணு. அவபிருத தீர்த்தம்-யாகமுடிவில் ஆடும் நீராட்டம்)

37. படிகட்டிய வேதவிதிப்படி நெறிநிற்பவ ரேதெரிசித்திடு
பதுமப்பத நாடு றுசித்தமு மநுபூதிப்

பரதத்துவ ஞானிவிளக்கமு மருளித்தொலை யாதக்ருபைக்கடல்
படியப்படை யாமலெனைத்தின மடவார்தம்

மிடையிற்சுழி சேர்கலவிக்கட னடுவிற்படி யாமனநிற்கவு
மிசையப்பொரு டேடியமைக்கவு மதுபேணி

இடருற்றுவி டாதுதவிக்கவு மயலிற்கொடி யாரதுகைக்கொள
யமனுக்குயி ராகியிறக்கவும் விடலாமோ

முடுகிப்பொரு பூசலரக்கரை மகரக்கட லூடு துரக்கவு
முடிதிட்டென வீழவறுக்கவு நதிபோலே

முடுகப்படு சோரிநிறைக்கவு நெடுகப்பிண ராசிகுவிக்கவு
முதிரக்கினி யோமமுநிட்டையு மழியாதே

கடுகிச்சர கூடம்வளேக்கவு மகமிப்படி பேணவுமொப்பறு
கலேகற்றவ ஞரெனநற்றவன் மகிழ்வாகக்

கனமுத்தெறி சானவிபிற்பட மிதிலேப்படை வீடுதனிற்புகு
கருணேக்கடலேயென்மனத்துறை பெருமாளே

(**குறிப்பு** :- பூசல்-போர். துரக்க-செலுத்த. முடுக-விரைந்து செல்ல. சோரி-இரத்தம். ராசி-கூட்டம். சானவி-கங்கை.)

38. பரணியுலாவொருசற்றும்பொழுதிற்
சொலவொருகோவையடுக்குங்கிளவிப்
பயனுமொரேநிமிடத்திற்புகலப் பலநூலும்

பகரவிவாதவகைக்கும்புகுதப்
பெரியபுராணகதைப்பண்பறியப்
பதறியவாசொடுசித்ரங்கள்வரக் கவிபாடப்

பெருவிருதேநிறுவிக்கொண்டனமற்
புததருவேமழைகைக்கொண்டகொடைப்
பிரளயமேயினிநிற்குங்கவிதைத் துறையேகேள்

பிடிபணமாழி பதக்கம்பருமுத்
தணிமணியாடைமிகத்தந்திசையைப்
பெறுகெனலோபகுணக்குண்டகரைப் புகழ்வேஞே

பொருதொருதாடகையைக்கொன்றயலிற்
றவமுனிவேள்விமுடிக்கும்பொழுதப்
புகைவிழியாள்பெறுமைக்கண்டகரிற் கொடியோனேப்

புணரியின் மூழ்கவிடுத்துஞ்சமரத்
தொருவனேவானிடைவைத்துந்தழலேப்
பொறியவியாதுபுரக்குங்கருணேத் திருமாலே

அருண்மிகுகோ தமனுஷ்ணங்களுமற்
றுயர்வலமீது துடிப்புங்கொளமுற்
றடன்மகவான்மனமுட்கும்படிமுற் றவஞர்நின்

றடிவரலாறுகண்முற்றும்புகலத்

திருமறைநாலுமணக்கும்பொடியிட்
டகலிகைசாபமகற்றுஞ்சரணப் பெருமாளே.

(**குறிப்பு** :- சற்றுப்பொழுதென்பது-சந்தநோக்கிச் சற்றும்பொழுதென நின்றது மெலித்தல் விகாரம். விருது-கொடி. நிறுவுதல்-நிலைநாட்டல். தரு-கற்பதரு. பிடி-பெண்யானை. ஆழி-மோதிரம். புகைவிழியாள்-தாடகை. கொடியோன்-மாரீசன். புணரி-கடல். சமரம்-போர். ஒருவன்-சுவாகு. புரத்தல்-காத்தல். கோதமன்-கௌதமன். உஷ்ணம்-வெம்மை (இந்திரனிடத்தும் அகலிகையிடத்தும் உண்டான) சினம். முற்றடன்மகவான்-நிறைந்தவலிமையுடைய இந்திரன். முற்றவன்-விசுவாமித்திரன். அடிவரலாறு-பழங்கதை. சரணம்-திருவடி.)

39. மதியுநெடும்ப்ரபை யேற்றபானுவு
மிளிர்பகலுங்கன ராத்ரியானது
மருவியசந்தியும் வாய்த்தபூமியு நெடுநீரும்

வளர்கிளரங்கியு மார்த்தவாயுவும்
வெளியுமடர்ந்திடு கூற்றமானது
மகிழறமும்பல வாத்துமாவுமிவ் வகையாவுஞ்

சிதைவறநின்றிடு சாக்ஷியாய்நடு
வொருகணமும் பிரி யாத்துராகத
சிறையிலிருந்திடு வேற்கியாதொரு வினைதானும்

திலமளவுந்தவ ருக்கொணுதுநன்
னெறியினடந்திட மாட்சிசேரவொர்
தினையளவுன்கழல் காட்டினுலுமென் னிடர்போமே

மிதிலைநெடும்படை வீட்டை மேவுமு
னகலிகைதன்குறை தீர்த்துநாரிதன்
விளைவைவிளம்புதி யாற்றபோதன வெனலோடும்

விரகமொடிந்திரர் காக்கைகூவினர்
கவுதமரங்குட னுற்றைமேவினர்
விரைவின் முயங்கினர் பார்த்தகோதமன் மகவான்மேன்

முதிர்பலலிங்கம தேற்றினுரிவள்
வடிவுகலென்றிட வீழ்த்தினுரவர்

முறையிடல்கண்டுக ணுக்கிஞரிவள் நினதாளான்

முதலுருவம்பெற நாட்டிஞர்கதை
யடியில்விளைந்ததி மாத்ரமேயென
முனிசொலவங்கது கேட்டவானவர் பெருமாளே.

**(குறிப்பு** :- மதி-சந்திரன். ப்ரபை-ஒளி. பாநு-சூரியன். மிளிர்தல்-விளங்குதல். அங்கி-அக்கினி. ஆர்த்த-சப்தித்த. வாயு-காற்று. வெளி-ஆகாயம். அடர்தல்-கொல்லுதல். கூற்றம்-யமன். நாரி-அகலிகை. முயங்குதல்-கூடுதல். மகவான்-இந்திரன். லிங்கம்-(பெண்) குறி. அவர்-இந்திரன்.)

40. கயலைக்கறுவுகபாடவஞ்சக
சரிதப்ரபலவிசாலசம்ப்ரம
கலகக்கபடவிகாரவஞ்சன விழிமாஞர்

களபப்பரிமளவாசபங்கய
முகிழத்துபயசமானமங்கல
கடினப்புளகிதமான கொங்கைகள் பிரியாதே

சயநக்கலவிவிநோதரஞ்சித
வசனப்ரியவநுராகவிங்கித
சரசச்சுரதசமேளசிங்கியில் வசமாகிச்

சருவத்திருவுளமோநினன்பரை
மருவத்திருவுளமோவுவந்தது
தனையிப்பொழுதடியேனுணர்ந்திட வுரையாயோ

வயனுட்படு மிமையோர்பணிந்தெழ
விடைபெற்றகலிகைதானகன்றிட
வருமைத்தவமுனிராசன்முன்செல வுயிர்போலே

யடியிற்பிறகிளையோனும்வந்திட
வொருவிற்கரமிசையேபொலிந்திட
வருகிற்றெரிவையர்மோகனங்கொள விதஞேடே

வெயிலைத்தருமணிமேடையின்புற
மயிலொப்பெனவிளையாடுமிந்திரை

விழிதைத்திருபுயம்வாடவங்கவள் முலைமீதே

விமலக்கமலவிலோசனம்புக
வொருவர்க்கொருவரவாவுறும்படி பெருமாளே.
மிதிலைத்தெருவழியேநடந்தருள்

**(குறிப்பு** :- கயல்-ஒரு வகைமீன். கறுவுதல்-சினத்தல். கபாடம்-காப்பு. சரிதம்-நடை. சம்ப்ரமம்-டம்பம். அஞ்சனம்-மை. விழி-கண். மானுர்-பெண்கள். களபம்-கலவைச்சாந்து. பங்கயம்-தாமரை. முகிழத்து என்பதில் அத்து சாரியை. முகிழ்-மொட்டு. உபயம்-இரண்டு. ரஞ்சிதவசனம்-இனியபேச்சு. சருவுதல்-நழுவுதல். அயன்-பிரமன். இமையோர்-தேவர்கள். கரம்-கை. தெரிவையர்-பெண்கள். மோகனம்-மயக்கம். இதம் இதன் என்ருனது போலி. இதம்-நன்மை. இந்திரை-இலக்குமி (சீதை). விமலக்கமல விலோசனம்-குற்றமற்ற தாமரை மலர்போலும் கண். அவா-ஆசை.)

41. வனிதைமருவுபுதுவைகுருகை
பிரிதி புலிசைசிறுபுலிசைவெள் ணகரேநீர்
ளறைகணபுரம்வடமதுரைவி

மலைகடிநகர்கடிகைதுவரை
நறைசைவதரிகரிகிரிதிரு மிசைமாலி
மழிசையரிவிணகரிதிருநை

யினையபதிகணினையுமவர்கள்
வினைகண்மிடிகள்பசிகள்பழிக வருளேசெய்
ளவையுமவலமுழுதுமகல

தினியதிருவுமினியவறிவு
முதவுமுனதுசரணகமல மதிதாராய்
மெனதுமனதுபயிலமுயலு

புனையுமிதிலைமகளிர்மறுகு
மறுகுபிறகுகழியவரசு லழகாகப்
பொலியுமனைமுனணுகியவையி

புகுமுடளவின் முனிவனடிகள்

பரவி மருவியுடலமினிது
புளக மெரியவயனையனைய பெரியோனே

தனுவுமரியகணையுமெவரு
மெழுகுவரியவடிவுமினிய
சதுரனளவிலருளுமுடைய தனியாண்மைச்

சமரகுமரன்வரவையுரைசெ
யெனவுளுருகியிருகைதொழுது
சனகன்வினவுகரியபெரிய பெருமாளே.

**(குறிப்பு** :- வனிதை-ஆண்டாள். மருவு-பொருந்திய. புதுவை-ஸ்ரீவில்லிபுத்தூர். குருகை-ஆழ்வார்திருநகரி. பிரிதி-திருப்பரிதி.இது வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. புலிசை-திருப்புலியூர். இது மலைநாட்டுள்ளது. சிறுபுலிசை-சிறுபுலியூர். இது சோழநாட்டிற் காவிரியின் றென்கரையிலுள்ளது. வெளறை-திருவெள்ளறை. இது காவிரியின் வடபாலுள்ளது. கணபுரம்-திருக்கண்ணபுரம். விணகர்-திருவிண்ணகர். காவிரியின் தென்கரையிலுள்ளது. கடிநகர்-திருக்கடித்தானம். இது மலைநாட்டுள்ளது. கடிகை-தொண்டைநாட்டுள்ளதிருக்கடிகை. துவரை-துவாரகை. நறைசை-திருநறையூர். வதரி-வதரியாச்சிரமம். கரிகிரி-அத்திகிரி (காஞ்சீபுரம்). அரிவிணகரி-திருவரிமேய விண்ணகரம். காவிரியின் வடகரையிலுள்ளது. திருநைமிசம்-திரு நைமிசாரணியம். ஆலி-திருவாலி திருநகரி. இனைய-இப்படிப்பட்ட. பதிகள்-திவ்யதேசங்கள். மிடி-தரித்திரம். அவலம்-மனக்கவலை. திரு-செல்வம். உதவும்-கொடுக்கின்ற சரணகமலம்-பாததாமரைமலர். முயலும்-முயற்சிக்கின்ற. மதி-அறிவு. புனையும் அலங்கரிக்கப்பட்ட. மறுகு-மனங்கலங்கிய. மறுகு-வீதி. பிறகுகழிய-பின் செல்ல. அரசுபொலியுமனை-ஜனகராஜக்ருஹம். முனிவன்-விசுவாமித்திரன். பரவி-வணங்கி. அடிகள் மருவிப்பரவி எனக் கூட்டுக. மருவி-அடைந்து. புளகமெறிய-(சந்தோஷத்தால்) மயிர்சிலிர்க்க. அயன்-பிரமன். அனைய-ஒத்த. தனு-வில். கணை-அம்பு. வடிவு-உருவம். சதுரன்-சமர்த்தன். சமரகுமரன்-போர்வீரன். போரிலே குமரனையொப்பான் எனினும் ஆம்.)

42. மனையொடுவாசல்கண்டிருந்து
வினைமடவாருடன்பயின்று
மருவியதாயர்தந்தைமுன்பின் வருபாலர்

## இராமாயணத் திருப்புகழ்

மரபினுளார்களென்றுதுன்று
நெடுவலையூடுசென்றழுந்தி
வழிவழிபாதகம்புரிந்து திரிவேனைத்

தினையளவேனுமன்புதந்து
னடியவரோடுதொண்டுகொண்டு
சிலுகுகள்யாவையுங்களைந்து சடகோபர்

திருமறையாயிரந்தெளிந்து
வளமுளகோயிலின்கண்வந்து
ஜெயஜெயவாழியென்றியம்ப வருள்வாயே

வினவியபோ துகங்கைதந்த
நரபதிபேரன்மண்டலஞ்செய்
வெயில் விடுபானுவம்சதுங்கன் மநுநீதி

விரவியகோசலம்புரந்த
சரயுநனுதனிங்குநின்ற
விறலினையானுடங்கிருந்த விருவோர்முன்

றனிமகனுகவந்தகொண்டல்
பெயருமிராமசந்த்ரனுங்கள்
தனுவலிகாணவந்தபண்ப னுலகாளுந்

தயரதபூபன்மைந்தனென்று
கவுசிகர்கோன்விளம்பவன்று
சனகன்முனேவிளங்கிநின்ற பெருமாளே.

(**குறிப்பு** :- மடவார்-பெண்கள். முன்-உடன்பிறந்தாருள் மூத்தோர். பின்-இளையோர். துன்றுதல்-நெருங்குதல். வழிவழி-மேன்மேலும். சிலுகு-தடை. களைந்து-நீக்கி. சடகோபர் திருமறையாயிரம்-நம்மாழ்வார் அருளிச் செய்த வேதமாகிய திருவாய்மொழியாயிரம் பாசுரங்களையும். கோயில்-திருவரங்கம். வினவியபோது-ஜனகன் கேட்டபொழுது. கங்கைதந்தநரபதி-பகீரதன். மண்டலஞ்செய்தல்-(உலகத்தை) வலம்வருதல். பானு-சூரியன். துங்கம்-உயர்வு. கோசலம்-கோசலதேசம். புரந்த-காத்த. சரயுநனுதன்-சரயுநதியையுடைய சிறந்ததலைவன். இங்குநின்ற

விறலிளையான் - இலக்குமணன். விறல் - வெற்றி. அங்கிருந்த இருவோர் - திருவயோத்தியிலேயிருந்த பரத சத்துருக்கர். கொண்டல் - மேகம். தனு - வில்.)

43. ஆனையதுமூலமெனத்த
ஞவிவிடுபோதிலழைக்க
வாதரவி ஞேடுவணப்புள் மிசையேறி

யானமலர் வாவியினுற்று
மாமுதலைவீடுபெறப்பொன்
ஆழிதனையேவுவிசித்ர மதுபோலே

மேனியிருள்போலுநிறத்த
காலனெனேமோதுகயிற்றின்
வீசியெதிராடியலைத்து வருபோதின்

வீரேவடிவாளியும்வெற்றி
வார்சிலையுநீயுமெனக்கு
மேவுதுணையாயெதிர்நிற்க வரவேணும்

தானைமிதிலேசனுரைக்க
வோாறுபதாயிரமிக்க
தாவில்வயவீரர்நெருக்கி நிரைதோளின்

சாதுரியம௱னவியத்தி
னூடுதறிபேணிமடுத்த
சார்பனிடைமார்பினணைத்து நனிபோதா

மாநிலமொரேழுமதிக்க
ராஜசபைமீதினிலிட்ட
வானிடுவின்மேருநிகர்த்த சிவசாபம்

வாழ்வுபெறுசீதையொருத்தி
சூடியிடநாடியெடுக்கு
மாலையெனவோடியெடுத்த பெருமாளே.

(**குறிப்பு** :-. ஆனை - கஜேந்திரன். ஆவி - உயிர். ஆதரவு - அன்பு.. உவணப்புள் - கருடன். ஆழி - சக்கரம். காலன் - யமன். கயிற்றின் - கயிற்றினுல்.

எதிராடி-எதிர்த்து. அலைத்து-வருத்தி. வடி-கூர்மை. வாளி-பாணம். வார்சிலை-நீண்ட வில்-(சார்ங்கம்). தானை-படை. மிதிலேசன்-ஜனகன். தாவில் வயவீரர் – குற்றமற்ற வெற்றியையுடைய வீரர். நிரை-ஒழுங்கு. வரிசை. தோளின்-தோளினுலும். சாதுரியமான வியத்தி னூடு தறிபேணி மடுத்த சார்பினிடை-சாமர்த்தியமாக மேலுங்கீழும் நெடுக்குங் குறுக்குமாக இடையே விரும்பிக்கோத்த மூங்கில் தண்டங்களைப் பற்றுமிடங்களில். மார்பின்-மார்பினுலும். அணைத்து-வளைத்துப் பிடித்து. மிக்ககனமுள்ள பொருளைத் தூக்கிச் செல்லுவோர் நேராகவும் குறுக்காகவும் இட்டதறிகளின் மேல் அப்பொருள் அமைத்து நேராக இட்ட தறிகளைத் தோளிலும் அதன்கீழ்க் குறுக்காக இட்ட தறிகளை மார்பிலும் தாங்கிக் கொண்டு செல்லுவர். அதனை இங்குக் கூறினுர். நனிபோதா-விரைந்துவந்து. வானிடுவில் மேரு நிகர்த்த சிவசாபம்-வானவில்லையும் மேருவையும் ஒத்த சிவ தனுஸை.)

44. அகத்தி லுமிருப்பை
புறத்திலுநடப்பை
யளித்துடனழிப்பை யழியாதே

யடக்குவைதெரித்து
விடுப்பைவெளிநிற்பை
யருட்செயநினைப்பை யொழியாவுன்

மகத்துவமொருத்த
ருரைக்கவுமெடுத்து
வமுத்தவுமதிக்கில் எளிதோவென்

வசத்திலொரியற்கை
செயற்கையிலைமற்றுன்
வழிப்படுமெனக்கு நிகர்யாரே

நகத்திரள்வெடிக்க
மதக்கரிபதைக்க
நடுப்பணிநெளிக்க மதிபானு

நலக்குறவுடுக்கள்
பொடப்பொடெனவுட்க
நமற்குயிர்திடுக்க முறவேநீள்

சகத்ரயமனைத்து

நடுக்குறநிருத்தர்
தனிச்சிலைசிமிழ்ப்பி ...னவையூடே

சடக்கெனவெடுத்து
முறித்துநிகரற்ற
சமத்துநிலையிட்ட பெருமாளே.

(**குறிப்பு** :- அளித்தல்-படைத்தல். தெரித்து விடுப்பை-(உன்னுடைய ஸ்வரூபகுண விபூதிகளைச் சேதனர்கள்) அறியும்படி செய்வாய். வெளி நிற்பை-உன்னையறிந்தவர்க்கு ப்ரத்யக்ஷமாவாய். அருள்செய நினைப்பை என்பது சந்தநோக்கி அருட்செயநினைப்பை என விகாரமாயிற்று. வழுத்துதல்-துதித்தல். மதித்தல்-எண்ணுதல். என்வசத்தில் ஒரியற்கை செயற்கை இலை-என்னிடத்தில் இயற்கையாகவேனும் அல்லது செயற்கையாகவேனும் (ஞானசக்த்யாதி விசேஷங்கள்) இல்லை. மற்று-அசை. நகத்திரள்-மலைக்கூட்டம். மதக்கரி பதைக்க-மதங்கொண்ட (திசை) யானைகள் நடுங்க. நடுப்பணி- (உலகத்தை) நடுவேநின்று தாங்கும் ஆதிசேடன். மதி-சந்திரன். பாநு-சூரியன். நலக்குற-வருந்த. உடுக்கள்-நக்ஷத்திரங்கள். பொடுப்பொடென-ஒலிக்குறிப்பு. உட்குதல்-மடிதல். நமற்கு-யமனுக்கு. சகத்ரயம்-மூன்றுலோகம். நிருத்தர்-சிவபிரான். தனிச்சிலை-ஒப்பற்றவில். சிமிழ்ப்பின்-கண்ணிமைப்பதற்குள். அவையூடு-ஜனகஸபையில். எடுத்துச் சடக்கெனமுறித்து எனக்கூட்டுக. சமத்து-சமர்த்து-பலம்.)

45\. மேகநிறம்வாழிபற்ப
நாபிமலர்வாழிசக்ர
மேவுகரம்வாழிநித்தம் வினைமூடும்

வேதனைகள் சேர்பிறப்பை
மாறியினிஞானமுத்தி
வீடுதரவேணுமற்ற தருளாயேல்

த்யாகபரனாகமிக்க
வாழ்வுடையனாகவுற்ற
சீலகுணனாகநிற்க விசைபூணுஞ்

சீரியவனாகவெற்றி
மாகவினனாகரக்ஷை
சேரடிமையாகமுற்றும் அருள்வாயே

நீகருணையாலளித்த
ராகவனென்வேள்வியுற்று
நீடுசிலைதான்முறித்த படியாலென்

நேயமகள்பாணிபற்ற
வேணுமினிமாதர்மக்கள்
நேரில்படையோடமைச்சர் கிளைசூழ

வாகடிதெனுநிறுத்த
கோசலமகீபதிக்கு
மாசில்கலியாணபத்ர மதனோடு

வாய்மைபெறுதூதுவிட்ட
நீள்சனகர்கோனைமிக்க
மாமனெனவேபடைத்த பெருமாளே.

**(குறிப்பு** :- பற்பநாபி-உந்திக்கமலம். மாறி-கழித்து. த்யாகபரன்-கொடையுடையவன். நிற்க-என்றும் அழியாதிருக்கும்படி. ரக்ஷை-பாதுகாப்பு. நீ என்பது முதல் கடிதுவா என்பதுவரை ஜனகன் கூற்று. பாணி-கை. கடிது-சீக்கிரம். நிறுத்த-ஸ்தாபிக்கப்பட்ட. மாசில்-குற்றமற்ற. வாய்மை,-உண்மை.)

46. நினைவிலேயெவரோடு மொழிந்திடு
மொழியிலேதவருதுநடந்திடு
நெறியிலேவினையாவையும்வென்றிடு முணர்வூடேய்

நிலையிலே யழகாவி நிரம்பிய
வடிவிலேயிருபோதுநிரந்தர
நினதுபாவனையே கொடுநின்றிடு மடியார்தம்

மனையிலேயவர்கூடியிருந்துள
சபையிலேயவர்கால்கணடந்துள
வழியிலேயெழுதூளியெனும்படி திரியாதே

மடநலார்வசமாகியயர்ந்திடு
கொடியனேனொருகாலமடங்கியுன்

வரசரோருகபாதயுகந்தனி லடைவேஞே

சனகர்கோன்விடுதூதர்வழங்கிய
வினியவோலையையோதியுணர்ந்துள
தனமெலாமெதிர்வீசிமகிழ்ந்துத னுயிர்போலுந்

தனயராமிருவோர்கண்மடந்தைய
ரறுபதாயிரமூவர்கண்மந்த்ரிகள்
சகலசேனையும்யாவருமன்பொடு புடைசூழ

வினயமாகவொரோசைநெடுங்கடல்
வருவபோன்முரசானததிர்ந்திட
விரைவிஞலழகாகியசந்திர வரைமேவி

விசைகொடேர்மிசையேவருதந்தையை
யெதிர்கொளாவனேவோர்களொடுந்திரு
மிதிலை மேவியராகவவண்டர்கள் பெருமாளே.

(**குறிப்பு** :- நினைவிலே-நினைவிலும். மொழிதல்-சொல்லுதல், மொழியிலும். நெறியிலே-வழியிலும். வினையாவையும் வென்றிடு முண்ர்வூடேய் நிலையிலே-வினைகளையெல்லாங் கடத்தற்குரிய யோகநிலையிலும். இருபோது-அந்திசந்தி, இரவும்பகலுமாம். நிரந்தரம்-எப்பொழுதும். பாவனை-தியானம். கொடு-கொண்டு. மனை-வீடு. வர சரோருக பாதயுகந்தனில்-சிறந்ததான இரண்டு திருவடித்தாமரை மலர்களிலும். தனம்-பொருள். தனையராமிருவோர்-புதல்வர்களாகிய பரத சத்துருக்கர். மடந்தையரறுபதாயிர மூவர்-சாதாரண மனைவியர் அறுபதிஞயிரவரும், பட்டத்தரசியான கோசலை, கைகேயி, சுமித்திரையென்ற மூவரும். யாவரும் அன்பொடு புடைசூழ ஓரோசைநெடுங்கடல் வருவதுபோல்.............................................
தேர்மிசையேவருதந்தையே வினயமாக எதிர்கொளா எனக் கூட்டுக. விநயம்-வணக்கம். வருவதுபோல் என்பது வருவபோல் என்ருனது விகாரம்.)

47. விதியென்றுருக்கொடிந்த
வுலகம்படைப்பையிந்த்ரன்

# பாலகாண்டம்

மிகுநண்புபற்றுதம்பி யுருவாகி

விரகின்புரப்பைகங்கை
முடிகொண்டபித்தனென்று
மிட ல்கொண்டழிப்பையுன்றன் விளையாடல்

கதி[2]கண்டுரைப்பதன்று
சொருபந்தெரிப்பதன்று
ககனஞ்சிறப்பமைந்த திருமேனி

கருதுங்கணக்கிறந்த
துனேநெஞ்சுறத்தெளிந்து
கரைகண்டு நிற்குமின்ப மடைவேனே

எதிர்கொண்டழைத்துவந்த
சனகன்பதிக்குள்வந்து
ரவிதன்குலத்துயர்ந்த நரபால

னெழின்மண்டபத்திருந்த
பினர்பண்பிலக்கணங்கள்
எவையுத்தெரிக்கவன்று மகிழ்சீதை

மதிமண்டலத்தைவென்ற
முகமும்பெருத்தகொங்கை
மலேயுஞ்சிறுத்தனுங்கு மிடைநூலும்

வடிவுஞ்சிறக்கவந்து
சபையின்கணிற்றல்கண்டு
மயல்கொண்டுநத்துமெங்கள் பெருமாளே.

**(குறிப்பு** :- விதி-பிரமன். உருக்கொடு-உருவங்கொண்டு. படைத்தல்-சிருஷ்டித்தல். இந்த்ரன்மிகுநண்புபற்றுதம்பி-உபேந்திரன். விரகின்-உபாயத்தால். புரத்தல்-பாதுகாத்தல். விரகிற்புரப்பை யென்பது விரகின்புரப்பை எனச் சந்தநோக்கிநின்றது. கங்கைமுடிகொண்டபித்தன்-சிவன். முடி-தலே. மிடல்-வலி. கதி-போக்கு, செலவு. சொருபம்-ஸ்வரூபம். தெரிப்பதன்று-தெரிவிக்கமுடியாதது.. ககனம்-ஆகாயமாகிய. சனகன்பதி-மிதிலே. ரவிதன்குலத்துயர்ந்த நரபாலன்-தசரதன். எழில்-அழகு.

அனுங்குமிடை-வருந்துமிடை. மயல்-ஆசை. நத்துதல்-விரும்புதல்.)

48. பவளத்துவர்வாய்மகளிர்
வசனத்தினிலேவதனப்
பதுமத்தினிலேமருவி விளையாடும்

பரிசத்தினிலேகலக
நயனத்தினிலேவினைசெய்
பகரத்தினிலேயொழுகி வசமாகி

யவலத்தினிலேபொழுது
கழியப்பொருள்போய்வறுமை
யடையப்பழியேபெருக வவரோடே

யளவற்றிடுமோகனமொ
டொருமித்திடுபாவியையு
மடிமைக்கொளவே நினைதல் புரிவாயோ

இவனுக்கிவளேமனைவி
யிவளுக்கிவனேபதியு
மெனவுட்கருதாவரசர் மறைவாண

ரிவரிப்படியேமொழிய
வவையிற்கொடிபோன்மதுர
மெழுசொற்கிளிபோல்விரவு மொருசீதை

கவளக்கரியோவலதெ
னுயிருக்குயிரோகரிய
கடவுட்சுடரோவெனவு ணிறைசோரக்

கவலைப்படுமாமனதின்
மயலிட்டஙனேயுருகு
கருணைக்கடலேபெரிய பெருமாளே.

(**குறிப்பு** :- துவர்-செந்நிறம்.வதனப்பதுமம்-முகத்தாமரைமலர். நயனம்-கண். பகரம்-ப்ரகாசம். அவலம்-மனக்கவலே. மோகனம்-மயக்கம். ஒருமித்திடுதல்-ஒன்றுபடுதல். பதி-கணவன். உட்கருதா-மனத்தில் எண்ணி.

மறைவாணர்-பிராமணர். அவை-ஸபை. மதுரம்-இனிமை. நிறை- கற்பு. மயல்-மயக்கம். அங்ஙனே-சீதாபிராட்டியைப்போலவே.)

49. வாணிமலரோனேயன்புகொண்ட
தேவியபிராமியந்திசந்தி
மாமறைவலோர்வணங்கநின்ற முதலாளி

மாயையதிருபிதிங்கடங்கு
வேணியுடையான்ப்ரபஞ்சமெங்கும்
வாய்மைபலவாறு கொண்டியம்ப வருண்மாது

பாணியொருநாலுடன் பொலிந்து
தாவளியமாய்விளங்கு மங்கை
பாரதியெனுவில்வந்திருந்து விளையாடப்

பார்முழுதுநீயளந்தெழுந்த
தாண்மிசையிலேவிளங்குகின்ற
பாடல்கொடுபாடியன்பர்பந்தி யடைவேனே

காணவிடியாதுகங்குல் கங்குல்
பேணமுடியாதுசங்குசங்கு
காதலறியார்கள்பெண்கள்பெண்க ளனலாகக்

காயுமினிவீறுதிங்கடிங்கள்
சாலவதிபாவிதென்றறென்றல்
காமன்வருவீதியெங்குமெங்கு நிலைகாணேன்

நாணிசிலைதூணிகொண்டுகொண்டு
தூரவொருமேகநின்றுநின்றெ
ணுணமுடனுவியுண்டதுண்ட தெனமாழ்கி

நாடுமொருசீதையங்கிரங்க
வாயவளின்மோகம்விஞ்சவிஞ்ச
நாளைமணமாகுமென்றிருந்த பெருமாளே.

(**குறிப்பு** :- வாணி, அபிராமி, பாரதி என்பன கலைமகள் பெயர். மலரோன்-பிரமன். முதலாளி-முதன்மையுடையாள். அதிருபி-மிக்க அழகுடையாள். திங்கள் தங்குவேணியுடையான் ப்ரபஞ்சமெங்கும் வாய்மை

பலவாறு கொண்டியம்ப அருள் மாது - சந்திரன் பொருந்திய ஜடையையுடைய சிவபிரான் உலக முழுவதும் தத்துவார்த்தத்தைப் பலவழியாலும் உபதேசிக்கும்படி அருள் செய்தவள். பாணி - கை. பொலிந்து - சிறந்து. தாவளியம் - வெண்மை. பந்தி - வரிசை. கங்குல்கங்குல் முதலியன அடுக்கு. கங்குல் - இரவு. சங்கு - வளே. பெண்கள் - தோழிகள். வீறுதிங்கள் - பெருமையுள்ள சந்திரன். சிலே - வில். தூணி - அம்புக்கூடு. மாழ்கி - மயங்கி. அவளின் - சீதையைக்காட்டிலும். விஞ்ச - அதிகப்பட. மணம் - கல்யாணம். காணவிடியாது என்பது முதல் ஆவியுண்டது என்பது வரை சீதை கூற்று.)

50. வாரமொடுபேசுநண்புபண்பு
தீரநிலேயாண்மைநன்றிவென்றி
வாய்மைசதுர்மேன்மைதஞ்சமின்சொல் வலிநேயம்

வாசிகொடைபாரமன்பொழுங்கு
பேரறிவுதேசுநன்குணங்கள்
வாழ்வுபலநூல்விளங்கல்மந்த்ர நெறிநீதி

காரியவிசாரநம்புசிந்தை
வீறுகிளேயோதனந்தனங்கள்
காமரதிருபம்வம்சமிந்த நலம்யாவுங்

காசினியினீயொழிந்துபின்பு
வேறுடையாவரென்றிரந்து
காவலரையேபுகழ்ந்துவம்பி லுழல்வேனே

மேருகிரிபாரகொங்கைகொங்கை
காலன்விடுதூதுகண்கள்கண்கள்
மேகமவர்பாரகொண்டைகொண்டை யவர்தாமோ

வேரிமலர்மேவுமங்கைமங்கை
யாரநகைமாரசிங்கிசிங்கி
மீளநினேயாதுசென்றசென்ற நடைதானென்

ருருயிரையீருகின்றதின்று
யாதுமவர்கோலம்வஞ்சம்வஞ்ச
மாரழலேவீசுதென்றல்கொன்று விடுமானு

ராசையெனதாசையென்றுநின்று

சீதைதிருமேனிகண்டவன்று
ளாதரவினேரறிந்துகொண்ட பெருமாளே.

(**குறிப்பு** :- வாரமொடுபேசுநண்பு-அன்போடுபேசுகின்ற நட்பு. பண்பு-எல்லாரியல்புகளும் அறிந்தொழுகுதல். தீரம்-மனத்தைரியம். ஆண்மை-ஆளுந்தன்மை. வென்றி-வெற்றி. வாய்மை-சத்தியம். சதுர்-சாமர்த்தியம். தஞ்சம்-ஸௌலப்யம். வலி-பராக்ரமம். நேயம்- ஸ்நேஹம். வாசி-இலாபம். பாரம்-பொறுமை. தேசு-காந்தி. பலநூல் விளங்கல்-பல நூலினையும் அறிதல். மந்த்ரநெறி-மந்த்ராலோசனைமுறை. காரிய விசாரம்-செய்யத்தக்கவற்றை யாராய்தல். சிந்தை-மனம். வீறுகிளை- மிக்கசுற்றம். ஓதனம்-உணவு. தனங்கள்-பொருள்கள். காமர் அதிரூபம்-ஒளியுள்ள மிக்கவடிவு. வம்சம்-குலம். காசினி-பூமி. இரந்து-யாசித்து. காவலர்-அரசர். உழலுதல்-வருந்துதல். பாரகொங்கை மேருகிரி. கண்கள் காலன்விடுதூது. அவர் பாரகொண்டை மேகம் எனக் கூட்டுக. கொங்கைகொங்கை என்பது முதலியவை அடுக்கு. மேருகிரி-மேருமலை. பாரகொங்கை-பருத்த தனம். காலன்-யமன். அவர்-சீதாபிராட்டி. கொண்டை-கூந்தல். வேரி-வாசனை. மலர்மேவுமங்கை-லக்ஷ்மி. ஆரநகை-முத்துப்போன்ற பற்கள். மாரசிங்கி-மதனபாஷாணம். ஆருயிரை-பெறுதற்கரிய உயிரை. ஈருதல்-பிளத்தல். அவர் கோலம் யாதும் வஞ்சம் எனக் கூட்டுக. ஆரழலே-மிக்க வெம்மையை. மானுர்-மான்போன்ற சீதாபிராட்டி. மானுராசை யெனதாசை யென்று-சீதாபிராட்டியின் ஆசை என் விஷயமான ஆசையென்று. உள் ஆதரவினேர்-சீதாபிராட்டியின் மனத்திலுள்ள விருப்பத்தின் நேர்மையை. .மேருகிரி பாரகொங்கை என்பதுமுதல் மானுராசை எனதாசை என்பதுவரை சக்ரவர்த்தி திருமகன் கூற்று.)

51. நகுமுத்துமாலைகட்டு
முலைவெற்புமாகிமற்றை
நடுவற்பமாயிளைத்து வளர்தோளும்

நலமுற்றுநாணமச்ச
மடமுட்கொளாவிரும்பு
நயத்தினுலுரைக்கு மிதுகாலம்

அகிலத்திலாரிவட்கு
மணமுற்றுவாரெனத்த
மகமுற்றபேருரைப்ப ரிறைவாநீ

# இராமாயணத் திருப்புகழ்

அதுபற்றெனு வொருத்தி
　　வரைவைக்கடாவன்மற்று
மசடர்க்குநானுரைத்து　　　　மெலிவேனோ

மகிமைப்ரதாபமிக்க
　　மிதிலைப்பிரானுனக்கென்
மகள்பத்நியாமெனத்தண்　　　　அளியோடே

மறையிற்ப்ரகாரம்விட்ட
　　புனல்கைக்கொளாமகிழ்ச்சி
மனமொத்ததோர்முழுத்தம்　　　　வழுவாதே

தகைபெற்றவேள்விமுற்றி
　　முனிவர்க்கெலாமிகுத்த
தனமுற்றுமேயிறைத்து　　　　முறையாலே

சரியுற்றபாணிபற்றி
　　யனல்சுற்றியாதரித்த
சனகிக்குமாலையிட்ட　　　　பெருமாளே.

**(குறிப்பு** :- நகு-விளங்குகின்ற. வெற்பு-மலை. நடு-இடை. விருப்பு-ஆசையை. நயனத்தினுல்-கண்ணுல். உரைக்கும்-சொல்லுகின்ற. இதுகாலம்-இக்காலம். அகிலம்-பூமி. மணமுற்றுதல்-மணஞ்செய்தல். அகமுற்றபேர்-(தலைவியின் )வீட்டிலுள்ளார். இறைவா நீ அதுபற்று என்பது தோழிகூற்று. அது- மணம். ஒருத்தி-தோழி. வரைவைக் கடாதல்-வரைவுகடாவுதல். தலைவியை நூன்முறைப்படி நாடறிய மணந்துகொள்ளும்படி களவொழுக்கத்திலுள்ள தலைவனைத் தோழி வேண்டுவது. இது. அகப்பொருட்டுறைகளுள் ஒன்று. மகிமை ப்ரதாபம்-பெருமையான வீரம். மிதிலைப்பிரான்-ஜனகன். உனக்கு என்மகள் பத்நியாம் என்பது ஜனகன்இராமனை நோக்கிக் கூறியகூற்று. பத்நி- மனைவி. தண்ணளி-க்ருபை. மறையின் ப்ரகாரம் என்பது சந்தநோக்கி மறையிற் ப்ரகாரம். என விகாரமாயிற்று. மறையின் ப்ரகாரம்-வேதவிதிப்படி. புனல்-நீர். மகிழ்ச்சி மனமொத்ததோர்முழுத்தம் வழுவாது-மனமகிழ்ச்சி பொருந்திய சிறந்த முஹூர்த்தம் தவருமல். தகை-பெருமை. வேள்வி-மணவினை. முற்றி-முடித்து. சரி-வளை. அனல்சுற்றி-அக்னியை வலம் வந்து. ஆதரித்து-விரும்பிய. சனகிக்கு-ஜானகிக்கு.)

52. வள்ளியிடைப்பொற் றுகிலினைநீக்குவ
ருள்ளிலொதுக்கித் தனகிரிகாட்டுவர்
மௌவன்முடித்துத் தெருவிலுலாத்துவர் விழியாலே

மையல்விளைத்துப் பரிபவமாக்குவர்
கையிலகப்பட் டவர்களைமேற்கொடு
வல்லவிசித்ரக் கலவியின் மூட்டுவ ரொழியாதே

யுள்ள பொருட்பற் றுவர்பினையோட்டுவர்
தள்ளியபிற்றைப்பொழுதினிலேய்ப்பவர்
உள்ளமொருத்தர்க் கறமுழுதோட்டுவர் இவரோடே

ஒல்லுமனத்து ப்ரமையுடையேற்கினி
யல்லலறுத்துக் கொடியபராக்கற
வுய்யவழைத்துத் திருவடிகாட்டுவ தொருநாளே

எள்ளலில்கொற்றத் தசரதனுர்க்கினி
துள்ளமுவப்பக்கிளையிறுமாப்புற
வெல்வளைமைக்கட் கவுசலைவாழ்த்திட வறவோர் நின்

றெல்லையில்வர்க்கச் சுருதிகள்கூப்பட
நல்லமரர்க்குத் துயரதுகீழ்ப்பட
வில்லிடைவைத்துச் சனகனுநோக்குற முனிகாண

வெள்ளைமருப்புக் கரியுரிபோர்த்தவன்
வல்லசுரர்க்குப் புகலெனுமாப்புர
மெள்ள நுதற்கட் பொறியினின்மூட்டுறு தழன்மூள

வெவ்வரவைச்சிக் கென வதின்மாட்டியொ
ரொள்ளியநெட்டைக் கணையதுபூட்டிய
வில்லைமுறித்துச் சனகியைவேட்டருள் பெருமாளே.

**(குறிப்பு** :- வள்ளியிடை-வள்ளிக்கொடிபோலும் இடை. துகில்-வஸ்திரம். தனகிரி-தனமலை. மௌவல்-முல்லைப்பூ. பரிபவம்-அவமானம். மேற்கொடு-மேலேகொண்டு. பிற்றைப்பொழுது-மறுநாள். உள்ளம்-மனம். உள்ளம் ஒருத்தர்க்கு முழுதும் அற ஒட்டுவர்-ஒருவரிடத்தே மனம் முழுதும் பதிந்துகிடக்க வேறொருவரிடத்தே (அன்புடையவர்போல) நெருங்குவர். ஒல்லும்-இணங்கிய. மனத்துப்ரமை-

மனமயக்கம். அல்லல்-துன்பம். அறுத்து-போக்கி. பராக்கற-(உன் விஷயத்தில் மனதைச் - செலுத்தாத) உபேக்ஷைநீங்க. உய்ய-உஜ்ஜீவிக்கும்படி. எள்ளல் இல்-பழிப்பில்லாத. கொற்றம்-வெற்றி. கிளை-சுற்றத்தார். இறுமாப்புற-மிக்க மகிழ்ச்சியடைய. எல்வளை-ஒளி பொருந்தியவளை. மைக்கண்-கரியகண். மைதீட்டப்பெற்றகண்ணுமாம். அறவோர்-பிராமணர். எல்லையில் வர்க்கச்சுருதிகள் கூப்பட-கணக்கற்றகிளைகளையுடைய வேதங்களைக் கோஷிக்க. அமரர்-தேவர். துயர்-துன்பம். கீழ்ப்பட-தணிய. சனகனும் இல்லிடைவைத்து நோக்குற எனக்கூட்டுக. இல்-மாளிகை. முனி-விசுவாமித்திரன். வெள்ளைமருப்புக் கரியுரிபோர்த்தவன்-வெள்ளிய கொம்பினையுடைய யானைத்தோலைப் போர்த்த சிவன். வல்லசுரர்-கொடிய அசுரர். புகல்-புகுமிடம். மாப்புரம்-பெரிய திரிபுரத்தின்கண். நுதற்கட்பொறி-நெற்றிக்கண்ணினின் றுண்டான தீப்பொறி. மூள-அதிகப்பட. வெவ்வரவு-கொடிய வாசுகியென்னும் பாம்பை. சிக்கென-உறுதியாக. மாட்டி-நாணுகப்பூட்டி. ஓர் ஒள்ளிய நெட்டைக்கணை-ஒப்பற்ற விளக்கம் மிக்க நீண்ட பாணத்தை. வேட்டருள்-மணந்து கொண்ட. சிவதனுஸாதலின் வெவ்வரவைச் சிக்கென வதின்மாட்டி யொ ரொள்ளிய நெட்டைக்கணைய துபூட்டிய வில் என அதற்கேற்ற அடைகொடுத்துக் கூறினர்.)

53. கனகசித்திர கூடம்வைகுந்தவிண்
ணகரிபுட்குழிநாகைபுளிங்குடி
கடன்மலைப்பதிசீவரமங்கைவெ ளறைமூழிக்

களம்வெளக்குளமாதைகுறுங்குடி
யுயர்கவித்தலமாலிகணங்குடி
கருதலுற்றதுவாரகைமுந்துய முனைகோவர்த்

தனமிசைக்கள்வனூர்வெளியங்குடி
புருடவுத்தமமூரகநன்பதி
தடவயற்பரமேசுரமுந்திய பரிசாரந்

தகுதிருப்பெயர்சேறைநரன்பளி
யினியமுட்ட மெனுவுலகந்தொழு
தலமனைத்தினுநீயுறையும்புகழ் பரவேனோ

அனுசருத்தமர்மூவருமுந்திய
சனகனுக்கிளையானருண்மங்கையர்

## பாலகாண்டம்

அதிகுணத்தொருமூவரையுங்கனல் கரியாக

அவர்தனித்தனியாகமணந்திட
ஒருவகைக்கலியாணமெனும்படி
யடைவினிற்றவிராதுநடந்தபின் இளையாரோ

டினியபத்தியினுலயன்மைந்தனை
வரிசையைத்தருகாதிதன்மைந்தனை
இறைவனைப்பெறுதாயரைவந்தனை புரியாவந்

திசைபுலப்படவானகதுந்துபி
யதிரமெய்த்தவராசிமொழிந்திட
விலகுபொற்றிருமாதுடனின்புறு பெருமாளே.

**(குறிப்பு** :- சித்திரகூடம் என்பது முதல் முட்டம் என்பது வரை ஸர்வேச்வரன் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள திவ்யதேசங்கள் றப்படுகின்றன. கனகசித்திரகூடம்-பொன்மயமான தில்லைநகர்த் திருச்சித்திரகூடம். வைகுந்த விண்ணகரம் சோழநாட்டுள் காவிரியின் வடகரையிலுள்ளது. நாகை-திருநாகை. இது காவிரியின் றென்கரையிலுள்ளது. புளிங்குடி-பாண்டிநாட்டுள்ளது. கடன்மலைப்பதி-திருக்கடன்மல்லை, இது மாவலிபுரம் எனவும் வழங்கப்படும். தொண்டைநாட்டுள்ளது. சீவரமங்கை-வானமாமலை. வெளறை-திருவெள்ளறை. திருமூழிக்களம்-மலைநாட்டுள்ளது. வெளக்குளம்-திருவெள்ளக்குளம், இது காவிரியின் வடகரையிலுள்ளது. ஆதை-ஆதனூர். இது காவிரியின் வடகரையிலுள்ளது. இசைக்கள்வனூர்-கீர்த்தியையுடைய திருக்கள்வனூர். இது தொண்டைநாட்டுள்ளது. வெளியங்குடி-திருவெள்ளியங்குடி. இது சோழநாட்டுள் காவிரியின் வடகரையிலுள்ளது. புருடவுத்தமம்-திருவண்புருடோத்தமம். ஊரகம்- தொண்டைநாட்டுள்ளது. பரமேச்சுரம்-பரமேச்சுரவிண்ணகரம். பரிசாரம்-மலைநாட்டுள்ள திருவண்பரிசாரம். சேறை-சோழநாட்டுக் காவிரியின் றென்கரையிலுள்ள திருச்சேறை. நரன்பளி-பார்த்தன்பள்ளி. பார்த்தன்பள்ளி, முட்டம் என்பன சோழநாட்டிலுள்ளன. பரவுதல்-துதித்தல். அநுசருத்தமர் மூவரும்-(இராமனுக்கு) தம்பிகளாகிய சிறந்த மூவரும். சனகனுக்கிளையானருண் மங்கையர்-சனகனுக்குத் தம்பியாகிய குசத்துவசன் பெற்ற பெண்களாகிய. கனல் கரியாக-அக்நிசாக்ஷியாக. அடைவினிற்றவிராது-முறைதவறுமல். இளையாரோடு-தம்பிமார்களான பரதன் முதலியவர்களோடு. அயன்மைந்தனை-வசிட்டனை. வரிசை - பெருமை.

காதிதன்மைந்தனே - விசுவாமித்திரனே. இறைவனே - அரசனாகிய தசரதனே. பெறுதாயரை - பெற்ற தாய்மார்களான கோசலை, கைகேயி, சுமித்திரை என்பவர்களை. வந்தனைபுரியா - வணங்கி. வானகதுந்துபி - தேவதுந்துபி. துந்துபி - ஒரு வாத்தியவிசேடம். அதிர - முழங்க. ஆசி - வாழ்த்து. இலகு - விளங்குகின்ற. பொற்றிருமாது - அழகிய இலக்குமி தேவியாகிய சீதைப்பிராட்டி.)

54. கொடுப்பரோவஞ்சமேகொண்டு
துரப்பரோவென்செய்வோமென்று
குறிப்பரோதங்கள்பால்வந்து மிடிகூறிற்

கொதிப்பரோவஞ்சியே முந்த
வொளிப்பரோநஞ்சுவாளங்கை
குறைப்பரோவம்பராய்விஞ்சு கயவோர்தா

மடிப்பரோவென்றுநீள்சிந்தை
யிளைக்கவேசென்றகால்பிந்த
அடுத்தநாவின்கணீரின்றி யளியேன்யான்

அருட்செய்வாய்கொண்டலேயென்கை
விடுத்துநீயண்டமேழுண்ட
வதிப்ரதாபங்ளோர்கிஞ்சி துணர்வேனோ

தடக்கையாலன்பொடே மென்கை
பிடித்தநாண்முந்தவேவந்து
தனித்துவாழ்கின்றபோதின்கண் மகிழ்சீதை

தனத்துமோகங்கொளாநின்று
கயற்கணேயென்கணேயண்டர்
தவத்தினால்வந்துபார்கொண்ட சனகேசன்

மடக்கொடீசெம்பொனேயென்ற
னுயிர்க்குள்வாழ்வஞ்சியேயுன்றன்
மருட்டராவின்பமேயன்றி யினிமேல்யான்

மதித்துமேகண்டுமால்கொண்டு
புறத்துளார்மங்கைமார்கொங்கை

மனத்திலுலுந்தொடேனென்ற பெருமாளே.

**(குறிப்பு** :- துரப்பரோ-ஓட்டுவார்களோ. மிடி-வறுமை. கொதிப்பரோ-கோபிப்பார்களோ. அஞ்சியே முந்த வொளிப்பரோ-கொடுப்பதற்குப் பயந்து முதலில் ஒளித்துக் கொள்வார்களோ. நஞ்சுவாளங்கை குறைப்பரோ-விஷம் பூசிய வாளால் இடு என்று தாழ நீட்டிய கைகளை வெட்டிவிடுவார்களோ. வம்பராய் விஞ்சு கயவோர்-வீணராய் மிக்க கீழ்மக்கள். சிந்தை-மனம். அளியேன் யான்-நான் கருணைசெய்யத் தக்கவன். கொண்டலே-மேகம் போல்பவனே. என்கை- என்று கீழ்மக்களைப் புகழ்வதை. அண்டமேழுண்ட அதிப்ரதாபம்- ஏழுலகங்களையும் உண்டு (வயிற்றிலடக்கிய) மிக்கவீரம். ஓர் கிஞ்சிது-ஒரு சிறிதும். தடக்கையால்-பெரிய கையினால். கயற்கணே என்பது முதல் தொடேன். என்பதுவரை (பிராட்டியை நோக்கிய) இராமன் கூற்று. அண்டர் தேவர் வஞ்சி-பெண். மருள்தரா இன்பம்-மயக்கந்தராத இன்பம். மால் மயக்கம். புறத்துளார் மங்கைமார் கொங்கை-வெளியிலுள்ளவர்களான இதர ஸ்திரீ ஜனங்களுடைய தனத்தை.)

55. அங்காதரவொடு நினையவுமோகச்
சிந்தாகுலமது தெளியவுமாதர்க்
கன்பாயுருகுத லொழியவுஞானப் படையாலே

அஞ்சாதுறுபகை களையவும்வேரிப்
பைந்தார்கொடுநனி பணியவும்வானத்
தண்டாதிபர்தொழு திருவடிமீதிற் றலைசேரா

இங்காரெதிரென மகிழவுஞாலத்
துன்பேரிசைசெவி பருகவுமேலைக்
கென்பாருறவுக ணெகிழவும்யானிப் படிமீதே

என்றே பெறுவது பொழுதுகள்வீணிற்
சென்றேகழியுமுன் மதியுபதேசித்
திந்தாபிடிபர கதியெனவாழ்வித் தருள்வாயே

சங்கர்மிதிலையி னுயர்கலியாணச்
சிங்காரமுமதன் மகிமையுமாண்மைச்

# இராமாயணத் திருப்புகழ்

சந்தோடமுமினி மையுமுளவாகச் சனகேசன்

றன்பால்விடைகொடு கரிபரிதேர்முற்
றுந்தானைகள்வர முரசொலிவீறத்
தண்சாமரையிரு புடையினும்வீசத் தமர்சூழக்

கொங்கார்பரிமள துளவணிமாலைத்
திண்டோள்[1]பொலிவெழ மரகதமேருக்
குன்றுமெனவருள் வடிவெனவீரச் சிலையோடே

கொந்தார்புரிகுழல் வரிவிழிநீலச்
சந்த்ரானனசன கியையொருதேரிற்
கொண்டேவருமழ கியமணவாளப் பெருமாளே.

**(குறிப்பு** :- அங்கு-அசை. ஆதரவொடு நினையவும்-விருப்பத்தோடு (உன்னுடைய திருவடிகளை) நினையவும். மோகச் சிந்தாகுலம்-விருப்பத்தோடு டிய மனக்கலக்கம். சிந்தாகுலமது என்பதில் ஈற்றில்நின்ற அது பகுதிப்பொருள் விகுதி. ஞானப்படை-ஞானமாகியவாள். களைதல்-நீக்குதல். வேரிப்பைந்தார் கொடுநனி பணியவும்-வாசனையுள்ள பசியமாலைகளைக்கொண்டு (சாத்தி) மிகவும் வணங்கவும். அண்டாதிபர்தொழு திருவடிமீதில்-தேவர்தலைவரால் வணங்கப்படும் திருவடிகளில். தலைசேரா-வணங்கி. இங்கா ரெதிரென மகிழவும்-இவ்விடத்து என்னையொப்பார் எவர் என்று சந்தோஷிக்கவும். ஞாலத்து-பூமியில். உன் பேரிசை-உன்னுடைய பெரிய கீர்த்தியை. செவி பருகவும்-காதாற் கேட்கவும். மேலைக்கென்பா ருறவுக ணெகிழவும்-(யாம் இப்பொழுது இளையம் ஆதலால்) வயது முதிர்ந்தபின் பகவத் குணானுபவங்களிலே ஈடுபடுவேம் என்று சொல்லுவோரது ஸ்நேகம் விலகவும். இப்படிமீது யான் பெறுவது என்று-இந்தப் பூமியிலே யான் அடையுங்காலம் என்று. பரகதி-மேலானநிலை. ஆண்மைச் சந்தோடம்-வில்லிறுத்த ஆண்மையினால் உண்டான மகிழ்ச்சி. கரி-யானை. பரி-குதிரை. தானை-காலாட்படை. முரசொலி வீற-பேரிகைகளின் முழக்கம் மிக. தமர்-சுற்றத்தார். கொங்கார் பரிமள துளவணிமாலைத் திண்டோள் பொலிவெழ-தேன் பொருந்திய வாசனையுள்ள துழாய்மாலை யணிந்த ஒழுங்கான வலியதோள்கள் விளங்க. கொந்தார் புரிகுழல் நீலவரிவிழிச் சந்த்ரானன சனகியை-பூக்கொத்துக்கள் பொருந்திய பின்னிய கூந்தலையும் நீலமணி போன்ற செவ்வரி கருவரி பரந்த கண்களையும். சந்த்ரன் போன்ற முகத்தையுமுடைய சீதைப்பிராட்டியை.)

56. இருகையோ தொழாதுபற்றி
மலரெடாதிடாதுசித்த
மிளகுருதுநாவுமிக்க திருநாமம்

இசையோடேசொலாதுகெட்ட
தலைசெயாதுதாள்வணக்க
மினியநீருகாவிணைக்கண் இதனாலே

யுருகுநேயமேவுபத்த
ரருகுசார்கிலேனெவர்க்கு
முரியனாகிலேனெடுத்த வுடல்பாவம்

ஒருவனானநீக்ருபைக்கண்
உதவுபார்வையால்[1]விலக்கி
யுறுதி றிவாழவைப்ப தொருநாளே

அரசனாவியேபதைக்க
உலகமேமுமேப்ரமிக்க
அடிபொருதராநெளிக்க முடுகாவந்

தணுகிநானலாதுமற்று
மெவனடாவிராமபத்ர
னவனைமோதுவேனெனத்த னதிருபம்

பரிதிகோடிபோலெறிக்க
மகுடவேணிதாழருத்ர
பரமயோகிபோலதட்டி ரதமேறிப்

பழையசாப[1]மேவணக்கி
யறிவையோவெனாவெதிர்த்த
பரசுராமன்வீறழித்த பெருமாளே.

(குறிப்பு :- இடாது-அருச்சனைசெய்யாது. சித்தம்-மனம். இளகுருது-உருகாது. தாள்-திருவடிகளில். இணைக்கண் இனிய நீருகா-இரண்டுகண்களும் ஆனந்த பாஷ்பத்தைச் சிந்தா. நேயம்-அன்பு. பக்தர்-அடியார். உடல்பாவம்-சரீரத்தையும் அதனாற் றேடிக்கொண்ட தீவினையையும். ஒருவனான நீ-ஒப்பாரை மிக்காரை இலையாய நீ.

திறைப்பொருள் யாவற்றையும் ஆலோசனையின்றித் தானங்களிலும் பூஜைகளிலும் செலவிட்டார்.

அவ்வாறு பொருள்முழுது மழிந்து அவர் வறியரான நேரத்தில் க்ஷாமமும் ஒருவாறு தவிர்ந்தது. ஆனால் திறைப்பொருள்கள் தனக்கு உரிய காலங்களில் கிடைக்கப்பெறாமை கண்டு, சோழஅரசன் முனையதரையர் மீது மிகவும் முனிவுகொண்டாவனானான். "இறைப் பொருளைக் கொள்ளைகொண்ட முனையனை இரக்கமின்றிச் சிறைப்படுத்துங்கள்" என்று அவன் தன் ஏவலாளருக்குக் கட்டளையிட்டான். அவ்வண்ணமே அவர்களும் திருமாலடியவருக்குப் பற்பல தீமைகளிழைத்து அவரைச் சிறையிட்டுச் சென்றனர்.

ஆனால் முனையதரையரோ தமக்கு எத்தகைய பெருந்துன்பம் நேரிடினும் எம்பெருமானையே உற்ற துணையாகப் பற்றியிருந்தார். காதற்கணிகையாகிய அவருடைய தேவியும் உணவு முதலாயின உட்கொள்ளுதலின்றி ஆங்குள்ளதொரு வாவிநீரில் நின்று, "எம்பெருமானே! இன்னும் ஐந்து நாட்களில் என் காதலனை அடையாவிடில் ஏரியினில் மூழ்கி யான் இன்னுயிர் துறப்பேன்" என்று அரற்றிய வண்ணமாகவே இருந்தாள்.

இஃதிங்ஙனமாக, பிறர்துயர் பொறாத பேரருளாளரான சவரிப்பெருமாள் அவ்விடரினை நீக்கத் திருவுள்ளம் பற்றினர். அதனால் ஒரு பாகவதரைப் போல வேஷந்தரித்து அவர் சோழராஜாவினுடைய கனவிடைத் தோன்றினார். "யான் கண்ணபுரத்தான்; என் அடியவற்குற்ற ஆரிடர் களைவான்வேண்டி உன்னிடம் வந்தேன். நீ உடனே முனையதரையனைச்

அரசன்-தயரதன். ஆவி-உயிர். பதைக்க-நடுங்க. ப்ரமிக்க-திகைக்க. அடிபொருது அராநெளிக்க-பரசுராமன் கோபத்தோடு தூக்கிவைத்து நடந்து செல்லும்போது அவனது பாதத்தைத் தாங்கமுடியாமல் ஆதிசேஷனும் நெளிக்க. முடுகாவந்து-விரைந்துவந்து. அணுகி-கிட்ட நெருங்கி. நானலாது என்பதுமுதல், பழைய சாபமே வணக்கி யறிவையோ, என்பதுவரை பரசுராமன் கூற்று. அதிரூபம்-மிக்க வடிவம். பரிதிகோடிபோலெறிக்க-கோடி சூரிய ப்ரகாசம்போல் ப்ரகாசிக்க. மகுடவேணிதாழ-சடை மகுடமானது அவிழ்ந்து தொங்க. ருத்ரபரமயோகிபோ லதட்டி-பரம யோகியாகிய ருத்திரனைப்போலக் கர்ஜித்து. சாபம்-வில். வணக்குதல்-வளைத்தல். வீறு-வலி.)

57. இருவினையைமூட்டிமயங்கு
மதியையதின்மாட்டியுலைந்த
வெனைநெடியகோட்டிகள்கண்டு நரகூடே

இறுதியறவீழ்த்தியிறந்து
பிறவியெழுகாட்டினுள்வெம்ப
விவளவினில்வேற்றுமைகண்ட தமையாதோ

அருமறைகடேற்றுமிருந்த
திருவடிகள்காட்டியமுங்கு
மலமுழுதோட்டியனந்த வெகுமாயத்

தகிலவிளையாட்டொடுமுந்த
விதுவுமொரு த்துநினைந்துன்
அடியரொடுகூட்டிவைகுந்த மருள்வாயே

பரசுதரனீட்டிவழங்கு
நெடியசிலைகோட்டிமுனிந்து
பகழியதுபூட்டியவன்செய் தவம்வாசிப்

பரிபவமதாக்கியபின்பு
விடையருளிநோக்கியதந்தை
பழையவீடர்நீக்கிநடந்து வழியூடே

திருவடிகள்போற்றிவணங்கு
பரதனையும்வாழ்த்தியுகந்து
செயமருவுபாட்டனிருந்த நகர்காணத்

சிறையினின்றும் விடுவிப்பாயாக" என்று அவர் அவனுக்குக் கூறிவிட்டுச் சென்றார். அரசன் விழித்தெழுந்து பெரிதும் அதிசயமுற்றவனானான். சிறிதும் தாமதமின்றித் திருக்கண்ணபுரத்தையடைந்தான். அங்கு முனையதரையரைச் சிறைவீடு செய்து "தேவரீராலேயே அடியேனுக்கு எம்பெருமான் ஸேவைஸாதித்தார்" என்று அவர் திருவடிகளில் தெண்டனிட்டு மிகவும் புகழ்ந்து கொண்டாடினான். முனையரும் விரைந்துசென்று, தம் தேவியாரைத் தீப்பாயுமுன்னரே கண்டுகொண்டார். இருவரும் ஆனந்த பரவசமாயினர். அதன்பின்பு அவர்கள் "எம்பெருமான் திருவருள் இருந்தவாறென்னே" என்று அவனை ஏத்தியவண்ணமாகவே தம் திருமாளிகைக்குப் போய்ச் சேர்ந்தனர்.

அங்கு முனையதரையர் தேவி அவருக்குப் பாலரிசி, பயறு, சர்க்கரை இவை கலந்து அட்ட பொங்கலமுதினைப் போனகமாகப் படைத்தாள். அதற்குமுன் நெடுநாளாகப் பசியினால் வருந்திக் களைத்திருந்தமையால், அவ் வடிசில் அவருக்கு அமிர்தமயமாகத் தோன்றியது. அதனால் அவர், "இத்தகைய நல்லுணவு எம்பெருமானுக்கே உரியது" என்று சொல்லி, நிறைந்த ஆர்வத்துடன் மானஸமாக அதனைப் பெருமாளுக்கு ஆராதனைபுரிந்து பின்னர் உட்கொள்ளுவாராயினர். அது நிற்க.

மறுநாட்காலையில் திருக்கண்ணபுரத்துத் திருமால் கோவிலில் அர்ச்சகர்கள் வழக்கப்படி உள்ளே புகுந்து பார்த்தவளவிலே, எம் பெருமானுடைய திருமேனியில் பொங்கலமுதின் நெய் வடிந்தொழுகிய அடையாளங்கண்டு திடுக்கிட்டார்கள். "யாது விபரீதம் விளைந்ததோ" என்று யாவரும் உண்மையறியாது கலங்கினர். பின்னர்த் தீர விசாரித்து நிகழ்ந்தன யாவுந்தெரிந்து கொண்டார்கள். அதனால் அவ்வூராரனைவரும் அப் பெருமானது

திரள்புயபராக்ரமதுங்க
விளவலொடுபோக்கிவிளங்கு
திருவொடுமயோத்திபுகுந்த பெருமாளே.

(**குறிப்பு** :- இருவினை-நல்வினை தீவினை. மூட்டி-உண்டாக்கி. மதியை-அறிவை. அதின்மாட்டி-இந் நல்வினை தீவினைகளிலே சேர்ப்பித்து-உலைந்த-நிலைகுலைந்த. எனை-என்னை. நெடிய-பெரிய. கோட்டிகள்கண்டு-பைத்தியச் செய்கை யுடையவனாகச்செய்து. நரகூடு-நரகில். இறுதியறவீழ்த்தி-முடிவறக் கிடத்தி. இறந்து-செத்து. பிறவியெழு காட்டினுள்-ஏழுபிறப்பாகிய காட்டினில்.(உபாயமாக) நிச்சயித்துச் சொல்லப்பட்ட மிக்க பெருமையுள்ள திருவடிகளை. அழுங்கும் அவலம்-வருந்திய மனக்கவலை. அநந்த வெகுமாயத்தகில விளையாட்டொடு-கணக்கற்ற மிக்க மாயத்தோடுகூடிய ப்ரபஞ்ச லீலையோடு. முந்த-முன்னே. இதுவும் ஒரு கூத்து நினைந்து-என்னை ரக்ஷிக்கும் இதனையும் ஒரு விளையாட்டாகக் கருதி. பரசுதரன்-பரசுராமன். வழங்கும்-கொடுத்த. நெடிய சிலை-நீண்ட வில்லை. கோட்டி-வளைத்து. முனிந்து-கோபித்து. பகழியதுபூட்டி-அம்பையேறிட்டு. பரிபவமதாக்கிய பின்பு-பரசுராமனை அவமானப் படுத்தியபின். விடையருளி-அவனுக்குப் போக அனுமதிதந்து. தந்தை-தகப்பனாகிய தசரதனுடைய. பழைய இடர்நீக்கி-நெடுங்காலம் பரசுராமனாலடைந்த துன்பத்தை நீக்கி. புயம்-தோள். பராக்ரமம்-வீரம். துங்கம்-உயர்வு. இளவல்-சத்துருக்னன். போக்கி-போகச்செய்து. திரு-சீதைப்பிராட்டி.)

58. எறிபடையெடுத்துமோகர
மகிஷமதுகைத்துமேலிடு
மெரியெனவிழித்துவீசிய கயிறூடே

யிடியெனமுழக்கியேயெதிர்
கறுவுறுகருத்தகாலனெ
னிறுதிநிலைபற்றியேவரு மொருபோது

முறுகுகனலொத்ததாடகை
வெருவுறவளைத்தசாபமு
முனிசொலவிடுத்தபாணமு மிருதோளு

முதுகிடைபிணித்ததூணியும்
அழகியபசுத்தமேனியு
முறுவலுமுகப்ரசாதமும் மறவேனே

திருவிளையாடலை நினைந்து நினைந்து அகங்களித்தவராயினர். தம் பொருட்டாகப் பெருமாள் நிகழ்த்திய இவ் வற்புதமானது என்றென்றும் விளங்கித் தோன்றுமாறு, முனையர் அன்றிரவு அர்ப்பித்த பொங்கலமுது அவருக்கு எக்காலத்தும் நிவேதனம் செய்யப் பெறுதற்கு வேண்டிய வருவாய்களை ஏற்படுத்தினார். அது 'முனியோதனம்' என்னும் ப்ரஸித்தியோடு பெருமாளுகந்து திருவமுது செய்யும் சித்ரான்னமாக இன்றைக்கும் வழங்கிவருகிறது.

இந்த வ்ருத்தாந்தம் திருக்கண்ணபுர ஸ்தலபுராணத்தில் முனியோதன வத்தியாயமென்னு மிடத்தில் விளங்க உரைக்கப்பட்டுள்ளதென்பர். இது ஒரு புராண வரலாறென்றமட்டி லமையாது பிற்காலத்து ஆராய்ச்சி முறையாற் றெளிந்த சரித்திர வுண்மையோடு மாறுகொள்ளாமலு மிருப்பது இங்கு விசேஷமாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

சோழ நாட்டின் பலவகைப் பெருமைகளையும் எடுத்துப் பேசுவதாகிய **சோழமண்டல சதகம்** என்னும் தமிழ்நூல் ஒன்றுண்டு. அதில் இவ்வதிசயச் செய்தி பின்வருமாறு பாராட்டப்படுகிறது:

> **“புனையுங்குழலாள்பரிந்தளித்தபொங்கலமுதும்பொரிக்கறியும்**
> **அனையசவரிராஜருக்கேயாமென்றருந்துமாதரவின்**
> **முனையதரையன் பொங்கலென்றுமுகுந்தற்கோதுமுதுகீர்த்தி**
> **வனையும் பெருமையெப் போதும் வழங்குஞ்சோழமண்டலமே”**

இதனால் முனையதரையரளித்த பொங்கலமுதானது சோழமண்டல முழுமைக்குமே பெரும் புகழ் விளைத்தற்கேதுவாயிற்றென்பது

# இராமாயணத் திருப்புகழ்

அறநெறிவிளக்குகோசலை
மருமகள்வடித்தவோதியள்
அயில்விழிபிடித்தகாதினள் இருபோதும்

அருமறைமணக்குமேனியள்
வரகமலமுற்றபாணியள்
அமுதுறுசிவத்தவாயினள் அருண்மாருப்

பொறையுலகுபெற்றபூரணி
பிரமனையளித்தநாயகி
புணரியிலுதித்தகாரிகை மறுநாடாப்

புதுமதிமுகத்தள்சானகி
முகுளிதவிசித்ரபூஷண
புளகிதமுலைக்குண்மூழ்கிய பெருமாளே.

(**குறிப்பு** :- படை-ஆயுதம். மோகரமகிஷ மதுகைத்து-உக்கிரமான எருமைக்கடாவைச் செலுத்தி. எரியென-அக்நியைப்போல. முழக்கி-சப்தித்து. எதிர்கறுவுறு-எதிர்த்துக்கோபித்து வருகிற. காலன்-எமன். இறுதிநிலை-அந்திமகாலம். முறுகுகனல் ஒத்த-கடிய நெருப்பையொத்த. வெருவுற-பயப்படும்படி. முறுவலும்-புன்சிரிப்பும். முகப்ரசாதமும்-முகத்திலுள்ள கருணையும். வடித்தவோதியள்-சிக்கெடுத்து அலங்கரிக்கப்பட்ட கூந்தலையுடையாள். அயில்விழிபிடித்த காதினள்-காதளவோடிய வேல்போன்ற விழியினையுடையாள். இருபோதும் அருமறை மணக்குமேனியள்-அந்திசந்திகளில் அந்தணர்சொல்லும் வேதமந்த்ரங்களாற் ப்ரதிபாதிக்கப்பட்டவள். வரகமலமுற்ற பாணியள்-சிறந்த தாமரைப்பூவைக் கையின் கண் உடையவள். சீதாபிராட்டி இலக்குமியின் அம்சமாதலின் வரகமலமுற்ற பாணியள் என்றார். புணரி-திருப்பாற்கடல். மறுநாடாப் புதுமதி முகத்தள்-களங்கமடையாத புதிய மதிபோலு முகத்தையுடையவள். முகுளித விசித்ர பூஷண புளகித முலை-தாமரை மொட்டுப்போன்ற அழகிய ஆபரணங்களை யணிந்த (சந்தோஷத்தால்) மயிர் சிலிர்த்திருக்கின்ற தனம்.)

**பாலகாண்டம் முற்றிற்று.**

வெளிப்படை. அஃதொருபுறமிருக்க.

முனையருடைய காதற்கணிகை அவர் பிரிவாற்றாது கூறியது என்னும் வெண்பா ஒன்று தமிழ்நாவலர்சரிதையிற் காணப்படுகிறது.[1] அன்றியும் விக்ரமசோழனென்னும் ராஜாவை ஒட்டக்கூத்தர் என்னும் புலவர் பெருமான் புகழ்ந்துபாடிய விக்ரமசோழனுலா என்னும் ப்ரபந்தத்தால் அச் சோழனுக்குரிய ப்ரதான மந்திரியும் சேனாநாயகருமாக விளங்கியவர் 'முனையர்கோன்' என்னும் பெயருடையாரென்று தெரிகிறது.[2] இவ்விரண்டிடங்களிலும் கண்ட முனையரும் மேலே குறித்த முனையதரையரும் ஒருவராகவே கொள்ளுதல் கூடுமென்பது சரித்ரவிமர்சகர்கள் அபிப்ராயம்.[3]

---

அடிக்குறிப்பு

1 இன்றுவரினென்னுயிரைநீபெறுவைஇன்றைக்கு
நின்று வரினன்னதுவுநீயறிவை -- வென்றி
முனையாகலவிமுயங்கியவாறெல்லா
நினையாயோநெஞ்சத்துநீ

தமிழ் நாவலர் சரிதை

2 ஆர்க்குங்கழற்காலன்கன்றனதவையுட்
பார்க்குமதிமந்த்ரபாலகரிற் போர்க்குத்
தொடுக்குங்கமழ்தும்பை தூசினொடுஞ்சூடிக்
கொடுக்கும்புகழ்முனையர்கோனும்

விக்ரம சோழனுலா

3 இங்ஙனமான அபிப்ராயமும் அதனோடு தொடர்புடைய இவ்விஷயங்களின் ஆராய்ச்சியும் செந்தமிழ்ப் பத்திரிகையின் ஏழாந் தொகுதியில் வெளிவந்துள்ளன.

ஸ்ரீ:

# கம்பநாட்டாழ்வார்

கல்வியிற் பெரியவரென்றும் கவிச்சக்ரவர்த்தியென்றும் பலவர் போற்றும் புகழுடன் விளங்கியவர் கம்பநாட்டாழ்வாரென்பது பலரும் அறிந்ததேயாம். இராமாயணமென்னும் பக்திவெள்ளத்தை எல்லோரும் மடுத்து இன்பநுகருமாறு அதனைச் சீரிய செந்தமிழ்ப் பாடல்களால் அருளிய அவரது மஹோபகாரம் எக்காலத்தும் மறக்கற்பாலதன்று. அவருடைய அருமை பெருமைகளை எத்தனைமுறை ஏத்திப்புகழ்ந்தாலும் அதுவும் அவரது செய்ந்நன்றிக்குத் தக்க கைமாறாவதில்லை. ஆகையால் அவருடைய வரலாறுபற்றி இதுவரை பலரும் பலவகையாக ஆராய்ந்து பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும் வெளியிட்டிருந்தாலும், அச்செந்தமிழ்ச் சான்றோரது தெய்வப்புலமை முதலிய சிலவற்றைக் குறித்து யானறிந்ததை இங்கு ஒருவாறு தொகுத்துரைக்க முற்படுகின்றேன்.

**தமிழ்நாவலர்சரிதை, தொண்டைமண்டல சதகம், சோழ மண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், புலவர்புராணம்** என்பன போன்ற சிறு நூல்கள் சில கம்பர் வரலாற்றினை ஒருவகையாக உணர்தற்குக் கருவியாய் அமைகின்றன. அவரைக்குறித்துக் கர்ணபரம்பரையாக வழங்கிவரும் சிற்சில செய்திகளும் அவற்றோடு சேர்த்துக் கொள்ளத்தக்கன. ஆனாலும் அப்பெருந்தகையாளரது சரித்திரத்தை உள்ளவாறு அறிதற்கு அவை போதிய ப்ரமாணங்களாகுமோ என்பது சந்தேகத்திற்கிடமாகவேயுள்ளது.

இனி கம்பர்தாமே இயற்றியருளிய **இராமாயணமும், ஆழ்வார் நூற்றந்தாதியென** வழங்கும் **சடகோபரந்தாதியும்,** அவற்றின் தனியன்களென்று அநுஸந்திக்கப்பெறும் சிறப்புப்பாயிரமும் போல்வன இவ் விஷயத்தில் த்ருடதரப்ரமாணங்களாமென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. ஆகையால் அவற்றையே பெரும்பாலும் துணையாகக் கொண்டு எழுதப்படும் இக் கட்டுரையிலும் அமைவுடையனவற்றை அறிஞர்கள் ஆராய்ந்து கைக் கொள்வார்களாக.

கம்பர் உவச்சக்குலத்தில் உதித்தவரென்றும் வேளாண் மரபைச் சார்ந்தவரென்றும் பலரும் பலவாறு கூறுவர். அஃது எங்ஙனமாயினும் அவர்

ஸ்ரீ:

# க்ருஷ்ணதேவராயர்

வித்வான் ஸ்ரீ உப. வே. மு. ராகவையங்கார் ஸ்வாமியால் அருமையாக ஆராய்ந்தெழுதப்பட்ட "தமிழரும் ஆந்த்ரரும்" என்னும் புஸ்தகம் ஸமீபத்தில் வெளிவந்திருக்கிறது. அதில் விஜயநகர வேந்தரும் விஷ்ணுபக்தருமான க்ருஷ்ணதேவராயரைப் பற்றி குறிக்கப்பட்ட சில விஷயங்கள் நமது பத்ரிகை (ஹரிஸமயதிவாகரம்)நேயர்களுக்கு மகிழ்ச்சியைச் செய்யுமென்று கருதி இங்கே ஸங்க்ரஹித்து எழுதப்படுகின்றன.

விஜய நகரத்தைப் பரிபாலித்துவந்த வேந்தர்கள் பலருள்ளும் ப்ரபலமுற்றிருந்தவர் க்ருஷ்ணதேவராயரேயாவர். அவர் 1509 முதல் 1529 வரை அரசாண்டனர். அப்பொழுது விஜய நகரராஜ்யம் ஆந்த்ர கன்னட தேசங்களிலும் தமிழ்நாட்டில் வ்யாபித்திருந்தது. அவருடைய ஆளுகையில் ஜனங்கள் எல்லா உடைமையையும் அடைந்து சுகமாக வாழ்ந்தனர். அவர் ஒரு சிறந்த வரும்போர்வீரருமாக விளங்கினவர்; உயர்ந்த கொடையாளி மிகுந்த புகழ்படைத்தவர்; அநேக வித்வான்களையும் ஆதரித்து தேவாலயங்கள் பலவற்றைச் சரிவரப் பாதுகாத்து அபிவிர்த்தியும் செய்தவர். இன்னும் அவருடைய அருமைபெருமைகளையெல்லாம் சரித்திர ஆசிரியர்கள் நன்றாக எழுதி வைத்திருக்கும் குறிப்புகளாலறியலாம்.

அவர் அரசியல் முறையாற் பொதுநோக்கமுடையவராயினும்

நான்காம் வருணத்தவரென்பது நன்கு தெளியலாகும். அவருடைய பெயர் கம்பர் என வழங்குவதன் காரணமும் பலவாறாக உரைக்கப்படுவதுண்டு.* ஆயினும் அவையெல்லாம் உசிதமுடையனவாகத் தோன்றவில்லை. கம்பநாடென்பது ஒரு தேச விசேஷத்தைக் குறிக்கும். ஆகையால் அதனடியாக ஏதோ ஒரு சம்பந்தம் பற்றி அவருக்குக் கம்பநாடரென்ற பெயர் வழங்கலாயிற்றென்று கொள்ள வேண்டும். ''கம்ப நாடுடைய வள்ளல் கவிச் சக்ரவர்த்தி'' என்பது இதற்கு ஒரு சான்று. அந்த நாடு அவருடைய ஜன்ம பூமியென்றாவது, வாஸஸ்தலமென்றாவது அல்லது அவர் தமக்கு உரிமையாகப் பெற்ற தேசமென்றாவது உய்த்துணரத்தக்கது. ஆகவே கம்பர் என்னும் பெயர் கம்பநாடர் என்பதன் ஏகதேசமென்பதும் எளிதின் அறியப்படும்.

இனி, சோழ வளநாட்டுத் திருவழுந்தூரை அவா உறைவிடமாகக்கொண்டவரென்பது பலர்க்கும் ஒப்ப முடிந்ததொன்று, ஆதித்தனென்னும் பெயருடையாரொருவர்க்கு அவர் புதல்வராய்த் தோன்றினரென்றும் சொல்லப்படுகிறது. அன்றியும் சோழன் முதலிய அரசர்களிடத்தில் அவர் நெருங்கிப் பழகி வரிசைகள் பெற்றனர். சடையப்ப வள்ளலென்னும் தனிகரொருவர் அவரைப் பெரிதும் ஆதரித்துப் பேணுவாராயினர். தமது பிறந்தகமாகிய சோழ நாடு, காவேரி இவற்றினிடம் கம்பர் பேரபிமானம் பூண்டிருந்தார். தமக்கு எக் காலத்தும் தளர்ச்சி வாராமற் காத்த சடையப்ப வள்ளலிடம் அவர் சிறிதும் மறவாத செய்ந்நன்றியறிதலும் உடையவராயிருந்தார்.

இவையேயன்றி, கம்பர் மிகவும் விரைவினில் கவிபாடும் வல்லமையுள்ளவர். அவர் திருவெண்ணெய்நல்லூரில் தங்கியிருந்து, வான்மீகம் முதலிய இராமாயணங்களின் பொருளை மறைவேதியருடன் ஆராய்ந்து, தம் **இராமாயணத்தை** இனிதாக இயற்றி முடித்தார்; பின்னும் அவர் பங்குனி யுத்தரமான நன்னாளில் ஸ்ரீரங்கநாதன் திருமுன்பு வித்வான்கள் பலர் கூடிய முன்னிலையில் அதனைச் செவ்விதின் அரங்கேற்றிச் சீரும் சிறப்பும் எய்தினார்; அப்பொழுதே அவர்க்கு

---

* அவை: கம்பர் என்பது ஏகாம்பரமுடையாரது திருப்பெயரின் மரூஉ என்பதும், இளமையிற் கம்பங்கொல்லையைக் காத்திருந்தமையால் எய்திய தென்பதும், கையில் கம்புடன் அரசன் முன்னிலையிற் சென்று நின்றபொழுது இடப்பட்டதென்பதும், குழந்தைப் பருவத்தில் பெற்றோரால் நீக்கப்பட்டுக் கோயிலின் கம்பத்தடியில் கண்டெடுக்கப் பட்டமையால் உண்டாகியதென்பதும் பிறவுமாம்.

சமயக் கொள்கையில் தென்னாட்டு ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தைத் தழுவியவராக அறியப்படுகிறார். அவருக்கு ஆசார்யர் இன்னாரென்பதற்குத் தெளிவான ஆதாரமில்லையென்றும், ஆனால், அவர் பின்னோர் காஞ்சீபுரம் ஸ்ரீதாததேசிகன் திருவடிஸம்பந்திகளென்பதற்கு ப்ரமாணங்களுண்டென்றும் கூறுவர். அது நிற்க.

தமிழில், ஹரிதாஸரென்பவரால் இயற்றப் பெற்ற, **"இரு சமய விளக்கம்"** என்னும் ஒரு க்ரந்தமிருப்பது எல்லார்க்கும் தெரிந்த விஷயமே. அது சைவ-வைஷ்ணவ வாதங்களைப் பற்றிக் கூறுகின்றது. அதன் பாயிரத்தில் அந் நூலாசிரியர் உபகாரஸ்ம்ருதியாக இந்த க்ருஷ்ணதேவராயரைப் பற்றி ப்ரஸ்தாபித்திருக்கிறார். அச் செய்யுள் வருமாறு:

**கிரிபோல்விளங்கிக்கிளரும்புயக்கிட்ணராயர்**

**தரைமீதுசிங்காத்திரியில் சயத்தம்பநாட்ட**

**வரம்ஆதரவால்அளித்தேவடகூவம்மேவும்**

**கருமாமணிவண்ணனைநீடுகருத்தில்வைப்போம்.**

க்ருஷ்ணதேவராயர் பரராஜாக்களை ஜயித்து ஸிம்ஹாத்ரியில் ஜயஸ்தம்பம் நாட்டுவதற்கு வரமளித்து வடகூபம் என்னும் திவ்யதேசத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை

ஆழ்வாரிடம் பரமபத்தி தலையெடுத்து அவர் திருவருளுக்குட் பாத்ரபூதராகியும் விளங்கினார்; என்னும் இவ்வரலாறுகளெல்லாம் உண்மையானவையென்று கொள்வதற்குப் போதுமான ப்ரமாணங்கள் உள்ளன.

மற்றும் இங்ஙனமே அவர் நாவீறு பெற்ற ஒரு மஹாகவியென்பதை நன்கு துணிவதற்கு அவரது **இராமாயணமும்** அதன் பாயிரமும் ஆதரவளிக்கின்றன. ஆனாலும் சாமான்யமாக அவரை ஒரு மஹாகவியென்ற மட்டில் மதித்து விடுதல் அவர் பெருமைக்கு மிகுதியும் குறைபாடியற்றியதாக முடியும். ஏனெனில், அவர் பக்தி நிஷ்டராயிருந்ததேயன்றி, பகவத்கடாக்ஷத்தால் திவ்யஜ்ஞானம் பெற்ற ஒரு பாகவதோத்தமராயும் விளங்கினர் என்பதைத் தக்க மேற்கொள்களால் வலியுறுத்தல் கூடும். இராமாயணம் போன்ற பாரகாவ்யங்கள் இயற்றப் புகுவார்க்கு "ஆக்கியோன் பெருமை" என்று சொல்லப்படும் வக்த்ருவைலக்ஷண்யம் இன்றியமையாததாகையால், கம்பநாடரிடம் அது எவ்வளவாக அமைந்ததென்பதை ஆராய்தலும் இங்கு அவச்யமானதேயாம்.

கம்பநாட்டாழ்வாரென்ற அவருடைய சிறப்புப் பெயரே அவர் பெருமைக்குச் சான்று பகர்கின்றது. பகவத்பக்தியில் ஆழ்ந்து ஈடுபட்டவர்களை ஆழ்வார் என்ற பெயரால் வழங்குதல் நம்மவருடைய ஸம்ப்ரதாயமாகும். ஆகையால் அப் பெருமை பற்றியே கம்பருக்கும் அந்தத் திருநாமமிடப்பட்டதென்பது கரதலாமலகம்.

**"தராதலத்திலுள்ள தமிழ்க் குற்றமெல்லாம்**
**அராவுமரமாயிற்றன்றே இராவணன்மேல்**
**அம்புநாட்டாழ்வான் அடிபணியும்ஆதித்தன்**
**கம்பநாட்டாழ்வான்கவி"**

என்பது **இராமாயணத்தின்** தனியன்களாயுள்ள பாசுரங்களில் ஒன்று. இதன் பொருள்: இராவணன் என்னும் அரக்கன் மீது பாணங்களை ஏவிப் பிறரெல்லாரையும் ஆட்கொண்டருளும் பெருமாளது திருவடிகளையே எப்பொழுதும் வணங்குபவரும், இருளினை நீக்கும் இரவியைப் போன்று அஜ்ஞானத்தை அகற்றுபவருமான கம்பநாட்டாழ்வாருடைய கவியானது உலகத்தில் தமிழ் மொழியினிடம் தலைகாட்டுகின்ற குற்றங்களையெல்லாம் ஒருசேர அராவுதற்கு ஓர் அரம்போல விளங்காநின்றது என்பதாம். கம்பர் இராமாயணமியற்றிய காரணத்தால் தமிழ் பாஷையே வீறுபெற்றதென்பது

த்யானிப்போமாக: என்பது அதன் பொருள்.

அதனால், ஹரிதாஸர் க்ருஷ்ணதேவராயரால் அபிமானிக்கப் பெற்றவரென்பது நன்குவிளங்கும். ஸிம்ஹாசலத்தில் ஜயஸ்தம்ப நாட்டுவதற்கு க்ருஷ்ணதேவராயர் பெருமாளுடைய அநுக்ரஹத்தைப் பெற்றிருந்தாரென்பது அவருடைய தீவ்ரமான பக்தியைக் காட்டுகிறது.

அதுவன்றியும் ஸிம்ஹாத்திரித் திருமாலிடம் க்ருஷ்ணதேவராயர் பெரும்பக்தி கொண்டிருந்தாரென்று அறியப்படுகிறது. சக... 1438 1441ல் அவர் அநேக ஊர்களும் திருவாபரணங்களும் அப்பெருமாளுக்கு அளித்தனரென்று ஸாசனங்கள் ஸிம்ஹாசலக் கோயிலில் காணப்படுகின்றன.

அவையெல்லாம் ஒருபுறமிருக்க; அவர் பெருங்கல்விமானாகவும் சிறந்த கவியாகவும் விளங்கினார் என்பதற்கு நிதர்சனமாக ஒரு முக்யமான விஷயத்தை இங்கே குறிப்பிடுதல் தகும். ஆந்த்ரபாஷையில் "ஆமுக்தமால்யதா" என்னும் அருமையான க்ரந்தம் இவரால் இயற்றப்பெற்றுள்ளதெனின் அது நமக்கு வியப்பைத்தருமென்பது சொல்லவும் வேண்டுமோ? பெரியாழ்வார் பெண்பிள்ளையான ஸ்ரீ ஆண்டாள் விஷயமான ஸ்தோத்ரங்களே அதில் அமைந்துள்ளனவாகும். சூடிக் கொடுத்தாள் என்பதே ஆமுக்தமால்யதா என்பதன் பொருள். அதிலுள்ள சொற்செறிவு பொருளமைதிகளைப் பற்றி ஆந்த்ர அறிஞர் பலரும் புகழ்ந்து பாராட்டுகிறார்கள். ஸ்ரீ ஆண்டாள் திவ்ய ஸூக்திகளின் அருமை பெருமைகளும், தமிழ்நாட்டின் சிறப்புகளும், நம்மாழ்வார், ஆளவந்தார், உடையவர், வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள்,

கருத்து. அவருடைய கவிகளில் ஓரொன்றே அமையுமென்று உணர்த்துதற்கு 'கவி' என ஒருமையாற் கூறினார். கம்பர் இராம பக்தியிற் சிறந்தவரென்பதும், அதுபற்றி அவர் ஆழ்வாரென அழைக்கப் பெற்றா ரென்பதும் இச்செய்யுளால் குறிக்கப்படுதல் காணலாம்.

இங்ஙனம் கம்பர் மேற்கொண்டிருந்த தீவிரமான இராமபக்தியே அவர் ஸ்ரீராமாயணத்தைத் தலைக்கட்டியருளுதற்குக்காரணமாய் அமைந்தது. இவ்வுண்மை அவரது வாய்மொழியினின்றே வெளியாகின்றது.

**"ஓசைபெற்றுயர்பாற்கடலுற்றொரு**
**பூசைமுற்றவுநக்குபுக்கென**
**ஆசைபற்றியறையலுற்றேன்மற்றிக்**
**காசில்கொற்றத்திராமன்கதையரோ"**

இது கம்பநாட்டாழ்வார் அவையடக்கமாகக் கூறிக்கொண்ட செய்யுள்களில் ஒன்று. அவையடக்கமாவது நைச்யாநுஸந்தாநம். இப்பாட்டின் பொருள் வருமாறு: மிகுந்த உத்கோஷத்துடன் உயர்ந்து விளங்கும் க்ஷீராப்தியை அடைந்து ஒரு பூனை தன் நாவினால் முழுவதும் நக்கிப் பருகுவதற்கு உத்யோகித்தாற்போல, குற்றமற்ற வெற்றியுடன் விளங்கும் ஸ்ரீ ராமருடைய நற்சரிதத்தை நானும் என்னுடைய ஆசை காரணமாகப்' பேசத் தொடங்கிவிட்டேன் என்பதாம். இங்குள்ள 'ஆசை' யென்னும் பதத்திற்கு பக்தியென்றே அறிஞர்கள் பொருளுரைக்கிறார்கள். அதற்கநுகுணமாகவே கம்பர் மற்றோரிடத்திலும், "**அன்பெனும் நறவம் மாந்தி, மூங்கையான் பேசலுற்றானென்னயான் மொழியலுற்றேன்**" என்று சொல்லியிருக்கிறார். பெருமாளிடத்துக் குற்றமின்மையும் வெற்றியுடைமையுமே அவரிடம் பக்தியை மிகுவித்தற்கு ஏதுவாயின என்பது தோன்ற, '**காசில் கொற்றத்திராமன் கதை**' யெனப்பட்டது. பெருமாளுக்குக் குற்றமின்மை யானது, குணங்களாற் குறைவின்றி நிறைந்திருத்தல், வெற்றியுடைமை யாவது, ஆச்ரிதர் விஷயத்தில் அநிஷ்டநிரசநமும் இஷ்ட ப்ராப்தியுமாவனவற்றைக் கடைக்கூட்டுவித்தல். இனி காசின்மையைக் கொற்றத்திற்கு அடையாக்குதலும் ஒன்று. அப்பொழுது குற்றமில்லாத வெற்றியாவது, "**பேராண்மையென்ப தறுகண் ஒன்றுற்றக்கால், ஊராண்மை மற்றதனெஃகு**" என்ற **திருக்குறளின்படி** தன்னைப் பகைத்தவனுக்கும் உபகாரம் செய்கிற தோல்வியில்லாத வீரம் எனக் கொள்ள வேண்டும். பெருமாள் அங்ஙனம் உபகாரம் செய்ததை, "இன்று போய்ப்

அஹோபிலம்ஜீயர் என்ற ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியர்களின் அவதார மஹிமைகளும் அந்த க்ரந்தத்தில் அழகாகக் கூறப்பட்டுள்ளனவென்று தெரிகிறது.

இதுவரையிலும் சொல்லிய விஷயங்களால், க்ருஷ்ணதேவராயரென்னும் அரசர்பெருமான் ஒருசிறந்த வைஷ்ணவாபிமானியென்பதும், அவர்தாமே கவியாக இருந்ததோடுங் கூட, பல கவிசிரேஷ்டரை ஆதரித்துவந்தாரென்பதும், திவ்யப்ரபந்த முதலான ஸம்ப்ரதாய சாஸ்த்ரங்களில் அவருக்கு மிகுதியும் ஈடுபாடுண்டென்பதும், த்ராவிட பாஷையை அதிகமாக கௌரவித்தவர்களில் அவர் ஒருவரென்பதும் பிறவும் ஒருவாறு விளங்குவனவாம்.

---

போர்க்கு நாளைவா'' என அவர் இலங்கையர்வேந்தனுக்குக் கூறிவிடுத்ததனால் அறியலாம். இவ்விரு விசேஷணங்களையும் கதையோடு பொருத்தியுரைப்பினும் அமையும். கதைக்குக் கொற்றமாவது, ஸர்வாபீஷ்டபலப்ரதத்வம். பூனை பருகப் புகுந்த காரணத்தால் பாற்கடலுக்கு ஒரு பழுதுண்டாகாதவாறு போல, தாம் கவியியற்றப் புகுந்த காரணத்தால் இராமன் கதைக்கும் ஓர் இழுக்கில்லையென்பதும் இதனால் குறிப்பித்தவாறாயிற்று.

அது நிற்க, இராமனுடைய கல்யாண குணங்களில் ஆழ்ந்து இன்புறுதல் கம்பநாட்டாழ்வாருக்கு நிரந்தர அநுபவமாகவே செல்லாநின்றது. ''**கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ**'' என்றபடி தம் கரணத்ரயத்தாலும் ஸ்ரீராமனையே வழிபடுவதல்லாமல் கம்பர் வேறொன்றையும் கருதாதவராயிருந்தனர். இங்ஙனமாக அவருக்கெய்திய மானஸாநுபவத்தின் பெருமையைக் கண்ணுற்ற பிறரெல்லாம், ''**அத்தா அரியே என்றழைப்பன் நான் என்னைப் பித்தா என்பர்**'' என்று ஆழ்வார் பணித்தமைக்கேற்ப, அவரைப் பித்தரென்றும், பேதையென்றும், பக்தரென்றும் பலவாறு பேசத் தலைப்பட்டனர் போலும். அதுபற்றியே அவர், ''**பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ**''என அவையடக்கம் கூறினரோ என்றும் அநுமானிக்க இடமுண்டாகிறது.

அப்பாட்டு முழுவதும் வருமாறு:

**''முத்தமிழ்த்துறையின் முறைபோகிய**
**உத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவென்**
**பித்தர்சொன்னவும் பேதையர் சொன்னவும்**
**பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ''**

இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழின் பாகுபாடுணர்ந்த உத்தமக் கவிகட்கு நான் உணர்த்துவது ஒன்றுண்டு; பித்தர், பேதையர், பக்தர் என்னும் இவர்கள் சொல்லும் வார்த்தைகளில் குற்றங்குறைகள் ஆராயத்தக்கன அல்லவே? என்பது இதன் பொழிப்புரை. இதனால், கம்பர் தமக்குப் பித்தர் என்றும் பேதையென்றும் பக்தர் என்றும் ப்ரஸித்தி யுண்டென்பதை உடன்பட்டுக் கொண்டு, தமிழ்ப்புலவர்களுக்கு அதனையே

தக்க சமாதானமாகக் கூறிவிடுத்தனரென்பது உய்த்துணரத்தக்கது. ''எம்பிரானுக் கெழுமையும் பித்தனே'' ''பேதையேன் பேதையேனே'' என்னும் பெரியார் திருவாக்குக்களும் இங்கு நோக்கற்பாலன. எம்பெருமான் விஷயத்தில் பித்தாவது, அவன் பொருட்டு எழுந்த காதல் அளவு கடத்தலால் ஏனை உலகியலான அறிவை அழியச் செய்வது, பேதமையாவது, அவன் விஷயத்திலேயே உள்ளம் ஒடுங்கிவிடுதலால் வேறுள்ள பொருள்களில் விவேகமிழக்கச் செய்வது. பக்தியாவது, எல்லாம் அவனென்று இடையீடின்றி அன்பு செலுத்தி இன்புறச் செய்வது, இவை மூன்று தன்மையும் கம்பரிடம் ஒருங்கமைந்திருந்தன வென்பது கருத்து. இவ்வாறன்றி அவ்வடிகளுக்கு வேறு வகையாகவும் பொருள் செய்யலாம். அப்பொழுது பித்தர், பேதையர், பத்தர் என்பனவற்றைத் தனித்தனி பிரித்து, அவரவர்கள் சொல்லும் வார்த்தைகள் ஆராயத்தக்கன அல்ல என்று முடிக்க வேண்டும். ஆனாலும் அது அவ்வளவு ஸ்வரஸமானதன்று. எங்ஙனமாயினும், கம்பர் ஒரு சிறந்த பக்தி நிஷ்டராய் விளங்கினவரென்பது இரண்டு பக்ஷத்திலும் நிராக்ஷேபமாய் முடிந்தது.

அன்றியும், பரிபூர்ணமான பகவதநுபவம் கைவந்தவரே கம்பநாட்டாழ்வார் என்னும் இவ்வுண்மையை மற்றொரு ப்ரபல ப்ரமாண்யமும் நன்றாக வற்புறுத்துகிறது.

**''அம்பராவணிசடை அரனயன்முதல்**
**உம்பரான் முனிவரால்யோகரால்உயர்**
**இம்பரால்பிணிக்கரும் இராமவேழம்சேர்**
**கம்பராம்புலவரைக்கருத்திருத்துவாம்''**

என்னும் இச் செய்யுளும் இராமாயணத்தனியன்களுள் ஒன்று. இதன்பொருள்: சிவன் அயன் முதலான தேவர்களும், மஹரிஷிகளும், யோகியர்களும், இவ்வுலகத்து உயர்ந்தவர்களும் ஆகிய எத்தகையோரும் எய்துதற்கரிய இராமனென்னும் மத்தகஜமானது தன்னடையே வந்து கட்டுண்டு நிற்கும் ஒரு கம்பமாய் விளங்குகின்ற கம்பரென்னும் தெய்வப் புலவரைக் கருத்தினுள் வைத்து வாழ்த்துவோமாக: என்பதாம். இதனுள் கம்பரைக் கட்டுத்தறியாகவும் இராமனை வேழமாகவும் உருவகம் செய்திருத்தல் கண்டுகொள்க. இஃது ஏகதேச ரூபகம். நிச்சலமான பக்தியுடையவரென்பது தோன்ற கம்பரைத் தறியாக உரைக்கப்பட்டது. கம்பர் என்கிற அவருடைய பெயரிலிருந்தே அப்பொருள் த்வநிக்குமாறு இப்

பாடலில் அமைந்திருக்கும் நயமும் அறிந்து மகிழற்பாலது. யானைகட்டுந்தறியைக் 'கம்பம்' என வழங்குதல் 'கம்பநெடுங்களியானை' என்பதனாலும் அறியலாகும். கம்பராகிய தறியை நினைந்து உபாசிப்பவர்களுக்கு, அதனைவிட்டு அகலாத இராமனாகிய வேழமும் நெஞ்சினுள் நீங்காது சிக்குண்டு நிற்கும் என்பது கருத்தாகக் கொள்க.

இனி இராமனை யானையாக உரைப்பதிலும் பொருட்பொருத்தம் மிகுதியும் உண்டு. இங்ஙனமே 'இருகை வேழத்திராகவன்' என்றதையும் நோக்குக. யானை பிறர் எவர்க்கும் அடங்காத பெருமையும் பாகனுக்கு வசமாய்க் கட்டுண்டு நிற்கும் எளிமையும் உடையது: எம்பெருமான் **''பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்''** என்னும்படி பரத்வம், ஸௌலப்யம் ஆகிய இரண்டு குணங்களும் ஒருங்குடையவன். யானை தனக்கு உகவாதாரைக்கொலைபுரிந்தல்லது கோபந்தணியாது. எம்பெருமான் தன்திருவருள் பெறாத விரோதிகளை நிரஸித்தல்லது விடுவதில்லை. யானை எப்பொழுதும் ஓர் அபூர்வ வஸ்துவாய் பார்க்கப் பார்க்கப் பரமாநந்தமளிக்கும்: எம்பெருமான் **''அப்பொழுதைக் கப்பொழுதென் ஆராவமுதமே''** என்னும்படி எப்பொழுதும் அநுபாவ்யனாகவே இருப்பன். யானை தன்னைக் கட்டுவதற்குத் தானே கயிறு கொடுக்கும்: எம்பெருமான் **''எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால்''** என்கிறபடி பக்தியாகிய கயிற்றைத் தானே தந்தருள்வன், யானை பாகனநுமதியின்றித் தன் பக்கல் வருபவர்களைத் தள்ளிவிடும்: எம்பெருமான் **''வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து''** என்கிறபடியே பாகவதரை முன்னிட்டுப் புகாதவர்களை அங்கீகரித்தருளான். யானையின்மீது ஏற வேண்டுமவர்கள் அதன்காலைப் பற்றியே ஏற வேண்டும். எம்பெருமானை அடைய வேண்டியவர்களும் அவன் திருவடிகளில் ஆச்ரயித்தே அடைய வேண்டும். இவ்வாறே மற்றும் பல ஒப்புமை நயங்கள் இவ்விஷயத்தில் உரைப்பதுண்டு.

அவையெல்லாம் ஒரு புறமிருக்க; கம்பநாட்டாழ்வாருடைய பக்தியின் பெருமையும் அவர்க்குண்டான பகவத்கடாக்ஷத்தின் அருமையும் மேற்கண்ட தனியன் பாசுரத்தினால் விசதமாய் விளங்கிவிட்டன. ஸாக்ஷாத் ஸர்வேச்வரனான ஸ்ரீராமனையே அவர் தமக்கு ஸ்வாதீனமாகப் பெற்றவரென்றால், ஆழ்வார் என்ற சிறப்புப் பெயர் அவர்க்கு வழங்கும் காரணம் எளிதின் அறியப்படுமன்றோ? இச் சிறப்புப் பற்றியே அக்காலத்து ஆன்றோர்கள் அவரை ஒரு தெய்வப் புலவரென்று கொண்டாடுவாராயினர்.

அது மட்டுமன்று, அவரிடம் அவர்கள் ஆசார்ய ப்ரதிபத்தியும் பண்ணிப் போந்தார்களென்பது குற்றமாகாது. **''கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம்''** என்றதன் பொருள் ஆழ்ந்து சிந்திக்கற்பாலதன்றோ?

இங்ஙனம் கம்பருடைய தெய்வப் புலமையை நன்குமதித்ததேயன்றி, அவரது கழலிணைகளில் ஆராத பேரன்பு பூண்டவர்களும் அக்காலத்துப் பலரிருந்தன ரென்பதை மற்றுமுள்ள தனியன்கள் கொண்டு நிரூபிக்கலாகும். **''கம்பநாடன் கழல் தலையிற் கொள்வோம் ''** என்றார் அவர்களில் ஒருவர். மற்றொருவர், **''தெய்வப்புலமைக் கம்பநாட்டாழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க் கியாது மரியதன்றே''** என்றார். **''மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்''** என்று கூறினார் வேறொருபுலவர். பின்னும் ஒரு பெரியார் **''கம்பன் செங்கமலபாதம் கருத்துற இருத்துவோமே''** எனப் பேசி இன்புறுவாராயினர். இவற்றால், கம்பரது திவ்யஜ்ஞானம்பற்றி அவரிடம் முன்னோர்கள் எவ்வளவாக ஈடுபட்டிருந்தனரென்பது இனிது விளங்குமன்றோ?

உலகத்திற் புலவர்களாய்த் தோன்றிப் புகழ்படைத்து, சான்றோர்களாற் சாற்றுக்கவியும் இடப்பட்டார் எத்துணையோ பலர் இருந்தனர்; என்றாலும், இங்ஙனமாகக் கம்பரைப் போலப் பெருமதிப்புடன் பாராட்டப் பெற்றவர்கள் மிகவும் அரியரென்றே சொல்லலாம். கேவலம் ஒரு மஹாகவி என்ற மட்டில் நில்லாது நேரே பகவத் ஸம்பந்தமும் பெற்ற ஏற்றம் அவருக்கு உரியதாயிருக்கும்பொழுது, மற்றைக் கவிவாணரோடு சேர்த்து அவரையும் ஒருவராக மதித்துவிடுதல் குற்றமாமென்பது சொல்லவும் வேண்டுமோ?

இவ்வாறாக அவர் ஏற்றமுடையராய் விளங்கிய தன்மையைக் கருதியே ஆழ்வார் நூற்றந்தாதித் தனியனிலும்,

**''தேவிற்சிறந்த திருமாற்குத் தக்கதெய்வக்கவிஞன்**
**பாவிற்சிறந்த திருவாய்மொழிபகர்பண்டிதனே**
**நாவிற்சிறந்த அம்மாறற்குத்தக்கநன்னாவலவன்**
**பூவிற்சிறந்த ஆழ்வான்கம்பநாட்டுப் புலமையனே''**

என முன்னோர்கள் அவர் தகுதியை வியந்து கொண்டாடியுள்ளனர். தேவதேவனான திருமாலின் வைபவத்திற்குப் பொருந்துமாறு கவி செய்யவல்லவர் திவ்யகவியாய் விளங்கிய ஸ்ரீசடகோபர் ஒருவரே; அந்தச்

சடகோபருடைய வைபவத்திற்குப் பொருந்தியவாறு கவி செய்யவல்லவரும் தெய்வப்புலவர் கம்பநாட்டாழ்வாரே; என்பது இதன் கருத்து. இதனால், பெருமாளோடு ஆழ்வாருக்குள்ள சம்பந்தம் போன்றது ஆழ்வாரோடு கம்பருக்குள்ள சம்பந்தம் என்று அவரைச் சிறப்பித்துக் கூறியதாயிற்று. இது நிற்க.

கம்பநாட்டாழ்வாருடைய கவிகளை நம் பூர்வாசார்யர்களும் ப்ராமாணிகங்களென்று ஆதரித்துப் போருவார்கள். அதனாலும் அவர் பெருமை நன்குணரலாகும். ஆகையால் அது விஷயமாகச் சிலவற்றை இங்கு உதஹரித்து இந்தவ்யாசத்தை ஒருவாறு பூர்த்திசெய்வேன்.

**''சுரக்குந்திருவும்''** என்னும் இராமாநுஜநூற்றந்தாதிப் பாசுர (43) வ்யாக்யாநத்தில், பெரிய ஜீயர், **''என் முடியாதெனக்கியாதேயரியது'' என்று ஆழ்வார்நூற்றந்தாதி (29)யிலும் இப்படி ப்ரயோகிக்கப்பட்டதிறே; ஆகையாலே மஹாகவிப்ரயோகங்கள் இப்படி வரக் கடவதாயிருக்கும்''** என்று கம்பர்வாக்கையெடுத்துக் காட்டி மஹாகவிப்ரயோகமென்று அருளிச் செய்திருக்கிறார்.

**''மஞ்சுலாஞ்சோலை''** என்னும் பெரிய திருமொழிப்பாசுர (1-1-10) வ்யாக்யாநத்தில், பெரியவாச்சான்பிள்ளை, **"ஜலத்தினுடைய ரஸ்யதையாலே 'ஈக்கள் வண்டொடுமொய்ப்ப' என்று ஆற்றுவரவுகளிலே சொல்லுவர்களாயிற்றுத் தமிழர்''** என அருளிச் செய்திருக்கிறார். இந்த மேற்கோள் **கம்பராமாயணம்**, ஆற்றுப்படலம், 10-செய்யுளைக் குறிக்கும்.

**''காமுற்றகையறவோ''** டென்னும் **திருவாய்மொழி** (2-1-3) ஈட்டில், நம்பிள்ளை, **''செந்தீயுண்டு தேக்கிட்டதே என்னக்கடவதிறே''** என்று ஸாதித்தருளினார். ஜீயர் அரும்பதத்தில், **''வயிறு நிறைய உண்டு என்றதுக்கு ஸம்வாதம் செந்தீயித்யாதி, கம்பநாடகத்திலே''** என்று விவரணம் உரைக்கப்பட்டுள்ளது. அது **கம்பராமாயணம்**, இலங்கையெரியூட்டிய படலம், 46-செய்யுளைத் திருவுள்ளம்பற்றியதாகும். அச்செய்யுள் வருமாறு:

**"என்று கொல்குரங்கன்ன திவ்வலியுனதிலங்கை**
**நின்றுவெந்துமாநீறெழுகின்றது நெருப்புத்**
**தின்றுதேக்கிடுகின்றது தேவர்கள் சிரிப்பார்**
**நன்றுநன்று போர்வலியென இராவணன்நக்கான்"** என்பது.

''நின்றவாறு மிருந்தவாறும்'' (5-10-6) ''ஞாலத்தூடேநடந்து''
3) என்னும் திருவாய்மொழிப் பாசுரங்களின் ஈட்டிலும் ''**கருணையெ**
**கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்ததே**'' என அவர் அருளிச் செய்
கின்றனர். அது **கம்பராமாயணம்**, வருணனைவழிவேண்டுபடல
செய்யுளில் ''**கருணையங் கடல் கிடந்தனன் கருங்கடல் நோக்கி**''
வந்துள்ளது.

''**வலையுளகப்படுத்து**'' என்னும் **திருவாய்மொழி** (5
வ்யாக்யாநத்தின் ஜீயர் அரும்பதத்தில், ''**தலைமகள் தலையாலே வண**
என்றதுக்கு ''**தீவினைதீர்வரம், வேண்டினாள்தொழு**
**விளம்புவாய்**'' என்று கம்பனும் ''**தெய்வந்தொழாள்**
**நற்றொழுதெழுவாள்**'' என்று வள்ளுவனும் சொன்னதை ஸம்வாத
கண்டுகொள்வது'' என அருளிச் செய்யப்பட்டது. இங்கே
**கம்பராமாயணமேற்கோள்**, சூளாமணிப்படலத்தின் 35-செய்யு
குறிக்கின்றது.

அவை நிற்க; இதுவரை சொல்லிய விஷயங்களால் கல்வியிற்
கம்பநாட்டாழ்வார் வரலாற்றை உள்ளவாறு அறிதற்குக் கருவிய
இன்னவையென்பதும், அவர் பெயர்க்காரணமும் வரலாற்றுச் சுருக்
இவையென்பதும், அவர் கவிச்சக்ரவர்த்தியாதலேயன்றி பக்திநிஷ்
விளங்கிய பாகவதோத்தமரென்பதும், பகவத் ப்ரஸாதத்தால் தெ
புலமை படைத்தவரென்பதும், ஆன்றோர்கள் அவரிடம் விசேஷப்ரதி
பண்ணிப்போந்தனரென்பதும், நம்பூர்வாசார்யர்களும் அவர் கவி
ஆதரவுடன் அங்கீகரித்தருளினரென்பதும், இக்காரணங்க
**இராமாயணமென்னும்** தெய்வவான்பனுவலைச் செவ்விதின் இயற்
அவரிடம் வக்த்ருவைலக்ஷண்யம் பூர்ணமாகப் பொருந்தியிருந்
வெளிப்படையென்பதும் ஒருவகையாக உணரலாவன.

---

# பெருமாள் வருணனுக்கு அருள்புரிந்தது

**கால்பிடித்தான் முன்னர்க் கடலரையன் தோன்றிலனால்**
**கோல்விடுத்தான் ஆங்கே குறுகினான் -மேலெடுத்த**
**சீற்றமிலன் நாணமுளன் செங்கண்மால் வெங்கணைக்கு**
**மாற்றலர்யார் சொல்லென்றான் மற்று.**

ஸீதாபிராட்டியைச் சிறைமீட்டற்கு இலங்கைசெல்லக்கருதின பெருமாள் வானரப்படையுடன் கடற்கரையடைந்தார். அங்கே தம்மிடம் அடைக்கலம்புகுந்த விபீஷணாழ்வானால் இலங்கையின் திறம் எல்லாவற்றையும் கேட்டு அறிந்துகொண்டார். அதன் பின்னர் அவர், ஸமுத்ரத்தைக்கழிந்து அக்கரை சேர்தற்கு உபாயம் யாதென ஆராய்ந்தார்.

அப்பொழுது விபீஷணாழ்வான் ''**ஆத்மாநம்மாநுஷம் மந்யே**'' என்று கரந்துவைத்த நும்திருவுருவத்தை இக் கடலரையன் அறியாதவனல்லன்; அன்றியும் நும் குலமுதற்றலைவரான ஸகரராலே இவ்வலைகடல் அகன்று பரவலுற்றது; அந்த நன்றியையும் அவன் மறவான்; வேண்டினவர்க்கு வேண்டின பலன்களைக் கொடுக்கும் இம் மாக்கடல் நும் படைசெல்லுதற்கும் வழியளிக்குமென்பதிற் சந்தேகமில்லை; ஆதலால் தேவரீர் வருணனை இரந்து வழிவேண்டுவீராக என்று கூறினன். பெருமாளும் அதனை நன்றென்றுகொண்டு உடன்படலாயினர்.

**"தருணமங்கையைமீட்பதோர்நெறிதருகென்னும்**
**பொருள்நயந்துநன்னூனெறியடுக்கியபுல்லில்**
**கருணையங்கடல்கிடந்தனன் கருங்கடல்நோக்கி**
**வருணமந்திரம்எண்ணினன்விதிமுறைவணங்கி"**

ஸமுத்ரராஜனிடம் சரணாகதிசெய்தற்கொருப்பட்ட பெருமாள் சாஸ்த்ரோக்தமாக தர்ப்பைப் புல்லைப் பரப்பினார். வரன்முறையாக வணங்கி வருண மந்த்ரத்தை வாயினாற்சொல்லி எண்ணினார். கருங்கடலை நோக்கிக் கருணைக்கடல் கிடந்தது என்னுமாறு அவர் அங்கே பள்ளிகொண்டெழுந்

ருளியிருந்து வருணனை வழிபட்டார்.

அப்பொழுது ஒருநாளினளவு ஓர் ஊழியினளவாய் நீண்டது. அத்தகைய நாட்கள் ஏழு சென்ற பின்னரும் வருணன் வந்து, தோன்றினானில்லை. அதனால், நீரில் நெருப்பு முளைத்ததென்னப் பெருமாள் திருவுளத்திற் சீற்றம் பிறந்தது. தாமரைக்கண்கள் செந்நிறம் பிக்கன. நாணேற்றின விற்போற் புருவங்கள் வளைந்தன. அவர் கனலெழ யிர்த்துப் புகையுக நகைத்தார்.

''இந்த ஜடப்ரக்ருதியான கடல் தன் ஜலஸமர்த்தியால் கர்வங் கொண்டது. வழி உண்டு, இல்லை என்று ஒரு வார்த்தையும் ஈந்திலது. ஆயினும் ஒளித்துநிற்பது இல்லையென்று மறுப்பதேயாகும். ஒன்றாலொரு றையுமின்றி எல்லாப் பெருமையும் உடையரானாலும், ஒருவர் ஒரு பொருளைப் பிறரிடம் சென்று யாசித்தால் அவர் தம் சிறுமையினின்று ர்வதேயில்லை. மனைவியையிழந்த நான் இப்பொழுது மதிப்பையும் ழந்தேன். வில்லாண்மையின்றியே இராவணன் என் இல்லாளைக் வர்ந்தான். அதற்கு யான் ஒன்றும் செய்ய இயலாமையால் என்னை ஒரு ரம் நீங்கிய மனிசனென்று இவ்வேலை இகழ்ந்திட்டது. என் பொருட்டு அகத்தில் ஈரமில்லாதசெயல்புரிந்த இதனைப் புறத்திலும் ஈரமில்லாததாகவே ான் புலர்த்திவிடுவேன். மேல்வரும் ஏதத்திற்கு அஞ்சி நான் இதனிடம் ரத்தலைமேற்கொண்டேனன்றி வேறில்லை. ஆயினும் அதுவே என்னை ளியனென்று எள்ளுதற்குக் காரணமாயமைந்தது. திரைக் கடல் ஏழையும் ரைக்கணத்திற் றீயுமாறு காண்பேன். பூதங்களைந்தும் என் பாதம்பணிய தமின்றி என் படைஞர் இக் குட்டத்தைக் கடப்பாராக. காழுங்கனலேயானாலும் அது குறுகியுள்ள தன்மையைக் கண்டவர்கள் சாமற்றொட்டு அதனை அவித்தற்கு முற்படுவர். அஃதேபோல் ஒருவர் டிவத்தின் சிறுமை கண்டவர்கள், அவர் காரியத்தின் பருமைகண்டாலல்லது உண்மைத்தன்மை தெளியாராய், அவரை றபரென்றே அவ மதிப்பர். இஃது உலகத்தின் இயற்கை, காய்கனி நுகர்ந்து ட்டிலே திரியும் மானிடனென்றெண்ணி என்னை இவ் வாரிதி ஏளனம் சய்தது. இம்மீனுடைக் கடற்பெருமையையும் என் மானுடச் றுதன்மையையும் இப்பொழுதே தேவர்கள் காணத் தெளிவிக்கின்றேன்'' ன்று இவைபோல்வன பலவுஞ்சொல்லி, பெருமாள் தம்இளவலை நோக்கி ல்லும் அம்பும் கொணருமாறு ஏவினர். கண்கள் தீப்பொறி பறக்க வெம்பிய னத்துத் தம்பியும் அவற்றை விரைவினில் தந்தார்.

அப்பொழுது பெருமாளுடைய திருமுகமண்டலம் ப்ரளய காலத்து ஸூர்யன்போல் ஜ்வலித்தது. அந்த ஸூர்யகிரணம்போன்ற பாணங்கள் பலவற்றை அவர் ஸமுத்திரத்திற் செலுத்தினார். அதனால் நெடுங்கடலும் தன் நிலைகுலைந்தது. அதன் நீர்முழுவதும் கொளுகொளுவென்று கொதித்தது. மத்ஸ்யம் முதலான ஜீவராசிகள் மாண்டன. கடலெங்கும் கரிந்து சாம்பலாயிற்று. உப்புவேலையென்னும் பழிப்பு நீங்கி அளக்கர்தான் அப்பு வேலையாய் நிறைந்தது. மற்றும் அப்பொழுது நிகழ்ந்த அதிசயங்கள் மிகப் பல. ஊழியினிறுதியில் நிலத்தையுண்ணுவது நீர், நீரையுண்ணுவது நெருப்பு; என்னும் உண்மைப் பொருள் அந்த சமயத்தில் நிதர்சனமாயிற்று. ஆயினும் உலகமுண்ட பெருவாயரான எம்பெருமானுக்கு இச்செயல்களெல்லாம் ஓர் அருமையுடையனவாகுமோ?

இந்த நிலைமையில் அவருடைய குரங்குப் படைகளுங்கூடக் கைகழன்று ஓடத்தலைப்பட்டன -

**"வள்ளலைப்பாவிகாள் மனிசனென்று கொண்(டு)**
**எள்ளலுற்றறைந்தனம் எண்ணிலாமென**
**வெள்ளிவெண்பற்களைக்கிழித்து விண்ணுறத்**
**துள்ளலுற்றிரிந்தன குரங்குசூழ்ந்தில"**

என்கிறார் கம்பநாட்டாழ்வார். இதன்கருத்து ''ஏ! பாவிகளே! நமக்கு ஸ்வாமியாய் வந்தவரிடம், அவர் பெருமையை அறியாமல், மனிதனென்று உரையாடி நாம் மதிகெட்டவரானோம்'' என்று குரங்குகள் ஒன்றற்கொன்று கூறிக் கொண்டு, தம்வெண்பல்லை வெளிக்காட்டி ஆகாயத்திற்றாவி அகலப்போயின என்பதாம். இஃது ஒருபுறம் நிற்க.

பின்னரும் வருணன் முகங்காட்டாமையால் பெருமான் ப்ரஹ்மாஸ்த்ரம் தொடுத்தார். அதனால் தேவர்கள் திடுக்கிட்டனர். மழைக் குலங்கள் கதறின. வருணனும் வாயுலர்ந்தான். ஆறு, குளம் முதலிய நீர்நிலைகளெல்லாம் அறவே வறண்டன. ஏழ்பெருங்கடலும் எரியத் தொடங்கின. அண்டமுகட்டுக்கப்பால் ஆழியுங்கொதித்தது.

''தோற்றமும் ஒடுக்கமும் தன்னுள்ளேயாக உலகெலாம் ஓம்பும் ஒருதனிப்பொருளை வருணன் தானேயும் உணரான், வெகுளிகண்டும் வாரான், அரக்கரினும் இவனே கொடியன் கொடிய'' னென்று

ஞானியரெல்லாம் வருந்தினர். ''முழு முதற்தெய்வமே முனியப்புக்காற் பிழைக்கும் வழியெங்கே? அந்தோ! குற்றமொன்று மறியாத நமக்கும் இஃது அற்றமாய் முடியுமே,'' என்று சொல்லி, மற்றையபூதங்களும் எல்லாம் வருணனையே வைதன.

அப்பொழுதுதான் வருணன் ஒன்றுமறியான்போல அழுதகண்ணுந் தொழுத கையுமாக வந்து தோற்றஞ்செய்தான். அச்சத்தால் நடுநடுங்கி அபயம் அபயமென்று அரற்றினான். ''**தீயன சிறியோர் செய்தாற் பொறுப்பது பெரியோர் மேற்றே**'' என்று சொல்லிக் கொண்டு பெருமாளுடைய திருவடிகளிற் சரணம் புகுந்தான். பொருள் சேர்ந்த புகழுரைகள் சிலவற்றால் அவன் அவரைப் போற்றலும் செய்தான்.

''எம்பெருமானே! ஆழியும், அனலும், அல்லாதபொருள்களும் என்று உலகத்தில் வேறுவேறு காணப்படுவன எல்லாம் உம்முடைய வடிவமேயாகும். எனக்கென்று வலிமை வேறொன்றுமில்லை. உம்மை மறந்தால் அடியேனுக்கு உய்யுமாறுண்டோ? உலகத்தையெல்லாம் படைத்தலும் காத்தலும் நீரேசெய்கிறீர். அவற்றை அழிக்கக் கருதினால், உமது திருக்கரத்திற் சரம் ஒன்றே அமையுமே. எளியேனை நலிகைக்கு இத்தனையும் வேண்டுமோ? உம்முடைய மஹிமைகள் உமக்கேயும் உணர்வரிய. நாயினுங் கடைப்பட்ட நான் அவற்றை எங்ஙனம் அறிவேன்?'' என்று இவைபோன்ற வசனங்களால் அவன் அவரை ஸ்தோத்ரம்செய்தான்.

இவ்வாறெல்லாம் வருணன் வழிபடுதற்கு முன்னரே, பொங்கியெழுகின்ற பாலிற் புனல்தெளித்தாற்போல, பெருமாளுடைய கோபாக்நி அமர்ந்தது. வருணனிடம் காட்டிய நிக்ரஹம் அநுக்ரஹமாய் முடிந்தது. தாம் முன்பு செய்ததைக் குறித்து அவர் சிறிது லஜ்ஜையும் அடைந்தார். ''நீ சிறிதும் அஞ்ச வேண்டா, நாம் உனக்கு அபயமளித்தோம்'' என்று அவர் அவனைத் தேற்றினார்.

பின்னரும் பெருமாள் வருணனை நோக்கி, ''நாம் நின்னைப் பல கால் வணங்கி இரந்தபொழுது வாராமல், கோபமூண்ட பின்னரே நீ குறுகின காரணம் என்னை?'' என்று விருப்பத்துடன் வினவினர். அதற்கு வருணன் ''எம்பெருமானே! நான் ஏழாவது திரைக்கடலில் மீன்களுடைய போர்த்தொழில் விலக்கப் போயிருந்தேன்;புகுந்ததொன்றும் அறிந்திலேன்'' என மறு மொழி கூறினன்.

அது கேட்ட பெருமாள் மிகவும் இரக்கமுற்று "என்கையின் மீளாத வெம்பகழிக்கு ஓர் இலக்கம் இன்றியமையாதாகும். நின்பகைவர் யார்? சொல்லுவாயாக" என்று இனிதாக இயம்பினர். வருணனும் அதனை நன்றென்று நயந்தான்.

''மருகாந்தாரம் என்பதொரு த்வீபத்தில் கொடிய அரக்கர் பலர் வாழ்கின்றனர்; அவர் தின்னுதலால் உலகத்திற் பலவிடங்கள் பாழாயின; அவர்கள் எனக்கும் தீமைசெய்பவரே யாதலால், நும்கணையை அவ் வெய்யவர் மீது செல்லவிடுக'' என்று அவன் வேண்டிக் கொண்டான். வேண்டினவாறே அவ் வரக்கரனைவரும் ஒருசேர மாண்டனர். பிறகு, ஸமுத்ரராஜன் தலையினாற்றாங்க ஸேதுவென்னுந் திருவணையியற்றி, பெருமாள் தம் வானரப் படையுடன் இலங்கையை எய்தினார்.

பெருமாள் வருணனிடம் புரிந்த அநுக்ரஹத்தின் அருமைதான் என்னை? அவனுக்குத்தாம் தலைவணங்கித் தாழ்ந்து பெருமையளித்தார். அவன் தம்மை உபேக்ஷித்திருந்த குற்றத்தையும் பொறுத்தார். அதன் மேலும் அவர் அவனுடைய விரோதிகளைப் போக்கி ரக்ஷித்தலும் செய்தார். இங்ஙனம் வருணனெய்தின நன்மை மும்மடி சிறந்து விளங்குகின்றது.

கருணையங்கடல் கருங்கடலைநோக்கிக் கிடந்து பேரருள்சுரந்த வரலாறு இது. தன்னை மதியாமல் அவமேகழியும் ஒரு சேதனன் விஷயத்திலும் அவனைத் திருத்திப்பணிகொள்ளுகைக்கு எம்பெருமான் இவ்வளவு க்ருபையும் செய்கிறான், என்பதற்கு இஃது எடுத்துக்காட்டாய் உள்ளது. முதன் முதல் இவனை உயர்த்துகைக்கு அவன் தன் நிலையினைத் தாழ இழித்துக் கொள்ளுகிறான். பின்னரும் அருமையறியாதே விமுகனாய்ப் போரும் இவனை, ஏதேனுமொரு காரணத்தையிட்டுத்தானாகவே அபிமுகனாக்கிக் கொள்ளுகிறான். அதன்மேலும் இவனுடைய பூர்வதோஷத்தை மறந்து, பாபபலனைப் போக்கி, தனக்கு ஆட்கொள்ளவும் செய்கிறான். இவையெல்லாம் பகவானுடைய பரம கருணாகார்யமேயன்றி வேறுண்டோ?

பகவதநுபவப்ரதிபந்தகமான கர்மபலனை எம்பெருமான் சேதனனிடமிருந்து கழிப்பதில் இரண்டுவிதம் உண்டு. ஒன்று, தன் ஸங்கல்பத்தால் அதனை முழுவதும் நாசமாக்குதல். மற்றொன்று, புண்ணியத்தை அநுகூலரிடத்திலும் பாபத்தை ப்ரதிகூலரிடத்திலும்

போக்கிவிடுதல். இவ்விரண்டுவகையிலும், வருணனுக்கு அநுக்ரஹித்ததைப் பிந்தினக்ரமத்திற்கு த்ருஷ்டாந்தமாக நம் பூர்வாசாரியர்கள் அருளிச் செய்தனர். ''பூர்வாகங்களையும் உத்தராகங்களையும், அநுகூலர் விஷயமாகவும், ப்ரதிகூலர் விஷயமாகவும், வருணனைக் குறித்துத் தொடுத்த அம்பை மருகாந்தாரத்திலே விட்டாற்போலே அசல் பிளந்தேறிட்டு'' என வரும் அர்ச்சிராதிரஹஸ்யப்பகுதியை நோக்குக. இதில், பூர்வாகமென்றது. பகவத்விஷயஜ்ஞானம்பிறப்பதற்கு முன்பு செய்த கர்மத்தை, உத்தராகமென்றது, அதற்குப் பின்பு செய்த கர்மத்தை. இவை இரண்டற்குமுரிய புண்யங்களை அநுகூலரிடத்திலும், பாபங்களை ப்ரதிகூலரிடத்திலும் எம்பெருமான் போக்கியருள்வனென்பதாம். அசல் பிளந்து ஏறிடுகையாவது, அந்யத்ரஸங்க்ரமிப்பிக்கை, இது நிற்க.

**வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும்**
**தாங்கடங்கட்கு நல்லனவேசெய்வார்**
**வேங்கடத்துறைவார்க்குநமோவெனல்**
**ஆங்கடமையதுசுமந்தார்கட்கே**

என்னுந் திருவாய்மொழிப் (3-3-6) பாசுரத்திலும் இவ்வர்த்தம் அருளிச் செய்யப்படுகிறது. இதன் கருத்து வேங்கடத்துறைவார்க்கு நம: (எனக்கன்று; அவனுக்கே) என்று சொன்னவர்களுக்கு, பூர்வாகமும் உத்தராகமுமானபாபபலன்களெல்லாம் ருசிக்கும், இது மெய்; என்பதாம். பூர்வாகம் புத்தி பூர்வகமாகச் செய்துகொண்டதாயும், உத்தராகம் ப்ராமாதிகத்தால் வருவதாயுமிருக்கும். இவற்றுள் முன்னையதை ''நஸ்மரத்யபகாராணாம்ஶதமபி'' என்று மறந்தும், பின்னையதை **''அவிஜ்ஞாதாஹிபக்தாநாமாகஸ்ஸு கமலேக்ஷண:''** என்று காணாக்கண்ணிட்டும் எம்பெருமான் தன் பரமக்ருபையாலே க்ஷமித்து விடுகிறான் என்பர்.

இவ்வாறு பாபங்களை அவன் க்ஷமித்தல் மாத்ரமன்றிக்கே, அவற்றை ஆச்ரிதவிரோதிகளான மற்றைப் பாபிகளோடேபோக்கியும் அநுக்ரஹிக் கின்ற திறத்தை, பட்டர் பெரிதும் பாராட்டி அருளிச் செய்ததாக, இத்திருவாய்மொழியீட்டில் ஓர் ஐதிஹ்யம் காட்டப்பட்டுள்ளது. அது, பண்டு தலையில் மயிரின்றிக்கேயிருப்பானொருவன் நெற்பரிமாறா நின்றானாய், அங்கே ஒருவன் சென்று 'மயிரைப் பேணாதே நீர் தனியே நின்று பரிமாறாநின்றீர்' என்ன, ஏன்றான் நடந்த தீ?' என்ன; 'ஒன்றுமில்லை,

கண்டுபோக வந்தேன்' என்ன; 'ஆகிலொரு கோட்டையைக் கொண்டு போகலாகாதோ?' - என்று எடுத்துவிட; அவனத்தைக் கொண்டுவாராநிற்கச்செய்தே எதிரே ஒருவன் வந்து 'இதெங்கே பெற்றது?' என்ன; 'உன்றன் மொட்டைத் தலையன் தந்தான்' என்றானாய், அவனத்தைச் சென்று அங்கே, 'இன்னானும்மை வைதுபோகாநின்றானீ!' என்ன; 'அடா! என் நெல்லையுங்கொண்டு என்னையும் வைது போவதே! என்று தொடர்ந்து வந்தானாய், அவன் புரிந்து பார்த்து, 'ஏன்றான் குழல்கள் அலைய அலைய ஓடிவாராநின்றதீ' என்ன; 'ஒன்றுமில்லை, இன்னமொரு கோட்டை கொண்டுபோகச் சொல்லவந்தேன்' என்றானாம்: அப்படியே கடலைமுகங்காட்டுவித்துக் கொள்ளுகைக்காகக் காலைப்பிடிப்பது, கோலைத் தொடுப்பதாகாநிற்க அவன் வந்து முகங்காட்டினவாறே, 'உனக்கம்புதொடுத்தோம்' என்ன லஜ்ஜித்து, 'உன்விரோதிகளைச்சொல்லு, நாமித்தைவிட' என்றாரிறே என்பதாம்.

இதுவரை சொல்லிய விஷயங்களால், கடலில் வழிவேண்டுதல் வ்யாஜமாக பெருமாள் வருணனுக்கு அருள்புரிந்த பெருமையும், அவ்வாறே ஆச்ரிதர்விஷயத்திலும், 'போயபிழையும் புகுதருவானின்றனவும்' ஆகிய பாபங்களை எம்பெருமான் தன் க்ஷமையினால் நசிப்பிக்கை மாத்ரமல்லாமல். அவற்றை அவர்களுடைய சத்ருக்கள் பக்கல் போக்கியும் அநுக்ரகிக்கின்ற அருமையும் ,ஒருவாறு உணரலாவன. 'இத்தனையன்பரானார்'க்கும் இரங்கியருளும் 'பித்தன்' பெருந்தகைமை முழுவதும் பேசுந்தரத்ததாமோ?

---

# இராமாவதாரம்

இராமாவதாரமென்பது கம்பநாட்டாழ்வார் தாமியற்றிய மாப் பெருங்காப்பியத்துக்கு வழங்கிய பண்டைப் பெரும் பெயர். கற்றுர் பலரும் இதனை நன்கு அறிவர். ஆயினும் அது இக்காலத்துப் பெருவழக்காதலின்றி அருகிவிட்டது. அப்பெயரமைப்பிற் காவியப்புலவர் கருதின உட்கிடையான சிறந்த பொரு ளுண்டு. அவ்வுண்மையைப் புலப்படுத்தி அப்பெயர் வழக்கை மீண்டும் புதுப்பிப்பது கருதிற்று இக்கட்டுரை என்பது.

இராமயணம் என இக்காலத்து மறுபெயர் வழங்கும் அந்நூலுக்கு இராமாவதாரம் என்பதே பழம்பெயர் என்ற மெய்ம்மையை முதன் முதலாக அரிதின் ஆராய்ந்து வெளியிட்ட பெருமை அப்பொழுது செந்தமிழ்ப் பத்திராசிரியராய் விளங்கின. சேது ஸமஸ்தான மஹாவித்வான் ஸ்ரீ ரா. இராகவையங்காரவர்களுக்குரியதாம். இற்றைக்கு ஏறத்தாழ ஐம்பதாண்டு கட்கு முன்னரே செந்தமிழ் பத்திரிகையின் முதற்றொகுதி, பக்கம் 136-ல் ஆராய்ச்சி என்ற தலைப்பின்கீழ் அவர்கள் இதனை எழுதியுள்ளார்கள்.

அப்புத்தகம் பலர்க்கும் இக்காலத்துக் கிடைப்பதரிது. ஆகையால் அவர்கள் பொன்மொழிகளைப் போற்றி மீண்டும் இங்கே தந்துரைத்தல் மிகையாகாது.

கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடர் தாம் சீராமகதையினைச் செந்தமிழ்த் தொடர்நிலைச் செய்யுளாக அமைத்தகாலத்து இந்நூல் இவ்வாறு வழங்குக என இட்டபெயர் இராமாயணம் என்னும் முதனூற்பெயர் அன்று; மேற்குறித்த இராமாவதாரம் என்பதேயாகும். என்னை?

**நடையி னின்றுயர் நாயகன் ற்றேற்றத்தின்**
**இடை நிகழ்ந்த இராமாவ தாரப்பேர்த்**
**தொடை நிரம்பிய தோமறு மாக்கதை**
**சடையன் வெண்ணெய்நல் லூர்வயின் தந்ததே.**

என அவர் தாமே அந்நூற்கு அவ்வாறு பெயர் வழங்குதலான் என்க. நம் மதுரைத் தமிழ்ச்சங்கத்துக்குக் கிடைத்த பழைய பாலகாண்டப் பிரதியொன்றில்.

**இத்த லத்தினு மிராமாவ தாரமே**
**பத்தி செய்து பரிவுடன் கேட்பவர்**
**புத்தி மிக்கரும் புண்ணிய முந்தரும்**
**எத்த லத்து மவனடி யெய்துவார்.**

என் னுஞ் செய்யுளொன்று உள்ளது. அதனுலும் கம்பர் இயற்றிய தொடர் நிலைச்செய்யுட்கு வழங்கிவந்த பெயர் இராமாவதாரமே என்பது நன்று தெளியப்படும்.

தாமிட்ட அவ்விராமாவதாரப் பெயர். இராமபிரானது பிறப் பொன்றே விரிக்கும் நூல் என்னும் பொருள்படவும் நிற்றலான், அங்ஙனம் கொண்டு உலகம் மயங்காமைப் பொருட்டுத் திருமாலினது தசரவதாரங்களுள் ஒன்ருகிய இராமாவதாரத்து நிகழ்ந்த சரிதம்முழுதும் உணர்த்தும் நூல் என்பதே பொருளென்பார், நாயகன்ற்றேற்றத்தி னிடைநிகழ்ந்த விராமாவ தாரப்பேர்... மாக் கதை என்ருர். இவ்வாறு ஒரு பெயர்வழக்குண்மை அறியாது சிலர் இராமாவதாரப் பேர்.... .... மாக்கதை என்பதற்கு இராமாவதாரத்தைக் குறித்த பிரசித்தமான கவித்தொடை நிறைந்த குற்ற மற்ற பெருமைபொருந்திய சரிதம். எனப்பொருள் கூறிப்போந்தார்.

அற்றேல், அப்பெயர் கம்பநாடர்காலத் தன்றி அவர் காலத்துக்குப் பின்னரும் வழங்கப்பட்டுவந்த தென்பதற்கு மேற்கோள் உண்டோ எனின்? உண்டு. தான் எடுத்துக்காட்டும் பாடல்களின் தலைப்பில் அவ்வந்நூற்பெயரை எழுதிவிளக்குவதும், பல அதிகார வடைவுகளையுடையதுமாகிய **புறத்திரட்டு** என்னும் தொகை நூலிலும் கம்பர் இயற்றிய தொடர்நிலைச்செய்யுளினின்றும் பல பாடல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. அங்ஙனம் அவையுள்ள இடங்களிலெல்லாம் **இராமாயணம்** என வேறு பெயராற் குறிக்கப்படாது, **இராமாவதாரம்** என்றே எழுதப்பட்டுள்ளது. அதனுற் **புறத்திரட்டுத்** தொகுத்தார் காலத்து அப்பெயரே வழங்கிவந்தமை நன்கு விளங்கும்.

இங்ஙனம் தந்துரைத்த பெரியார் வாக்கினுல் உண்மையுணர்ந்த பிறகு, அறிஞர் சிலர் **கம்பராமாயணத்தை இராமாவாதாரம்** என்னும் பெயர் கொண்டு வழங்கத்தொடங்கினர். இராமாவதாரச் செய்யுட்பாடாந்தரம் என இச்செந்தமிழில் முன்பு வெளிவந்த கட்டுரைத் தொடராலும் பிறவற்ருலும் இதனை அறியலாம். ஆயினும் **கம்பராமாயணம்** என்றபெயரே வழக்குவலியுடையதாய் இன்றுகாறும் எஞ்சிநிற்பதாயிற்று.

இப்பால், பழைமையும் பெருமையும் வாய்ந்த **புறத்திரட்டு** என்னும் நூல் அச்சாகி வெளிவந்துள்ளது. அது, அப்பொழுது சென்னைச் சருவகலாசாலைத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராயிருந்த திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்களாற் பரிசோதிக்கப் பெற்றது. அப்பரிசோதகர் தம் நுண்ணிய ஆராய்ச்சித் திறம் விளங்க அதற்கொரு நூன்முகம் வரைந்து உதவியுள்ளார்கள். அந்நூன்முகத்தில் இவ்விராமாவதாரத்தைப் பற்றிய குறிப்புப் பின் வருமாறுள்ளது.

**கம்பராமாயணம்** என்ற பிரஸித்த காவியம் **இராமாவதாரம்** என்ற

பெயரால் வழங்கிவந்தமை இக்காலத்தில் யாவரும் அறிவர். ஆனல் **புறத்திரட்டின்** மூலமாகத்தான் இவ்வுண்மை முதன்முதலில் வெளியிடப் பட்டது. இதன்பின்னரே **இராமாவதாரப் பேர்த் தொடைநிரம்பிய தோமறு மாக்கதை** என்று கம்பர் அருளிய வாக்கின் பொருள் நன்குவிளங்கு வதாயிற்று. **புறத்திரட்டுச்** சுருக்கங்களில் **இராமகாதை** என்றபெயர் காணப்படுதலினுல் இப்பெயரானும் பிற்காலத்து இப்பெருங்காப்பியம் வழங்கப்பெற்றதாதல் வேண்டும். இவ்விரண்டுபெயரும் இக்காலத்து வழக்கொழிந்து விட்டன. முதனூலாசிரியர் இட்ட **இராமாயணம்** என்ற பெயரே கம்பரது அரும்பெருநூலுக்கும் பெயராக இப்பொழுது வழங்குகின்றது. கம்பர் இட்டபெயரை நாம் தெரிந்துகொள்ளுதற்குக் கருவியாய் முடிந்தது **புறத்திரட்டேயாகும்.** (அடிக்குறிப்பு:- காஷ்மீரிமொழியில் **ராமாவதாரம்** என்ற பெயரினுல் இராமசரிதம் வழங்கப்படுவது ஈண்டு அறிந்து இன்புறத்தக்கது.)

இவ்வாராய்ச்சிக்குறிப்புக் கம்பநாட்டாழ்வார் தம் காப்பியத்துக்குத் தாம் சூட்டிய வழங்கிய திருப்பெயர் **இராமாவதாரம்** என்பதே என மலையிலக்காக நிலைநிறுத்துகின்றது. இனி அப் பெயர் வழக்கின்கண் ஆசிரியர்குறிக்கோளாகி அடங்கிக்கிடந்த பெறலரும் பொருணயம் என்னையென்பது ஆராயப்படும்

முதனூலான **வான்மீகிராமாயணத்துக்கும்** அதனைப் பெரிதும் அடியொற்றிச்செல்லும் **கம்பராமாயணத்துக்கும்** இடையே வேற்றுமைகள் இல்லாமலில்லை. இரண்டனையும் கூர்ந்து ஒப்புநோக்குவார்க்கு அவை பலவாதல் தெளிவாய் விளங்கும். அவ் வேறுபாடுகள் எல்லாவற்றினும் சிறந்து வெள்ளிடைமலையென விளங்கி முதன்மையானதொன்று இங்கு மிகவும்போற்றிக் குறிக்கொள்ளத்தக்கது.

வான்மீகிமுனிவர் தம் நாயகனுன இராமபிரானிடம் கடவுட்டன்மை கீழ்ப்பட மானிடத்தன்மையே மேற்படுமாறு இதிகாசத்தை இயற்றிச்சென்ருர். **ஆத்மாநம் மாநுஷம் மந்யே** என்பது அவர் திருவாக்கு என்ப, கம்பநாட்டாழ்வார் அவ்வாறன்றி, தம் நாயகனுகன இராமபிரானிடம் மானிடத்தம்மை கீழ்ப்பட்டு மறைந்து நிற்ப, கடவுட்டன்மையே மிகமிக மேற்பட்டு விஞ்சித்தோன்றுமாறு காப்பியம்புனேந்து முற்றுவித்தார்.

எனவே சிலேயினு லிங்கைசெற்ற தேவனுன இராமபிரான் இவ் விருவேறு ஞானியர்க்கும் அவரவர் அகக்கண்முன்னே காட்சியளித்துக் காப்பியம் புனேவித்துக்கொண்டது, இங்ஙனம் இருவேறு அடிப்படைக் காரணங்களுடையது. இவ்வுண்மையே இங்கு மிகவும் போற்றிக் குறிக்கொள்ளதக்கதாம்.

இவ்வாறு திருமாலவதாரத்தின் மெய்யநுபவம் கம்பருக்குச் கைவந்த காரணத்தாலே, கம்பநாட்டாழ்வார் என அவர் ஆன்ருேர் பாராட்டுப் பெறுவாராயினர். தெய்வபத்தியில் ஆழ்ந்து திளேத்த அநுபவமுடைய பெரியார்களே ஆழ்வார் என்றல் பண்டையோர் மரபு.

**இராவணன்மேல் அம்புநாட்டாழ்வா னடிபணியு மமாதித்தன், கம்பநாட்ட- டாழ்வான்** எனவும் **தெய்வப்புலமைமக் கம்பநாட்டாழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க் கியாது மரியதன்றே,** என்வும் வழங்கும் தனிப்பாடற் பகுதிகள் இதற்குச் சான்றுபகர்கின்றன.

அன்றியும், **கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம்** என்றும் **கம்ப நாடன் கழல்தலேயிற் கொள்வாம்** என்றும், **மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்** என்றும் புலவர்கள் புகழ்ந்து போற்றியதெல்லாம்

கம்பருக்கு ஏய்திய கடவுட்பேறு கருதியல்லது பிறிதன்று.

இவையாவும் **இராமாவதார** நூலின் சிறப்புப்பாயிரத் தனியன்களாக அன்றுமுதலின்றுவரை ஆன்ரேராட்சிபெற்று நடப்பன. ஆகலின் அவை வெற்றுரைகளென விலக்கத்தகுவன அல்ல. இது நிற்க.

அவதார மெய்பொருளுணர்த்தலாகிய அடிப்படையிலேயே கம்பர் காப்பியமியற்றினரென்பது முன்னரே கூறிப்போந்ததாம். இனி இவ்வுண்மை **இராமாவதார** நூலின்கண் எவ்வளவாக விவரிக்கப்பட்டுள்ளதென்பது ஒருசிறிது ஆராயத்தகும். அது முற்றச் சொல்லி முடிவுபோகாதன்றே?

வான்மீகத்திலில்லாத **இரணியன்வதைப்படலத்தைக்** கம்பர் தம் காப்பியத்துப் புதுவதாகப் புனைந்துரைத்தது உலகறிந்த உண்மை. இருநூல்களிடையும் காணப்படும் மாறுபாடில்லாத வேறுபாடுகள் பலவற்றுள்ளும் இது முதன்மைவாய்ந்தது. கம்பர் இவ்வேறுபாடுகொண்ட கருத்து, திருமாலவதாரமே இராமபிரான் என்ற மெய்ப்பொருள் வற்புறுத்தலன்றிப் பிறிதன்றும்.

இன்னும் **திருவவதாரப்படலம், பரசுராமப்படலம், சரபங்கர் பிறப்புநீங்குபடலம், வருணனை வழிவேண்டுபடலம், நாகபாசப்படலம்** முதலியவிடங்களிலும் இவ்வுண்மை வெளிப்பட்டு நிற்கும். அன்றியும் வசிட்டர், பரத்துவாசர், அகத்தியர், கவந்தன், விராதன், வாலி, கும்பகருணன், இந்திரசித்தன், வீடணன் முதலானோர் வாய்மொழிகளும் தெள்ளத்தெளிய இராமனுடைய பரத்துவநிலையை விரித்துரைப்பனவாய் விளங்குகின்றன.

அவ் விராமாவதாரப் பாடற்பகுதிகள் பயில்வோரைப் பேரின்ப வெள்ளத்து மூழ்குவிக்க வல்லன. அவற்றில் இரண்டனை மட்டும் இங்கு எடுத்துக்காட்டுவேன்.

கங்கைக்கரையிற் றபோதனர் பெற்ற பேரின்ப அநுபவத்தைக் கம்பர் கட்டுரைக்கும் கற்பனை இது :-

**பெண்ணி னேக்குஞ் சுவையிற் பிறர்பிறர்க்**
**கெண்ணி நோக்கி யியம்பரு மின்பத்தைப்**
**பண்ணி னேக்கும் பார்வமு தைப்பசுங்**
**கண்ணி னேக்கின ருள்ளங் களிக்கின்றார்** **(கங்கை, 11)**

**இரைத்தமறை நாலினொ டியைந்தபிற யாவும்**
**நிரைத்தநெடு ஞானநிமிர் கல்லின்நெடு நாளிட்**
**டுரைத்தும் அயனாலும்அறி யாதபொருள் நேர்நின்**
**றுரைக்குதவு மால்எனும் உணர்ச்சியின் உவப்பான்** **(அகத்,43)**

அகத்தியமுனிவருக்கு வாய்த்த பெறலரும் பேரின்பவருணனை இது.

இங்ஙனமாக அங்கும், இங்கும், விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும், காட்சியளிக்கும் திருமாலின் அருமையும் எளிமையுமான, பரத்வ, ஸௌலப்ய நிலைகள் இரண்டனையும் ஒன்றுசேர்த்து, கவிக் ற்ருகக் கம்பர் ஈடுபட்ட பக்திப்பெரும்பாடல்கள் எத்துணையோ பலவுள. அவை யாவும் இராமாவதாரப் பெருங்காப்பியத்தின் உயிர்நாடி யென்னலாம். ஆழ்ந்த கருத்தமைதிகொண்டு ஆசிரியர் வழங்கின இராமாவதாரம் என்னுங் குறியீட்டின் அரும்பொருள் நயத்தை அள்ளித்தெளிக்கும் பேருரைகளாகவும்

அப்பாடல்களைக் கொள்ளல் தகும்.

**சங்குறை காத்தொரு தனிச்சிலை தரித்தான்**

**கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச் சிலைதடக்கை கொண்ட**

**கொண்டல்**

**தொல்லாழி துயிலாதே துயராழி நெடுங்கடலுட்டுயில்கின்றானே**

**கருங்கடற் பள்ளியுட் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர்**

**அராவணை துறந்துபோந் தயோத்தி யெய்திய விராகவன்**

**அண்டசத் தருந்துயில் துறந்த வையன்**

**அரக்கரைக் கடக்கஆழித் துயில்கடந் தயோத்தி வந்தான்**

என்பன ஒருசில அவற்றிற்கு எடுத்துக்காட்டு.

இங்ஙனம் வாச்சியப்பொருளான இராமன் பெருமையைப் போலவே, வாசகமான இராமநாமத்தின் தெய்வப்பெருமையையும் வெளிப்படுத்துக்காட்டும் இடங்கள் மிகப்பலவுன. அத்தகைய அரிய பாசுரப்பகுதிகளை யெல்லாம் தனியே வேறிடத்தில் விரிவாக விளக்குதல் வேண்டற்பாலதாகும்.

அங்ஙனமாயின் அவ்வவதார மெய்ப்பொருளை ஒரோவிடத்தன்றிப் பன்னிப்பன்னிப் பலகாற்பாடுவதென்னை? அது கூறியது கூறலாய் வழுவாகாதோ? எனின், வழுவாது. பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ? என அவர் தாமே பாயிரத்துக்கண் அதற்கு வழுவமைதி ஆக்கிக் கொண்டாராகலின் என்பது. அன்றியும் தண்ணீர் வேட்டுத் தாக முற்றொருவன் அதனைப் பலகால் அள்ளிப் பருகுதல் குற்றமாகாத வாறுபோல இதுவும் குற்றமாகா தென்க.

இன்னும் இதற்கு வேறுவகையால் அமைவுகாணுதல் இங்கு மிகப் பொருத்தமுடையதாம். **சொற்பொருள் விரித்தல்** எனவும் **தன்குறிவழக்கம் மிகவெடுத்துரைத்தல்** எனவும் தந்திரவுத்திகள் வழங்குவதுண்டு. ஒரு நூலின்கண் அதன் ஆசிரியர் தம் குறியீடான யாதானுமோர் சொல்லினிடத்துச் சிறந்தபொருளைப் பொதிந்துவைத்தல் மரபு. அப் புதைபொருள் நன்குபுலப்பட விரிப்பான்வேண்டி அவர் கையாளும் யுக்திகள் இவ்விரண்டும் என்பர். இங்ஙனம் நூன்மரபாகக்கொண்ட இம்முறைகள் பெருங்காப்பியப் புணர்ப்புக்கும் ஏற்றபெற்றி உதவுவனவாகக் கொள்ளல் இழுக்காகாது. ஆகவே, கம்பநாட்டாழ்வாரும் தம் குறியீடான **இராமாவதாரம்** என்பதன் பொருள்விரித்தலாக, அவ்வவதாரத்தின் பரத்வ, ஸௌலப்ய குணாதிசயங்களைப் பலபடப்புனைந்து பாராட்டிய பாடல்களால், மிக எடுத்துரைத்தமை தகவுடைத்தாயிற்று என்க.

காப்பியப்புலவர் தம் கருத்தமைதியை இவ்வாறெல்லாம் விரித்துரைத்து வெளிப்படுத்திய பின்னரும், **இராமாவதாரப்** பெயரின் அருமை பொதுமக்களின் புந்தியிற் புகுதாமலொழிந்தது விந்தையினும் விந்தையே! தாயிட்ட பெயரை ஊரிட்டழைக்கும் என்பர். அவ்வழக்கு **இராமாவதாரத்திற்கு** மட்டும் ஏலாதது என்னையோ?

இனியேனும் இக்குறைபாடு நீங்கல் இன்றியமையாது. இராமாவதாரப் பெயரிற் பொதிந்துகிடக்கும் பொருட்செல்வம் போற்றிப் புரந்தரற்குரியது. அப்பெயர்வழக்கினை அழியாமற் புதுப்பித்துப் பாதுகாத்தல் தலைசிறந்த தமிழிலக்கியத் திருப்பணியாகும். அதனைப் புறக்கணித் தொதுக்குதல் புலமையறம் ஆகாது.

ஆயினும் இக்காலத் தொருசிலர் இராமன் சிறுமானிடனே யென்றும், அவனைக் கம்பர் திருமாலாகக் கூறியதெல்லாம் அரசனைத் திருமாலோடு உவமித்துச்சொல்லும் ஒருவகை மரபுபற்றியதல்லது பிறிதில்லையென்றும், இவ் வவதாரவுண்மையை எளிதாக அழித்துரைக்கத் தலைப்படுவர். அவர் கூற்றுத் தாய்மலடி என்பது போலாம். இராமன்கதை நளன்கதை என்றெடுத்து இகழ்ந்தாரும் உளரால் எனின், அன்னபிறரும் அவமதி கொள்ளாமைப் பொருட்டே இத்துணையும் எழுதிப்போந்த தென்க. இன்னுஞ் சொல்லுவேன்.

வைணவரே மட்டுமின்றி சைவரும், சைனரும் ஆதிய பிறசமயச் சான்றோருங் ட இவ்வுண்மையில் ஓரஞ்சாராது உடன்பாடுகொள்கின்றனர். சைவத் திருமறையாகிய தேவாரத்துத் திருநாவுக்கரசு நாயனாரருளிய திருவிராமேச்சுரத் திருப்பதிகத்தில்,

**கோடிமா தவங்கள்செய்து குன்றினார் தம்மையெல்லாம்**
**வீடவே சக்கரத்தா லெறிந்துபின் னன்புகொண்டு**
**தேடிமால் செய்தகோயில் திருவிரா மேச்சுரத்தை**
**நாடிவாழ் நெஞ்சமேநீ நன்னெறி யாகுமன்றே.**

**வன்கண்ணர் வாளரக்கர் வாழ்வினை யொன்றறியார்**
**புன்கண்ண ராகிநின்று போர்கள்செய் தாரைமாட்டிச்**
**செங்கண்மால் செய்தகோயில் திருவிரா மேச்சுரத்தைத்**
**தங்கணா லெய்தவல்லார் தாழ்வராந் தலைவன்பாலே.**

என இராமனைச் சக்கரப்படையுடைய செங்கண்மாலாகவே குறிப்பிடுதல் காணலாம். சிலப்பதிகாரவூர்காண்காதையும், தாதை யேவலின் மாதுடன் போகிக், காதலிநீங்கக் கடுந்துயருழந்தோன், வேதமுதல்வற்

பயந்தோனென்பது, நீயறிந்திலேயோ நெடுமொழி யன்றே என இ
கடவுளேயாதல் வலியுறுத்திச் செல்லா நின்றது. பிறவும் இங்ங
சான்றுகள் பெரிதுள. அவையெல்லாம் இங்கு விரிவஞ்சி விடவ
ஆகவே ஆசிரியர் குறிக்கோளை நன்குமதித்து, **இராமாவதாரபெ**
அருமைத் திருப்பெயர் பழவழக்காயழியாமற் புத்துயிரளித்து வாழ
புலமைமிக்க புரையோரை மீண்டுமொருகால் வேண்டிக்கொள்கிறேன

---

# தர்மம்

ஸ்ரீய:பதியான ஸர்வேசுவரன் சேதனர்கள் க்ருதயாக்ருதயங்களை அறிந்து உஜ்ஜீவிக்குமாறு வேதாதி சாஸ்த்ரங்களை வெளியிட்டருளினான். அந்த சாஸ்த்ரங்களின் ப்ரயோஜனம்; உலகத்தில் மக்களாய்த் தோன்றினவர்கள் அவரவர் தகுதிக்கேற்றவாறு புருஷார்த்தங்களைப் பெற்று வாழுதலேயாம். பெறுதற்கரிய மானிடப் பிறப்புடையவர்களால் விரும்பி அடையக் கடவனவாயுள்ள சிறந்த பொருள்களே புருஷார்த்தமெனப்படும். அவற்றைத் தமிழர் உறுதிப் பொருள் என்று வழங்குவர். உறுதல் அடைதல்; உறுதி அடைதற்குரியது. அது ப்ராப்யம் என்பதன் பர்யாயமாகும்.

அப் புருஷார்த்தம் நான்கு வகையாகப் பிரிக்கப்படுகிறது. அவை தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்பன. அவற்றை முறையே அறம், பொருள், இன்பம், வீடு என்றும் சொல்வதுண்டு.

அவைகளுள் முதன்மையான தர்மமே இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. நான்கு வகைப்பட்ட புருஷார்த்தங்களையும் ப்ரதிபாதிக்கின்ற சாஸ்த்ரங்கள் கிருத்தியங்களைச் செய்ய வேண்டுமென்று விதிப்பனவாயும், அகிருத்தியங்களைச் செய்யலாகாதென்று விலக்குவனவாயும் உள்ளன. அவை இரண்டும் தனித் தனியே விதியென்றும் நிஷேதம் என்றும் வ்யவகரித்தற்குரியன. நிஷேதம் விலக்கு.

அவ் விதி, நிஷேதங்களை அறிந்து அவற்றிற்கு இணங்கி நடத்தலே தர்மம் என்று சொல்லப்படுகிறது. அதனை, பரிமேலழகர் என்னும் தமிழாசிரியர், 'அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம்' என்று கூறியதனாலறியலாம். இவ்வாறு விதி நிஷேதங்களால் வரையறுத்துக் கொள்ளப்பட்டமைபற்றியே, தர்மத்திற்கு அறம் என்று தமிழில் பெயர்

வழங்குவதாயிற்று என்பது இங்கே அறியத்தக்கது. அறம் அறுக்கப்பட்டது. ஆகவே தர்மம் என்பதற்கு வரையறுத்து நியமிக்கப்பட்ட ஒழுக்கம் என்பதே பொருளாதல் தெளிவாகின்றது. ஒழுக்கம் எனினும் ஆசாரம் எனினும் ஒக்கும். இனி அதர்மமாவது விதித்தவற்றைச் செய்யாமையும் விலக்கியவற்றைச் செய்தலுமாம். இது தர்மத்திற்கு எதிரிடை. இதனைத் தமிழர் மறம் என்று வழங்குவர். மறுக்கப்பட்ட ஒழுக்கம் என்பது அதன் பொருள். அறம் புண்ணியத்திற்குக் காரணமாயுள்ளது; மறம் பாபத்திற்குக் காரணமாயுள்ளது.

அவ்வாறாயின், ஒழுகுதல் செய்தலாதலால் விதித்தன செய்தல் என்பது ஒழுக்கமாகத் தட்டில்லை; ஆனாலும் விலக்கியன ஒழிதல் என்பது நிஷேதித்தவற்றைச் செய்யாமலிருத்தலாதலால், செய்யாதிருத்தல் ஒழுகுகலாகாதே எனின்; அது பொருந்தாது. விதித்தன செய்தலைப் போலவே விலக்கியன ஒழிதலும் ப்ரயத்னஸித்தமாயிருக்கிறது. உதாரணமாக சாஸ்த்ரங்கள் வ்ரததினங்களில் உண்ணலாகாதென்றும், உறங்கலாகாதென்றும், எக்காலத்தும் ஜீவ ஹிம்ஸை டாதென்றும் நிஷேதிப்பதை எடுத்துக் கொள்வோம். ஒவ்வொருவருடைய மனதும் பூர்வ வாஸனையினால் உண்ணுதலும் உறங்குதலும், ஜீவஹிம்ஸையும் முதலான காரியங்களில் ப்ரவர்த்திப்பதே ஸ்வபாவமாகவுடையது. அத்தன்மையால் அது ஒரு சுழலுகின்ற சக்கரத்தை ஒக்கும் என்னலாம். எவ்வாறு அச் சக்கரத்தின் சுழற்சி மனிதனுடைய முயற்சியினால் தடைசெய்து நிறுத்தப்படுகிறதோ அவ்வாறே சாஸ்த்ரங்களை உணர்ந்தவன், நிஷேதித்த வழிகளில் தன் மனதைச் செல்லவிடாமல் நிக்ரஹித்து, உபவாஸம், கண்விழிப்பு, அஹிம்ஸை முதலானவற்றை அனுஷ்டிக்கிறான். ஆதலால் விதித்தன செய்தலைப் போலவே விலக்கியவற்றைச் செய்யாது விடுதலும் ஒழுக்கம் என்றே சொல்லத்தக்கது. இது நிற்க.

இவ் விதி நிஷேதங்கள் மனுஷ்ய ஜன்மத்திலுள்ளவர்களாலேயே அறிந்து ஒழுகுதற்குரியனவா யிருந்ததலால், அறம் முதலிய நான்கு புருஷார்த்தங்களும் அவர்களுக்கே உரியனவாம். ஏனைய விலங்குகட்கு அவை ஆகா. ஏனெனில் ம்ருகங்கள் விதி

விலக்குகளுக்குக் கட்டுப்பட்டன அல்ல.

அவ்வாறே அவ் விலங்குகளைப்போல விதிவிலக்குகளுக்கு உட்பட்டு ஒழுகாத மக்களுக்கும் தர்மம் முதலான புருஷார்த்தங்கள் வித்திப்பதில்லை. ஆஹாரமும், நித்ரையும், ப்ராண பயமும், மைதுனமும், ஜனனமும், மரணமும் ஆகியவற்றால் மனுஷ்யர்களுக்கும் விலங்குகட்கும் வித்தியாஸமில்லை. அஃதாவது, மனிதர்கள் உணவை உட்கொள்ளுகிறார்கள், அவ்வாறே ம்ருகங்களும் உட்கொள்ளுகின்றன; மனிதர்கள் நித்ரை செய்கிறார்கள், ம்ருகங்களும் கண்ணுறங்குகின்றன; மனிதர்கள் உயிரச்சமுடையவர்களாயிருக்கிறார்கள்; ம்ருகங்களும் அவ்வாறே உள்ளன; மனிதர்கள் புணர்ச்சியை விழைகிறார்கள்; ம்ருகங்களும் அங்ஙனமே விரும்புகின்றன; மனிதர்கள் பிறப்பும் இறப்பும் உள்ளவர்களாயிருக்கின்றனர்; ம்ருகங்களும் அவ்வாறே உள்ளன; ஆதலால் இரண்டும் ஒக்கும் என்பதாம். ஆயினும் ம்ருகங்களினின்று மக்கள் வேறுபட்டிருப்பதற்குக் காரணம், அவர்கள் விதி நிஷேதங்களுக்கு அடங்கி நடக்கும் ஆசாரமுடைமையேயாகும். ஆகவே அறமுடைமையும் அஃதில்லாமையுமே இரண்டிடத்துமுள்ள வித்தியாசமென்பது அறியத்தக்கது.

**"தக்க இன்ன தகாதன இன்ன என்(று)**
**ஒக்கஉன்னலர்ஆயின்உயர்ந்துள**
**மக்களும்விலங்கேமனுவின்நெறி**
**புக்கவேல்அவ்விலங்கும்புத்தேளிரே"**

சக்ரவர்த்தித் திருமகன் வாலியை வதைத்து வீழ்த்தியபொழுது, அவ் வாலி தான் விலங்கினத்திற்குரியவனாதலால் தீயொழுக்கத்தால் ஆகிய தோஷம் தன்னைச் சாராதென்றும், அதனால் ஸ்ரீராகவன் தன்னைக்கொன்றது அநீதியென்றும் முறையிட்டான்; அந்த ஸந்தர்ப்பத்தில் பெருமான் அவனுக்கு ஸமாதானமுண்டாகும்படி உரைத்த வார்த்தைகள் இவை. "இது தக்கது, இது தகாதது என்பதைச் சாஸ்த்ரங்களின் விதி நிஷேதங்களாலறிந்து அதன்படி

அனுஷ்டியாதவர்கள் மக்களாயிருப்பினும் விலங்காகவே எண்ணப்படுவர்; விலங்கேயாயினும் அவற்றை அறியும் விசேஷ ஜ்ஞானமுடையனவாயின் தேவரோடொக்க நன்கு மதிக்கத்தகும்" என்பது அதன்பொருள். ஆதலால் இதுவரை சொல்லிய விஷயங்களால் ஸதாசாரமில்லாத மனுஷ்யர்கள் தர்மம் முதலான புருஷார்த்தங்களை அடைவதற்கு யோக்யர்கள் அல்லர் என்பது விளங்கும்.

இனி, விதி நிஷேதங்களை அறிந்து நடவாத மனிதர்கள் தர்மம் ஒன்றையே இழப்பர் என்று சொல்லுவதல்லாமல், அவர்கள் தர்மம் முதலிய நான்கு புருஷார்த்தங்களையும் அடையமாட்டார்கள் என்பது எங்ஙனே யென்னில்: அர்த்தமும், காமமும், மோக்ஷமும் ஆகிய உறுதிப்பொருள்கள் மூன்றும் அறத்தைப் பற்றியே நிலைபெறுகின்றன; ஆதலால் தர்மத்தை இழந்த் அவர்கள் அதனோடு தொடர்புடைய பிறவற்றையும் இழப்பவராகிறார்கள். இவ்வாறு சதுர்வித புருஷார்த்தங்களுள்ளும் தர்மமே ப்ரதானமானதாகையினாலேயே அது முதலில் வைத்து எண்ணப்படுவதாயிற்று. இனி ஏனைப் பொருளும், இன்பமும், வீடும் ஆகியவற்றிற்கும் தர்மமே ஆதாரமாகின்றது என்பதன் உண்மையை ஆராய்வோம்.

பொருளும், இன்பமும், மோக்ஷமும் ஆகிய புருஷார்த்தங்கள் அறத்தின் பலனாய் அடைதற்குரியன ஆதலால் அவை தர்மத்தைப் பின்பற்றி நிற்கின்றன என்று மேலே சொல்லப்பட்டது. ஆகவே தர்மம் மற்றை உறுதிப் பொருள்களைஅடைவதற்குக் காரணமாயிருப்பது இங்கே விரித்துரைக்கத்தக்கது.

ப்ரவ்ருத்தி மார்க்கம் என்றும் நிவ்ருத்திமார்க்கம் என்றும் தர்மம் இரண்டு வகையாகப் பிரிக்கப்படும். அவற்றுள் ப்ரவ்ருத்தி தர்மமாவது, க்ருஹஸ்தனான ஒருவன் கர்மப்ரதானனாய், போகங்களையும் அனுபவித்து, ஸத்பாத்திரத்திலே தானஞ்செய்தல் முதலான தன் ஆசிரமத்துக்கு ஒதிய தர்மானுஷ்டானங்களை உடையவனாதல். நிவ்ருத்தி தர்மமாவது, ஒருவன் நிலையாமையை உணர்ந்து

உலகத்தைத் துறந்து தபோநிஷ்டனாய் ப்ரஹ்மஜ்ஞானத்தை அடைந்து, ஆசையை வேரோடுகளைந்து, மோக்ஷத்தை அடைதலாம். இவற்றைத் தமிழர் முறையே இல்லறமென்றும் துறவறமென்றும் இரண்டு பகுப்புடையனவாகக் கூறுவர். இவற்றுள் முதலாவதான இல்லற ஒழுக்கத்தால் ஒருவன் அர்த்தத்தையும் காமத்தையும் அடைபவனாகிறான். இரண்டாவதான துறவொழுக்கத்தால் மோக்ஷத்தை அடைகிறான். ஆதலால் ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியுமாகி இருவகைப்பட்ட தர்மங்களும் முறையே பொருளின்பங்களையும், வீட்டினையும் அடைவதற்குக் காரணமாயுள்ளன வென்பது தெளிவாய் விளங்குகிறது.

அதற்கணுகுணமாகவே தர்மானுஷ்டானங்களைக் கைக்கொண்டுள்ள உத்தமர் அநேகர் உலகின்கண் எல்லாச் செல்வமும் பெற்று இன்பமெய்திவாழுகின்றனர். அநேகர் உண்ணஉணவும் உடுக்க உடையுமின்றித்தரித்திரர்களாய் வருந்துவதைக் கண்கூடாகக் கண்டிருக்கிறோம். ஸத்பாத்திரத்தில் தானம்செய்தல் முதலான நல்ல தர்மங்களை வளரச் செய்கிறவர்களுடைய க்ருஹத்தில் ஸ்ரீதேவி எப்பொழுதும் நீங்காமல், தன் செல்வம் நல்லவழியில் ப்ரயோஜனப்படுவதைப் பார்த்து, முகமலர்ச்சியோடு நித்யவாஸம் செய்கிறாள் என்று சொல்லப்படுகிறது. அவ்வாறே அதர்மமுடைய ஒருவனை ஸ்ரீதேவி தன் தமக்கைக்குக் காட்டிக் கொடுத்து, தான் அவனை விட்டு நீங்கி விடுவாள். இவை தர்மத்திற்கும் அதர்மத்திற்குமுள்ள த்ருஷ்டமான பலாபலன்கள். இவற்றால் செல்வம் கெடுவதற்கு அதர்மம் காரணமாகும் என்பதும் நன்குபெறப்பட்டன.

இதுமட்டுமன்று, தர்மம் தன்பலனாகப் பொருளை அடைவித்தல் சிலவிடங்களில் அதிர்ஷ்டரூபமாகவும் உள்ளது. உலகத்தில் மனுஷ்ய ஜன்மமெடுத்தவர்கள் எல்லோரும் பிறப்பினால் ஒப்புமையுடையவர்களேயாவர். ஆனால் அவர்கள் செல்வத்தாலும் பிறவற்றாலும் ஒருவருக்கொருவர் ஏற்றத்தாழ்வுகள் உடையவராயிருத்தல் யாவரும் நன்கறிந்தது. சிலர் தனவந்தராகவும் சிலர் ஏழைகளாகவும், சிலர் ரக்ஷகராகவும் இருக்கிறார்கள். இன்னும்

இவ்வாறே பலவகையான வேறுபாடுகள் அவர்களுக்குள் காணப்படுகின்றன. ஒருவர் பல்லக்கிலேறிச் செலுத்தும் பாக்கியமுடையவராகவும், ஒருவர் அதனைத் தூக்கிச் சுமக்கும் துர்ப்பாக்கிய முடையவராகவும் இருக்கக் காரணம் என்ன? அவரவர்கள் பூர்வத்தில் செய்த தர்மாதர்மங்களின் பலாபலன்களே அவற்றிற்குக் காரணமல்லவா? ஆதலால் ஒருவர் செய்த தர்மமே மறுபிறப்பில் அவர் பொருளும் போகமும் எய்துவதற்குக் காரணமாகின்றதென்பது தெளியத்தக்கது.

ஆனாலும் தர்மசீலர்களான ஒரு சிலர் தமது பொருள் முதலியவற்றை இழந்து துன்பமுறுகிறார்கள். அதர்மமே உடையார் ஒரு சிலர் ஆக்கத்தைப் பெற்று இன்பமெய்தி வாழ்கின்றனர். இது இவ்வுலகத்தில் இயல்பாக உள்ளது. ஆகையால் அந்த மாறுபாட்டைக் கொண்டு, ஆக்கமடைவதற்கு அறமே காரணமாகுமென்பது பொருந்தவில்லையே என்று சிலர் சந்தேகம் கொள்ளுதல் டும்.

அவர்கள், **''ஔவிய நெஞ்சத்தானாக்கமும் செவ்வியான் கேடு நினைக்கப்படும்''** என்னும் தெய்வப் புலவர் திருவாக்கினைச் சிந்தித்துக் கொள்ளக்கடவர். குற்றமுள்ளமனத்தோடு அதர்மம் செய்பவனுக்கு ஆக்கமும், செம்மையான மனதோடு தர்மமே செய்பவனுக்குக் கேடும் ஒரே வழி உள்ளனவாயின் அவற்றிற்குக் காரணம் வேறு வகையான் ஆராயப்படும் என்பது அதன்பொருள். ஒருவனுடைய ஆக்கத்திற்கு அவனுடைய தீவினையும் அழிவுக்கு நல்வினையும் ஒரு பொழுதும் காரணமாகமாட்டா. ஆதலால் அவரவர்களுடைய பழவினையே அவற்றிற்குக் காரணம் என்று நினைக்க வேண்டும். பழவினையாவது முந்திய ஜன்மத்தில் செய்த நல்வினை தீவினைகளாம். ஆகவே முற்பிறப்பில் நிறைந்த நல்வினை உடையவன், இப்பிறப்பில் தீவினை உடையவனாயினும், பழையதான நல்வினையின் பலனையே இப்பொழுது அனுபவிக்கிறான்; இப்பொழுது செய்த தீவினையின் பலனை இனிவரும் பிறப்பில் அடையக்கடவன் என்றும்; முற்பிறப்பில் நிறைந்த தீவினைபுரிந்தவன், இந்த ஜன்மத்தில் நல்வினையுடையவனாயினும், பழையதான

தீவினையின் பயனையே இப்பொழுது அடைந்திருக்கிறான்; இப்பொழுது செய்த நல்வினையின் பயனை இனிவரும் பிறப்பில் அனுபவிப்பான் என்றும் அதற்கு சமாதானம் கண்டுகொள்க.

அதுநிற்க: களவு முதலான தீயவழிகளிலும் பொருளீட்டுதல் சாத்தியமாய் இருப்பதால் அதர்மமும் ஒரோவழி ஆக்கத்திற்குக் காரணமாமென்று சொல்லுதல் டாதோ என்னில் டாது. ஏனென்றால், **களவினாலாகிய ஆக்கம் அளவிறந்(து) ஆவதுபோலக் கெடும்** என்று சொல்லப்பட்டிருக்கிறது. களவினால் ஒருவனுக்குக் கைப்படுகின்ற பொருளானது அப்பொழுது விர்த்திஆவது போலத் தோன்றும். ஆனாலும் அதிசீக்கிரத்தில் அது தன் எல்லையைக் கடந்து (அளவிறந்து) கெட்டுவிடும். அளவிறந்து கெடுதலாவது, தான் அழிந்துபோகும்போது பாவத்தையும் பழியையும் நிறுத்தி முன்பு செய்திருந்த தர்மத்தையும் உடன் கொண்டுபோகலாம். அன்றியும், அழக்கொண்ட வெல்லாம் அழப்போம் என்கிறபடியே, பிறர் வருந்தும்படி அபகரித்துக் கொண்ட அப் பொருள் தன்னைவிட்டு நீங்கும்போதும் அவனை வருந்தும்படியே செய்துபோகிறது. அப்போது அத்துன்பம் அவனுக்கு மிகக் கொடிதாய் இருக்கும்.இந்த நிலையில்லாத பொருளை முன்பு நாம் தீயவழியில் அபகரித்துக் கொள்ளாமல் இருந்திருப்போமானால் இப்பொழுது இத்துன்பமில்லையே என்று அவன் பலகாலும் பரிதபிப்பான். ஆதலால் அந்த அந்யாயார்ஜிதமான பொருள் முன்பு வளருவதுபோலத் தோன்றுவதெல்லாம் பின்பு கெடுதலால் உண்டாகும் துன்பத்தை அளவிறந்ததாகச் செய்வதற்கே என்பது அறியத்தக்கது. ஆதலால் அதர்மத்தால் வந்த பொருளின் வளர்ச்சியை வளர்ச்சியாகக் கருதாமல் அது எவ்வளவுக்கெவ்வளவு விர்த்தியாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு கேட்டிற்கே காரணமென்று நினைக்கவேண்டும். ஆக இதுவரை சொல்லிய விஷயங்களால் அதர்மம் அழிவுக்கே காரணமாவதன்றி ஆக்கத்திற்குக் காரணமாகாதென்பது நன்குபெறப்பட்டது.

இனி தர்மம்செய்வது பொருளின் அபிவிர்த்திக்குக் காரணமாகும் என்று மேலே சொல்லப்பட்ட விஷயமும்

பொருந்தாமையுடையதுபோலச் சிலர்க்குத் தோன்றலாம். ஒருவன் தன் நிதியை தானம் முதலான தர்மவழிகளில் செலவிடும்போது அது குறைந்துவிடுகிறது; ஆதலால் அறஞ்செய்தல் பொருளினுடைய அழிவுக்கே காரணமாவதன்றி, அதன் வளர்ச்சிக்குக் காரணமாகும் என்று சொல்லுதல் பொருந்தாதே என்பது சங்கை.

தர்மவழிகளில் செலவிடும்போது ஒருவனுடைய செல்வம் குறைவடைதல் உண்மையே; ஆனாலும் அவனுடைய தனத்தை அழிப்பதே தர்மத்தின் கார்யம் என்று சொல்வது சிறிதும் ஒவ்வாது. செல்வம் ஓரிடத்திலும் நிலைத்திருப்பதில்லை. எவ்வழியானும் அழிவடைதலையே அது இயல்பாகவுடையது. தர்ம வழியில் செலவிடாது சேர்த்துவைக்கும் பொருள்கள் யாவும் வேறு எவ்விதத்தாலாயினும் அழிந்து ஒழிதல் உலகறிந்த உண்மையேயாகும். ஆகையால் அவ்வாறு வேறு காரணத்தை விரும்பாமலே தன்னடைவேயாக அழியக் டிய செல்வத்தைத் தர்மத்தில் விநியோகிக்கும்போது அவ்வறம் அதன் அழிவுக்கு வ்யாஜமாத்ரமாக அமைகிறதே அல்லாமல் பொருட்கேட்டிற்கு நேரே காரணமாகுமென்று சொல்லமுடியாது. அன்றியும், ஒரு, வர்த்தகன் வ்யாபாரத்தின் பொருட்டு முதலில் சிறிது தனத்தைச் செலவழித்துப் பின்பு அதன்பலனாகப்பெரிய லாபத்தை அடைகிறான் என்பதை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். அவன் செய்த வ்யாபாரமாகிற தொழில் அவனுடைய செல்வத்தின் அழிவுக்குக் காரணமென்று சொல்லுவதா? அல்லது ஆக்கத்திற்குக் காரணமென்று சொல்லுவதா? அவ்வியாபாரம் அவனுடைய செல்வ வ்ருத்திக்குக் காரணமாயிற்று என்றுதானே சொல்ல வேண்டும்? அதுபோலவே அறமும் முதலில் சிறிது பொருட்செலவை உண்டாக்கினாலும், பின்பு அதனினும் பலமடங்கு அதிகமானதும் இம்மையினும் மறுமையினும் இன்பத்தைத் தரத்தக்கதுமான பொருளை அளித்தலால் அது ஆக்கத்திற்கே காரணமாகும் என்பதில் ஐயமில்லை.

ஆனால் மேலே த்ருஷ்டாந்தமாகக் காட்டிய வ்யாபாரியின் தொழிலில் பொருளடைதல் த்ருஷ்டபலமாகவுள்ளது. தர்மம்

செய்வதனால் பொருளடைதல், சிலவிடங்களில் த்ருஷ்டபலமாகவும் சிலவிடங்களில் அதிர்ஷ்டபலமாகவும் உள்ளது. அதிர்ஷ்ட பலத்தில் ஒருவரும் நம்பிக்கை கொள்ளாமல் இருக்க முடியாது. ஏனெனில் ஒருவன் செய்த புண்ணியமும் பாவமும் செய்தமுறையே செய்தவனை நாடிச் சென்றடைகின்றன என்பது எல்லாமதத்தினர்க்கும் ஒப்பமுடிந்ததொன்றாம். ஆதலால் ஒருவன் செய்த தர்மம் எந்தவிதத்திலும் வ்யர்த்தமாவதில்லை. அது எக்காலத்திலேயும் அவனுக்கு உதவுகின்றது. அதுபற்றியே **"தர்மம் தலைகாக்கும்"** என்ற பழமொழியும் வழங்குகிறது.

தர்மமானது சிறிது முன்னாகவேனும் பின்னாகவேனும் தன் பலனை அடைவிக்காம லிராதென்பது மேலே சொல்லப்பட்டது. இவ் விஷயத்தை நீதி நூலில் ஓர் உதாரணமுகத்தால் விளக்கிக் காட்டுவதுண்டு. தென்னை மரமொன்றை வித்திவிளைவிப்பதாக வைத்துக் கொள்வோம். அது நன்றாக வளர்ந்து பக்குவம் வாய்த்தபிறகு பலனைக் கொடுக்கின்றது. அவ்வாறே ஒருவன் வளர்க்கும் அறமாகிய பயிரும் தக்கபருவம் நிறைந்த உடனே அவனுக்குப் பயனளிக்குமென்பதில் ஐயமில்லை. ஒருவன் பிறனொருவனுக்கு நன்மையானதொரு காரியத்தைச் செய்யுங்கால், அந்த தர்மத்தின்பலன் தனக்கு எப்பொழுது கிடைக்குமோ என்பதை எதிர்பாராமலே செய்யக்கடவன். ஏனெனில் தர்மம் பலன் தருவதில் ஒருபொழுதும் தவறுவதில்லை. அவ்வாறு கொடுப்பதிலும் அது தன் முன்னையளவிலும் பன்மடங்கதிகமான பயனையே தருகின்றது. தென்னை மரம் தன் தாளினாலுட்கொண்ட உப்புநீருக்கு மாறாக இனிய இளநீரைத் தலையினாலளிக்குமன்றோ?

**"நன்றியொருவர்க்குச்செய்தக்காலந்நன்றி**
**என்றுதருங்கொலெனவேண்டா - நின்று**
**தளராவளர்தெங்குதாளுண்டநீரைத்**
**தலையாலேதான் தருதலால்."**

என்னும் ஆன்றோர் வாக்கினுள் இக்கருத்து அடங்கியிருத்தல் கண்டு

கொள்க. ஆகவே ஒருவன் முன்னிலும் அதிகமான ஆக்கமடைந்து வாழ்வதற்கு அவன் செய்யும் தர்மமே காரணமாகுமென்பது மிகவும் வெளிப்படையாயிற்று. அதனாலேயே செல்வத்தைக்காட்டிலும் தர்மம் சிறந்ததாக மதிக்கப்படுகிறது.

ஆயினும்,

**''வடுவிலாவையத்துமன்னியமூன்றில்**
**நடுவணதெய்தஇருதலையு மெய்தும்''**

என்று நாலடியார் என்னும் நீதிநூல் கூறுகின்றது. இவ்வுலகத்திற்குரியனவாய தர்மம், அர்த்தம், காமம் என்னும் புருஷார்த்தங்கள் மூன்றிலும் நடுவில் வைத்து எண்ணப்படுகிற பொருளை அடைபவருக்கு ஏனைய இரண்டும் எளிதினில் எய்தும். என்பதே அதன் கருத்து. இதனால் பொருளே மற்றையவற்றினுஞ் சிறந்ததென்பது பெறப்பட்டது. ஆகையால் இதுபோலுள்ள ப்ரமாணங்கள், மேலேசொன்ன அறமே சிறப்புடையதென்று கொண்ட கொள்கையை விரோதிப்பன போல் தோன்றும். அவ் விஷயத்தையும் இங்கே சிறிது விசாரிப்போம்.

நாலடியாரில் பொருளின் பெருமையொன்றே பேசவந்த இடத்தில், அது அறத்தினுஞ் சிறந்ததென்று ஒருவகையால் உயர்த்திச் சொல்லப்பட்டது. ஆனாலும் அறமாகிய உறுதிப்பொருள் முழுவதும் அர்த்தத்தினாலே அடைதற்குரியதென்பது ஸித்தித்துவிடாது. ஏனெனில் தர்மங்களனைத்தினும் மிகவும் மேலானவையாய் முனிவரிடத்துள்ள தவமும், மகளிரிடத்திலுள்ள கற்பும் பொருள் காரணமாகத் தோன்றுவனவன்றே? அன்றியும் அன்பு, அருள், வாய்மை, அடக்கம், பொறை, அஹிம்ஸை முதலாகப் பல பகுதிப்பட்ட அறங்களும் நிதியின் உதவியின்றியே நிகழ்வனவாயுள்ளன. அர்த்தத்தை அபேக்ஷித்து நடப்பன ஒப்புரவும் ஈகையும் முதலான ஒன்றிரண்டு தர்மங்களேயாகும். அவற்றிற்கும் அப்பொருள் எம்மட்டில் காரணமாகுமென்பதைச் சிறிது ஆழ்ந்து நோக்குவோம்.

ஒருவன் தானமுதலான தர்மங்களைச் செய்யும்பொழுது அதற்கேற்ற த்ரவ்ய சகாயம் வேண்டியிருப்பது மிகவும் உண்மையே. ஆயினும் அவன் பூர்வத்தில் செய்து போந்த தர்மத்தின் பலனே அவ்வாறு பொருள்வடிவமாக அவனிடம் பொருந்தியுள்ளதென்பதை நன்கறிய வேண்டும். அன்னதானம் போன்ற அறங்களில் பொருளைச் செலவிடுவதானது, ஒருநாள் அப்பொருள் பின்னர் தனக்கே உதவுமாறு சேமித்து வைப்பதேயாகும்.

**"அற்றார்அழிபசிதீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப்புழி"**

என்றமையால் அதுவே நீதிநூலின் துணிபாதல் அறிந்து கொள்க, அன்றியும் அத்தகைய தர்மங்களை வளரச் செய்பவனுடைய க்ருஹத்தில், **''அகனமர்ந்து செய்யாளுறையும்''** என்கிறபடியே, திருமகள் மிகுந்த விருப்பத்தோடு வீற்றிருந்தருளுவள் என்பது முன்னரே ஒருமுறை சொல்லி முடிக்கப் பெற்றது. தன் செல்வமெல்லாம் நல்ல வழியிற் பயன்படுவதைப் பார்த்து அவள் மிகவும் மகிழ்ச்சியடைகிறாள் என்பதும் அங்கே குறிக்கப்பட்டது. இவற்றால், பொருட் செலவையே காரணமாகவுடைய சிலதர்மங்களும், மேலும் மேலும் நமக்கு உபயோகமாகும்படி அப்பொருளை வ்ருத்தியாக்கிக் கொடுத்து, அதற்கேகாரணமாயுள்ளன என்று தெளிவாகின்றது. ஆகையால் அவ்விடத்தில் தர்மத்திற்கு தர்மமே காரணமாயிற்றென்று சொல்லவேண்டும். அதாவது, ஒருவன் முன்பு செய்த தர்மமே அவன் மேன்மேலும் செய்யும் தர்மத்திற்கு சாதனமாகப் பொருளின் வடிவமாய் அவனிடம் வந்துள்ள தென்பதாம். ஆகவே அறத்திற்குப் பொருளைக் காரணமாகச் சொல்லுவதெல்லாம், அது ஒருவகையாற் காரணமாயிருப்பது பற்றியும், அதுவே வெளிப்படையாகத் தோன்றுவது பற்றியும் அல்லாமல் வேறன்று என்பது நன்கு பெறப்படும்.

அவ்வாறாயின், ஒருவன் பூர்வ ஜன்மத்தின் புண்யபலத்தாலன்றித் தன் மெய்முயற்சியாலே தேடிய பொருளைக்

கொண்டு தர்மம் செய்யும்பொழுது, அப்பொருள்தானே அறத்திற்குக் காரணமாகிறது என்று சிலர் எண்ண இடமுண்டு. ஒருவன் செய்யும் நன் முயற்சிகளெல்லாம் விதிவிலக்குகளுக்கு உட்பட்டனவாகலின் அவை தர்மத்தைப் பின்பற்றியே செல்லுகின்றன. அவ்வாறு தர்மமார்க்கத்தால் தேடிய பொருளைக் கொண்டு அறம் செய்யும்போது அப் பொருள் தனித்து நின்று அறத்திற்குக் காரணமாகுமென்று சொல்ல முடியாது. தர்மத்தினின்றும் தனியே வேறு பிரித்தபொருளை ஒரு புருஷார்த்தமாகவே நீதி நூல்கள் உடன்படவில்லை. புருஷார்த்தம் இன்னதென்பதைத் தெளிவாக விளக்கவந்த இடத்தில் ''**தீவினைவிட்டு ஈட்டல் பொருள்**'' என்று சொல்லப்பட்டது. தீவினைவிட்டு ஈட்டலாவது தர்ம வழியிலேயே சம்பாதித்தலாம், அல்லாத வழியில் தேடும்பொருள் புருஷார்த்தமாகாது. அப்பொருளின் பிரயோஜனங்களும் அநிஷ்டமாகவே முடியும். ஆகவே, அறத்தோடு கலவாமல் அர்த்தம் தனியே நிலை பெறுவதில்லைஎன்று இதுவரை சொல்லிய விஷயத்தினால், தர்மமே பொருளினுஞ் சிறந்ததென்பது விசதமாகத் தோன்றும்.

இனி, மூன்றாவதான காமபுருஷார்த்தமும் தர்மத்தினாலே அடையக் கூடியதென்பது சொல்லாமலே விளங்கும். அறத்தினால் பொருளும் அப் பொருளினால் போகமும் உண்டாவது நிராக்ஷேபமாய் ஒப்புக் கொள்ளத்தக்கதன்றோ? ஆகவே தர்மம், அர்த்தத்திற்கு ஸாதனமாயுள்ள நிலையில் எவ்வாறு அதனினும் சீரியதாக மதிக்கப்பட்டதோ அவ்வாறே காமத்திற்கும் ஸாதனமாயுள்ள நிலைமையில் அக்காமத்திலும் சீரியதாக மதித்தற்குரியதென்பது வெளிப்படை.

அவ்வாறாயினும், ஸாத்யத்தை உத்தேசித்தே ஸாதனங்கள் தோன்றுகின்றனவாகையால், ஸாதனமாகிய தர்மத்தினும் ஸாத்யமாகிய காமமே உயர்ந்ததென்று கொள்ளுதல் டாதோ எனின் டாது. ஸாதன ஸாத்யங்களாகிற இரண்டில் சில இடங்களில் ஸாதனமே பெருமையுடையதாவதும் உண்டு. சில இடங்களில் ஸாத்யமே பெருமையுடையதாவதும் உண்டு, அவ்விரண்டு வகைகளிலும் இங்கே

தர்மத்தை ஸாதனமாகச் சொன்னது முன்னையதனோடு ஒக்கும். ஏனெனில், ஸாதனமாகிய தர்மம் மிகப் பெரிதாயும், ஸாத்யமாகிய காமம் அதனில் ஏகதேசமாய் மிகச் சிறிதாயும் இருக்கின்றன. தெளிவாகச் சொல்லுமிடத்து தர்மம் வ்யாபகமாகவும் காமம் அதில் வ்யாப்யமாகவும் உள்ளது என்னலாம். எங்ஙனமெனில் இன்பம் ஒன்றையே பெறுதற்பொருட்டு அறம் ஸாதனமாய்த் தோன்றுகிறதென்று சொல்ல முடியாது. தர்மம் தன்மட்டிலேயே ஓர் உயர்ந்த உறுதிப் பொருளாக இருத்தலோடு பொருளும், இன்பமும், வீடு ஆகிய பிற புருஷார்த்தங்களையும் அடைவிக்கின்றது. ஆகையால் மற்றை உறுதிப் பொருள் மூன்றிற்கும் ஸாதனமாய் அவற்றைத்தன்னுள் அடக்கியுள்ளதாகிய அறமானது அப்புருஷார்த்தங்களில் ஏகதேசமான காமத்தினும் தாழ்ந்ததென்று சொல்லுதல் எவ்வாறு பொருந்தும்?

அதுவன்றியும், விதிவிலக்குகளுக்குக் கட்டுப்பட்டு அனுபவிக்கும் இன்பமே காமமாகிய புருஷார்த்தமாகக் கருதப்படுகிறது. அதாவது அறத்துடன் கூடிவரும் இன்பமே உறுதிப் பொருளாகும் என்பதாம். அதனை,

**"அறத்தான் வருவதே இன்பம்மற்றெல்லாம்**
**புறத்தபுகழுமில"**

என்னும் தெய்வப் புலவர் திருவாக்காலறிக. அறத்தினின்றும் வழுவி ஒருவன் காமத்தை நுகர்வானாயின் அது இன்பமாகாது. துன்பமேயாம். பிறனில்விழைதல் (பரதார பரிக்ரஹம்) முதலான அக்ருத்யங்களாலும் போகநுகர்தல் டும். ஆயினும் அவை அறத்தின்வழி வந்தன அல்லவாதலால் த்யாஜ்யங்களேயாகும். அத்தகைய காமம் ஒருக்ஷணமாத்ரம் இன்பம்போலத் தோன்றினாலும், பின்பு பாபத்திற்கே காரணமாய் அளவில்லாத துன்பத்தைவிளைவிக்குமென்று அறிய வேண்டும். இம்மையிலும் அது ஒருவனுடைய புகழ் முழுவதையும் அழித்துப் பழியையே நிற்கச் செய்கிறது. ஆதலால் அறிந்தோர் அதனை ஓர் உறுதிப்பொருளாகக் கொள்வதில்லை. ஆகவே இதனாலும் தர்மமானது காமத்தினும்

மேலானதென்று ஸித்திக்கிறது.

இதுவரை சொல்லிய விஷயங்களால் தர்மம், அர்த்த காமங்களை அடைவதற்கு ஸாதனமாயுள்ளதென்றும், அவை புருஷார்த்தங்களாக நிலைபெறுமாறு அவற்றுடன் கலந்துநிற்கிறதென்றும், அவற்றைத் தன்னகத் தடக்கித் தான் வ்யாபகமாயுள்ள தன்மையால் அவற்றினும் மிகப் பெருமை வாய்ந்ததென்றும் விளங்கிக் கிடத்தல் கண்டுகொள்க. இவ்வாறு பொருளின்பங்கள் அறத்தின் வழிப்பட்டு நிற்குமியல்பு ஓர் அருமையான சங்கப்பாடலிலும் பயின்றுள்ளதென்பதை இங்கே எடுத்துக்காட்டுதல் மிகையாகாது. சோழ அரசன் ஒருவனுடைய கொற்றக் குடையினைச் சிறப்பிக்கும் கருத்துடன் ஒரு புலவர்,

**"சிறப்புடைமரபிற் பொருளும் இன்பமும்**
**அறத்துவழிப்படூஉம் தோற்றம்போல**
**இருகுடைபின்பட ஓங்கியஒருகுடை**
**உருகெழுமதியின்நீவந்து சேண்விளங்க."**

என்று கூறுகின்றார். ஏனைச் சேர,பாண்டியர்களுடைய குடைகளிரண்டும் சோழனுடைய கொற்றக் குடை ஒன்றன் நிழலின் கீழ்ப்பட்டு அதனை அநுவர்த்தித்துச் செல்லுகின்றன என்னும் அபிப்ராயம் பொருளும் இன்பமும் ஆகிய உறுதிப்பொருள்கள் இரண்டும் அறமாகிய ஒன்றில் வ்யாப்யமாய் அதனைப் பின்பற்றியே நடைபெறுகின்றன என்னும் உபமானத்தால் விளக்கப்படுகிறது. இங்ஙனம் தமிழ்வேந்தர் மூவரில் சோழன் ப்ரபலனாயிருந்த தன்மைக்கு புருஷார்த்தங்கள் மூன்றில் தர்மம் வ்யாபகமாயிருக்கும் இயல்பை உவமை கூறியிருப்பதன் நயம் பெரிதும் பாராட்டத்தக்கது.

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# என்னீர்மையென்னும் திருவாய்மொழிப் பாசுரத்தில் பட்டர் நிர்வாஹம்

**ஸ**மீபத்தில்வெளிவந்த வேதாந்ததீபிகை சம்புடம் 14 ஸஞ்சிகை 11ல்; நம்மாழ்வாரின் வைபவமும் திருவாய்மொழியின் பெருமையும் என்னும் விஷயம் வெளிவந்திருப்பது யாவரும் அறிந்ததே. அதில் என்னீர்மையென்னும் திருவாய்மொழிப் பாசுர ஸம்பந்தமான பட்டர்நிர்வாஹத்திலுள்ள விஷயம் ப்ரஸ்தாபிக்கப்பட்டுள்ளது, அங்கே காட்டப்பட்ட தமிழ்ப்ரமாணங்கள் சுத்தபாடமில்லாமையால், அதன் விஷயம் திருத்தமாகவும் விளக்கமாகவும் எழுதப்படவில்லையென்றுதோன்றுகிறது.

திருவாய்மொழியீட்டின் அரும்பதாசார்யர்களும் அந்தத்தமிழ் ப்ரமாணங்களை அசுத்தபாடமாகவே கொண்டு தாத்பர்யமருளி யிருக்கிறார்கள். ஆகையால் அந்த மேற்கோள்களின் சுத்த பாடத்தை விசாரித்து, ஸந்தர்ப்பத்தோடு பொருந்த அவற்றின் அர்த்தத்தையும் எழுதி வெளியிடுதல் இங்கே அவசியமான கார்யமாய் ஏற்பட்டது.

ஸ்ரீய: பதியான ஸர்வேசுவரனுடைய புருஷோத்தமத்வத்தாலே ஆழ்வார் தாம் பும்ஸ்த்வம் அழிந்து பெண்ணுடையுடுத்து, அவனோடு கலந்துபிரிந்தாளொருபிராட்டி தசையை அடைந்தவராய், சில திர்யக்குகளிடத்தில் தன் ஆற்றாமையைச் சொல்லி எம்பெருமான்பக்கல் தூதுபோக்குவதை விஷயமாகக் கொண்டு, **"அஞ்சிறைய மடநாராய்"** தொடக்கமாக அநேகம் பாசுரங்களை அருளிச் செய்திருக்கிறார். அவற்றுள் **"என்னீர்மை கண்டிரங்கி"** என்பதும் ஒன்று. அப்பாசுரம் முழுவதும் வருமாறு:

**என்னீர்மைகண்டிரங்கிஇதுதகாதென்னாத**
**என்னீலமுகில்வண்ணர்க்கென்சொல்லியான்சொல்லுகேனோ**
**நன்னீர்மைஇனிஅவர்கண் தங்காதென்றொருவாய்ச்சொல்**
**நன்னீலமகன்றில்காள்நல்குதிரோநல்கீரோ.**

நான் தம்மைப்பிரியில் ஒரு க்ஷணமாத்ரமும்தரிக்கமாட்டாத ஸ்வபாவை என்னுமிடத்தை அறிந்துவைத்து என் பக்கலிலே க்ருபை பண்ணி, இவள் நம்மைப் பிரிந்திருக்கைக்கீடல்லள் என்று பாராதவர்க்கு நான் என்னவார்த்தையைச் சொல்லுவது என்று எம்பெருமானைச் சொன்னாளாய்ப் பின்னையும் அவனை விடமாட்டாமையாலே, அவளுடைய நல்லுயிரானது இனி அவள்பக்கல் ஒரு க்ஷணமாத்ரமும் தங்காது என்று ஒருவார்த்தை சொல்லவேணுமென்று சில அன்றில்களை நோக்கிச் சொல்ல அவையும் போகாதிருந்த விடத்தில் இத்துணையும் சொல்ல வல்லீர்களோ மாட்டீர்களோ என்கிறாள் என்பது அதன் பொழிப்புரையாகும்.

இனி, இப்பாசுரத்தின் ஈட்டில் என்னீர்மைகண்டிரங்கி என்பதன் வ்யாக்யானாவசரத்தில் ப்ராஸங்கிகமாக ஓர் ஐதிஹ்யம் காட்டப்பட்டிருக்கிறது. அதுவே இங்கு பட்டர் நிர்வாஹம் என்று குறிக்கப்பட்டதாகும். அதாவது ''பட்டரை ஒரு தமிழன் 'கேட்டிரங்கியென்னாதே கண்டிரங்கி யென்னப் பெறுமோ?' என்ன, 'அணைத்தகை நெகிழ்த்த அளவிலே வெளுத்தபடி கண்டால் பிரியத்தகாததென்றிருக்க வேண்டாவோ; இப்படிக் கூடுமோ என்னில், புல்யித்யாதி, காதலர் தொடுவுழியித்யாதி, உனக்கித் தமிழ்போகாதோ, என்றார்'' என்பது.

இங்கே தமிழனுடைய ப்ரச்நத்தின் அர்த்தம் என்னவென்றார்; நாயகனைப் பிரிந்து தூதுவிடுகிற ப்ரகரணத்தில் தலைவியினுடைய இடையாட்டத்தை விதேசஸ்தனான தலைவன் காணுமாறில்லையாகையால், என்னீர்மை கேட்டிரங்கி என்று சொல்லுவதே பொருத்தமுள்ளது என்பதாம். அதற்கு பட்டர் றிய

சமாதானத்தின் பொருள் என்னவென்றால்: முன்பு இருவரும் கூடியிருக்கச் செய்தே சிறிது பிரிந்த அளவில் தலைவியின் வைவர்ண்யத்தைத் தலைவன் கண்டிருக்கிறான் ஆகையால், அதையுத்தேசித்து என்னீர்மை கண்டிரங்கி என்னத்தட்டில்லை என்பது. அதற்காக இரண்டு தமிழ் மேற்கோள்களும் காட்டப்பட்டன. உனக்கித்தமிழ் போகாதோ? என்றது, உனக்கு இத்தமிழ்வசனங்களில் ப்ரஜ்ஞை செல்லாதோ என்றபடி. அதாவது இவைகளை நீ அறியாயோ? என்றார் என்க. இவ் வழக்கை, கம்ப நாட்டாழ்வார் மனுநீதியை அறிந்த அரசன் என்று சொல்லவேண்டுமிடத்து **''மனுநெறிபோன வேந்தன்''** என்று எடுத்தாளுவதனாலும் அறியலாம். அது நிற்க:

அங்கே தமிழ்ப்ரமாணங்களாகக் காட்டப்பட்ட இரண்டும் லக்ஷ்யங்களே; **வேதாந்த தீபிகையிற்** கண்டபடி லக்ஷணங்களல்ல. அவற்றுள் முதலாவதான புல்லியித்யாதி யென்பதை இங்கே விசாரிப்போம்.

**புல்லிக்கிடந்தேன்புடைபெயர்ந்தேன் அவ்வளவில்**
**அள்ளிக்கொள்வற்றேபசப்பு.**

என்பது திருக்குறளில் 1187ம் பாட்டாகும். நாயகனைப் பிரிந்தாளொரு நாயகி தன்னிடத்துண்டான வைவர்ண்யத்தால் வருந்த அப்பொழுதுதோழி, "நாயகன் பிரிந்திருந்தானாகிலும் மிகவும் சமீபத்திலே இருக்கிறான்; அங்ஙனாகவும் நீ வருந்துதலொழிந்தாயில்லை" என்று கூற, அதற்கு ப்ரத்யுத்தரமாகத் தலைவி கூறும் விஷயமே இக்குறட் கருத்தாயுள்ளது. 'முன் ஒரு காலத்தில் தலைவனும் யானுமாக ஸம்ச்லேஷித்திருந்த தசையில் அறியாமையாலே சிறிது அணைத்தகை நெகிழ்த்திருந்தேன்; அவ்வளவிலே பசப்பு அள்ளிக் கொள்வதுபோல வந்து செறிந்தது' என்று தலைவி தோழிக்குச் சொல்லுகிறாள். இங்கு, அறியாமையாலே சிறிது அணைத்தகை நெகிழ்ந்திருந்தேன் என்றது, என்னையறியாமலே போகாதிசயத்தால் அவசரமாக அணைத்தகை சிறிது நெகிழ்ந்தது என்றவாறு. அள்ளிக் கொள்வது போலச் செறிந்தது

என்றது, அள்ளிக் கொள்வதற்கு யோக்யமான பொருளைப் போல அவ்வளவு மிகுதியாக மீதூர்ந்தது என்றபடி. அப்போது அணைத்தகை நெகிழ்த்த மாத்திரத்திற்கே அவ்வளவானால் இப்பிரிவின்கண் என்னாகுமென்பது சொல்லவேண்டுமோ என்பது அவளுடைய கருத்து. இனி இவ்வாறன்றி, ''**அள்ளிக் கொண்டதே பயிர்ப்பு**'' என அரும்பத வ்யாக்யானங்களிற் காணப்படும் பாடம் பொருத்தமில்லாததாகும். பயிர்ப்பென்னும் சொல் வைவர்ண்யத்தை உணர்த்துவதாகவும் எங்கும் தெரியவில்லை.

அது நிற்க: இரண்டாவது மேற்கோளான காதலர்தொடுவுழியித்யாதி யென்பதை இனி ஆராய்வோம். அது **குறுந்தொகை** என்னும் சங்க நூலில் 399வதான ஒரு பாட்டின் குறிப்பாகும். அப்பாட்டு முழுவதும் வருமாறு:

**ஊருண்கேணிஉண்டுறைத்தொக்க**
**பாசியற்றேபசலைகாதலர்**
**தொடுவுழித்தொடுவுழிநீங்கி**
**விடுவுழிவிடுவுழிப்பரத்தலானே**

இது சங்கப் புலவருள் ஒருவரான பரணர் வாக்காக அறியப்படுகிறது. தலைமகன் வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லிய விஷயம் இதில்அடங்கியுள்ளது. தலைவியோடு களவுப்புணர்ச்சியால் கலந்த தலைமகன், சிலநிமித்தங்களை முன்னிட்டு அவளைக் கற்புமுறையில் விவாஹம் செய்து வரைந்துகொள்வதற்குக் காலந்தாழ்த்த நிலையிலே, தலைவியின் மேனியெங்கும் வைவர்ண்ய மடைந்தது கண்டு, 'நாயக ஸம்ச்லேஷம் நடையாடா நிற்கச் செய்தேயும் உனக்கு இப்பசலை பூப்பானென்' என்று தோழி கேட்க, தலைவி அதற்கு மறுமொழியாக இவ்வார்த்தையைச் சொல்லுகிறாள்; என்னுமிவ்வளவும் இப்பாட்டிற்கு அவதாரிகையாக அமையத்தக்கது.

நாயகர் தொட்ட தொட்ட இடங்களில் விலகி விட்ட விட்ட இடங்களில் வ்யாபித்தலால், வைவர்ண்யமானது ஓர் ஊருணியின் கண்ணே நீருண்ணும் துறையிற் கூடிய பாசியைப்போன்றது என்பது

அதன்பொருளாகும். அதாவது தொட்ட இடத்தில் மட்டும் சிறிது விலகி விட்ட விட்ட இடமெல்லாம் வ்யாபித்திருக்கும் பொய்கைப் பாசியே போல நாயகர் தொட்ட தொட்ட இடத்தில் நீங்கி விட்ட விட்ட இடமெல்லாம் தன் உடம்பிற் பசலையும் பரந்தது என்று தலைவி தன்ஆற்றாமையை மிகுத்துச் சொல்லியபடி, பசலையும் பாசியும் நிறத்தினாலன்றிச் செய்கையினாலும் ஒக்கும் என்பதாம். தலைவனோடு இடைவிடாது முயங்கியிருத்தற் பொருட்டுத் தலைவி வரைதலை வேண்டினாள் என்பது இதன் குறிப்பு. அதனால் தோழி தலைவனுக்கு அறிவித்து அவ்வரைதலைச் செய்விக்க வேண்டுமென்பது அவள்கருத்து. காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலான், பசலை ஊருண்கேணி உண்துறை தொக்க பாசி அற்று; என்று இப்பாட்டிற்கு அந்வயம் கண்டு கொள்வது.

இஃதிவ்வாறிருக்க அரும்பதவ்யாக்யானங்களில் ''காதலர்தொடுவுழி நீங்கி விடுவுழிவிடுவுழி பயத்தலானேன்'' என்று காணப்படும் பாடமும் அதற்கநுகுணமான உரையும் அநுபந்நங்களாகும். அன்றியும் **"சங்கத்தார்குறள்"** என்னும் பெயர் **இக்குறுந்தொகையைக்** குறித்து வழங்குவதன்றென்பதும் இங்கே குறிக்கத்தக்கது. அஞ்சிறைய மடநாராய் ப்ரவேசத்திலும் அடையவளைந்தான் அரும்பதத்தில் இந்த மேற்கோள்கள் இரண்டும் எடுத்தாளப்படுகின்றன. அவ்விடத்திலும் சுத்தபாடமில்லை.

ஆகவே இதுவரையிலும் சொல்லிய விஷயங்களால், நாயகஸந்நிதியிலேயும் தலைவிக்குப் பசப்புறுதல் முதலான துன்பங்கள் சம்பவிக்குமென்பதும், பட்டர் நிர்வாஹத்திலே கண்ட இரண்டு தமிழ்ப்ரமாணங்களும் **"என்னீர்மை கண்டிரங்கி"** என்று அருளிச் செய்த ஆழ்வாருடைய திருவுள்ளக் கருத்திற்கிணங்க அமைந்துள்ளனவென்பதும் ஒருவாறு விளக்கப்பட்டன. இதே அபிப்பிராயமுடைய மேற்கோள்கள் தமிழிலக்கியங்களிலே இன்னும்பல காணலாம். ஆனாலும் அவைகளை இங்கே எழுதுவதனால் மிகவும் விரியுமென்று இம்மட்டோடு நிறுத்தப்பட்டது.

# முனையதரையர்

சோழநாட்டில் திருக்கண்ணபுரத்திலே முன்னா

முனையதரையரென்பா ரொருவர் திருமால்பக்தி

சிறந்துவிளங்கினர். அவர் அக்காலத்தில் அரசாட்சி செய்த

ராஜாவினால் அபிமானிக்கப்பட்டு அவனுடைய தண்டத்தலைவர

உத்யோக பதவியில் அமர்ந்திருந்தார். இருபது நாடுகள் அவரு

அதிகார வரம்புக்கு உட்பட்டனவாயின. அவ்வவ் விடத்திற் செ

ஆணை செலுத்திச் சிற்றரசர்களிட்ட திறைப் பொருள்களைக் கொ

தம் வேந்தனிடம் சேர்ப்பிப்பதே அவருடைய கடமையாயிருந்தது

அக்காலத்து அவரைப் பெரிதும் பேணி யொழுகியவ

காதற்கணிகை யொருத்தி யுண்டு. அவளிடம் அவர் மிகுந்த அ

செலுத்தி வந்தார். ஆனாலும் அதனால் அவருக்குத் திருமாலின்

உள்ள பக்தி சிறிதும் குறைந்திலது. திருக்கண்ணபுரத்திலேயே அ

தமக்காக ஓர் அழகிய திருமாளிகை அமைத்துக் கொண்ட

அத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள சவரிராஜப் பெருமாளு

ஸகலவிதமான கைங்கர்யங்களும் செய்வதே தமக்குப் பெருவாழ்

மதித்தனர்.

அவ்வாறு நிகழ்ந்து வருகையில் நாட்டில் கொ

பஞ்சமுண்டாயிற்று. உயிர்கள்யாவும் பசிப்பிணியால் வரு

மெலிந்தன. முனையதரையர் மேற்கொண்ட கைங்கர்ய

முட்டுப்பாடுற்றது' அதனால் அவர் "எம்பெருமானும் அவ

அம்சபூதருமான இவ்வான்மகோடிகளும் வருந்துவதே" எ

மிகவும் தளர்ச்சியடைந்தார். அரசனுக்குத் தாம் செலுத்த வேண்